உழவுக்கும் தொழிலுக்கும்
    வந்தனை செய்வோம்—வீணில்
உண்டுகளித் திருப்போரை
    நிந்தனை செய்வோம்.

—பாரதியார்

# பொருளடக்கம்

## தமிழ் நாட்டு முதலமைச்சர்
## உயர்திரு. மீ. பக்தவத்சலம் அவர்தம்
# அணிந்துரை

நாட்டில் எல்லாவகை வளர்ச்சிகளுக்கும் அடிப்படையாக இருப்பது தொழில் வளர்ச்சி. தொழில் அபிவிருத்தியைக் கொண்டே ஒரு நாட்டின் முன்னேற்ற நிலையையும் செழிப்பையும் நிர்ணயிக்க முடியும்.

பாரதநாடு பழமையாக விவசாயத்தையே நம்பிவந்துள்ள நாடு. நமது வாழ்க்கையில் உணவுப் பிரச்சனைக்கு அதிக முக்கியத்துவம் இருந்த போதிலும், இன்றைய விஞ்ஞான யுகத்தில் முன்னேறிச் செல்ல விவசாயத்தை மட்டும் நம்பியிருந்தால் பயனில்லை. இதனால் நமது பொருளாதார அமைப்பை, விவசாய அடிப்படையிலிருந்து தொழிலியல் அடிப்படைக்கு மாற்ற, நாம் சுதந்திரம் பெற்றதிலிருந்து மாபெரும் முயற்சிகளை மேற்கொண்டு வருகிறோம்.

நாடு திட்டமிட்ட பொருளாதார அபிவிருத்தியைத் தனது லட்சியமாகக் கொண்டுள்ளது. திட்டம் என்பது நமது வளர்ச்சியைக் காட்டும் ஒரு கண்ணாடியே. ஆகையினால், மக்களுக்குத் திட்டங்களைப் பற்றி விளக்கிச்சொல்லி அவர்களது ஆதரவைப் பெறும் வகையில் அரசாங்கம் அவ்வப்போது திட்ட வெளியீடுகளை வெளியிட்டு வருகின்றது. இந்தப் பணியில் தனிப்பட்டவர்களும் ஈடுபடுவது வரவேற்கத் தக்கதாகும். நம்மைச் சுற்றி வளர்ச்சியும் முன்னேற்றமும் ஏற்பட்டு, மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்ந்து வருவதைக் காணும் எழுத்தாளர்கள் அவற்றை ஒதுக்கிவிடாமல், மக்களின் உழைப்பையும் நம்பிக்கையையும் அனைவருக்கும் எடுத்துக் காட்ட வேண்டும். இந்த

வகையில் 'தொழில் வளம்' என்ற நூல் பயனுள்ளதாக இருக்கும் என்று நம்புகின்றேன்.

நூலாசிரியர் திரு. அ. மு. பரமசிவானந்தம் அவர்கள் தமிழ்ப் பேராசிரியர்; பல இலக்கிய ஆராய்ச்சி நூல்களை எழுதிப் புகழ் பெற்றவர். அவர் நாட்டில் தொழிலியல், பொருளாதார அமைப்பு, முன்னேற்றம் முதலியவற்றைப் பற்றி நூல் எழுத முன்வந்தது பாராட்டத் தக்கதாகும். பல இடங்களில் ஆசிரியர் தெரிவித்துள்ள ஆட்சேபனைக்குரிய கருத்துக்களை அவரது சொந்தக் கருத்துக்களாகக் கொள்ள வேண்டும். மேலும், அபிவிருத்தித் திட்டங்களைப் பற்றிய குறிப்புக்களில் சமீப காலப் புள்ளி விவரங்கள் இடம் பெற்றிருந்தால் நூல் இன்னும் சிறப்பாக இருந்திருக்கும்.

இத்தகைய ஆக்கப் பணிகளில் நூலாசிரியர் தொடர்ந்து ஈடுபடும் வகையில், நூலுக்குத் தமிழ் மக்களின் பேராதரவு கிடைக்க எனது நல்வாழ்த்துக்கள்.

செயின் ஜார்ஜ் கோட்டை
சென்னை - 9
19—2—1964

அன்புடன்
எம். பக்தவச்சலம்

# 1. முன்னுரை

இருபதாம் நூற்றாண்டு உலக வரலாற்றிலேயே சிறந்த ஒரு காலமாகும். எத்தனையோ நூற்றாண்டுக் காலங்களி லெல்லாம் காணமுடியாத பலப்பல மாற்றங்களையும், முன் னேற்றங்களையும் இந்த நூற்றாண்டில் நம்மால் காணமுடி கிறது. நேற்றுப் புத்தம் புதியதாகப் போற்றப்பட்ட ஒன்று, இன்று மெத்தப் பழமையதாக மாறிவிடுகிறது. நாள் தோறும் புதுப்புது ஆராய்ச்சிகளும் விஞ்ஞான வளர்ச்சி களும் பெருகிக்கொண்டே செல்கின்றன. மனிதன் தன் வாழ்வின் தேவைக்காக அமைத்துக் கொள்ள விரும்பும் சாதனங்களின் வழி அவனே நினைத்துப் பார்க்க முடியாத் பல புதிய உண்மைகளைக் காண நேரிடுகிறது. அந்த உண்மைகளை அவன் நோக்கும்போது அவனுக்கே சில வேளைகளில் மயக்கம் உண்டாகும். ஆம்! அவனே அவற்றின் நுண்மைக் கூறுபாடுகளை நினைத்தே இருக்கமாட்டான். அவனுக்குத் துணை செய்ய, அவன் வாழ்வை வளமாக்க எத் தனையோ புதுப்புதுத் துணைகளை அச்சாதனைகளின் மூலம் அவன் பெருக்கிக் கொள்ளுகிறான்; பெருக்கிக் கொண்டே போகிறான். அந்த விஞ்ஞான வளர்ச்சிகளும், சாதனைகளும் உண்மைகளும் அவனை விண்ணையும் ஏவல் கொள்ள வைக் கின்றன. அந்தச் சாதனைகளின் வழி அவன் சந்திரனை எட்டிப் பிடிக்கிறான். தங்குதடையின்றி எங்கும் உலவு கின்றான். விண்ணையும் மண்ணையும் எண்ணிட்டுக் கணக்குட் படுத்துகிறான். இவ்வாறு வளரும் இந்த நூற்றாண்டின் இடைக்காலத்தில் அவனது அன்றாடத் தேவைகள் பெருகு கின்றன. அவற்றை நிறைவிக்கப் பலப்பல கைத்தொழில் களைச் செய்கிறான் அவன். நாட்டில்—உலகில்—தொழிற் சாலைகள் பெருகுகின்றன. இந்த நூற்றாண்டை—சிறப்பாக இந்த இடைக்காலத்தை—வரலாற்று அறிஞர்கள் தொழில்

யுகம் என்பார்கள். நாமும் அந்த எல்லையில் அமைந்தே வாழ்கிறோம்.

தொழில் யுகம் (Industrial Age) என்று போற்றப்பெறும் இன்று உலகின் எல்லாப்பாகங்களிலும் எண்ணற்ற தொழிற் கூடங்கள் உருவாகி வருகின்றன; வளர்கின்றன. இதுவரையில் அடிமையாக இருந்த பல நாடுகள் உரிமை பெற்றுவிட்டன. எங்கோ இரண்டொரு சிறுநாடுகள் தவிர்த்து, இன்று உலகம் முழுதுமே உரிமை பெற்றுவிட்டது எனலாம். எனவே உரிமை நாடுகள் தமக்குள் போட்டி இட்டுத் தத்தம் தொழில் வளத்தைப் பெருக்கிக் கொள்ளுகின்றன. ஒரு சில உரிமை பெற்ற நாடுகள், முன்னமே தொழில் வளம் பெற்ற நாடுகளின் நிலையிலும் மேம்பட்டுத் தத்தம் தொழில் வளத்தை எல்லையில்லா வகையில் பெருக்கிக் கொண்டே செல்லுவதைக் கண்கூடாகவே காண்கின்றோம். அத்தகைய நாடுகளுள் நம் இந்தியாவும் ஒன்றாகும்.

இந்திய நாடு விடுதலை பெற்றும் பதினைந்து ஆண்டுகள் கழிந்துவிட்டன. இந்தக் காலத்தில் இந்நாட்டில் பல்வேறு கைத்தொழில்கள் வளர்ந்துள்ளன. அந்நிய நாட்டு மூலதன உதவியாலும், தனியார் பொருளாலும் அரசாங்க உதவியாலும் பலப்பல தொழில்கள் நாட்டில் தோன்றி வளர்ந்து கொண்டே இருக்கின்றன. வடக்கே பக்ராநங்கல் தொடங்கித் தெற்கே பாபநாசம் வரையில் அமைக்கப் பெறும் பல்வேறு மின்சாரத் தோற்ற அமைப்புக்கள் நாட்டுத் தொழிலுக்கு உதவுகின்றன. இந்திய அரசாங்கத்தார் தொழில் வளர்க்கத்தக்க வழி துறைகளை ஆராய்ந்து, அதற்கென் அறிவறிந்த வெளிநாட்டு வல்லுனர்களைக் கொணர்ந்து பல்வேறு பாகங்களில் பலப்பல தொழில்களை வளர்க்கின்றனர். தனித் துறையிலும் பலப்பல செல்வர்கள் தம்சொந்த முதலீடுகளைக் கொண்டும், கூட்டுறவு வழியிலும் வெளிநாட்டார் பொருள் உதவியாலும் பல்வேறு தொழிற் கூடங்களை அமைத்து நாட்டுத் தொழில் வளத்தைப் பெருக்கு

கின்றார்கள். இவ்வாறு பல பெருந் தொழில்கள் வளர்ச்சி அடைவதோடு, எத்தனையோ சிறு தொழில்களும், குடிசைத் தொழில்களும் கூட அரசாங்கப் பொருள் உதவியாலும் தனியார் முயற்சியாலும் வளர்ந்து கொண்டே வருகின்றன. எனவே இத் தொழில் துறையில் இன்றைய நாட்டை அறிய வேண்டுவது அவசியமாகும்.

பரந்த பாரத நாட்டில் நம் தமிழ்நாடு ஒரு சிறு உறுப்பு நாடாக அமைந்துள்ளது. இதன் ஒவ்வொரு வளர்ச்சியும் பரந்த நாட்டின் பொது அமைப்பை ஒட்டியே செல்ல வேண்டியுள்ளது. இதன் ஏற்றமும் தாழ்வும் அவ்வரசாங்கப் பணிகளின் இடையிலேதான் அமைந்துள்ளன. எனவே இன்று தமிழ்நாடு எல்லாத் துறையிலும் முன்னேறுவதும் பின் தங்குவதும் இந்தியப் பேரரசின் செயல் வழியிலேயே அமைந்துள்ளன. அத்துடன் தமிழ்நாட்டு இயற்கை வளமும் ஓரளவு நாட்டு வளர்ச்சிக்குப் பயன்படுகிறது எனலாம். இந்த இயற்கையின் நெறிவழியில்தான் நெய்வேலிப் பழுப்பு நிலக்கரியும் சேலம் இரும்பும், பல மின்சார நிலையங்களும் நாட்டை வளம்படுத்துகின்றன; வளம்படுத்த வழிகோல நிற்கின்றன. தமிழ்நாட்டின் பழங்காலப் பண்பாட்டைக் காட்டும் இலக்கிய இலக்கணங்கள் இந்நாட்டு மக்களின் உள்ளங்களால் உருவாகும் அக உலக வாழ்வை வளர்ப்பன போன்று, இயற்கை வளங்கள் புற உலக வாழ்வை வளர்க்க உதவுகின்றன. அவற்றுடன் தமிழர்கள் உள உரமும் உடல் உழைப்பும் கொள்ளத் தவறுதவர்கள். எங்கெங்கு உழைப்பும் உறுதியும் உண்டோ அங்கெல்லாம் தமிழரைக் காணலாம் என மேலைநாட்டுச் சமயப் போதகர் அறிஞர் கால்டுவெல் கூறியவாறு,[1] தமிழ் மக்கள் உழைப்புக்கு அஞ்சாதவர்கள். அவர்கள் பெற்ற சிறு வளத்தைக் கொண்டே தம் கைவண்ணத் திறனால் தம் நாட்டைப் பொன்னாடாக்கு பவர்கள். இந்த நிலையில் அவர்தம் கை உழைப்புத் தமிழ்

[1] (Introduction. P. 7)

நாட்டுத் தொழிலை எவ்வெவ்வாறு வளம்படுத்தி உள்ளது என்பதைக் காணல் சாலப் பொருந்துவதாகும்.

தமிழ்நாடு புதிதாகத் தொழில்வளம் பெற்றதன்று. தமிழ்நாட்டு வரலாற்றுப் பழங்காலத்திலேயே நாட்டில் எத்தனை எத்தனையோ தொழில்கள் வளர்ந்துள்ளன எனக் காண்கின்றோம். இன்று காண்கின்ற அளவுக்குப் அத்துணைப் பெரிய இயந்திர சாதனங்களோடு கூடிய கைத்தொழில்கள் அன்று நாட்டில் இல்லை என்றாலும், பிறநாட்டு மக்கள் இங்கே வந்து வாணிப வளனைப் பெருக்கிச் சென்ற அளவிற்குத் தமிழ்நாட்டில் கைத்தொழிலும் வாணிபமும் வளர்ந்திருந்தன என அறிய முடிகிறது. கிறித்து பிறப்பதற்கு நெடுநாளைக்கு முன்பே கிழக்கே சீனநாடு தொடங்கி மேற்கே கிரேக்க ரோம நாடுகள் வரையில் வாழ்ந்த மக்கள் வரிசை வரிசையாக இங்கே வந்து வாணிபம் செய்தார்கள் என்று வரலாறு காட்டுகிறது. எனவே அந்த நாளிலேயே-இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே—தமிழ்நாட்டில் தொழில்கள் நிறைந்திருந்தன. இயற்கை வளமும், அவ்வளம்படு பொருள்கள் கொண்டு செய்யும் தொழில்வளமும் நாட்டின் செல்வங்களாக இருந்தன. மேலை மலையில் வாழும் யானைகளின் தந்தம் கொண்டு வளர்ந்த கைத்தொழிலும், பட்டு, பருத்தி, மயிர் முதலியவை கொண்டு வளர்த்த கைத்தொழிலும், உயர்ந்த கட்டடங்களை அமைத்த தொழிலும், கப்பல் கட்டும் தொழிலும், போருக்கும் அமைதியான வாழ்வுக்கும் தேவையான ஆயிரமாயிரம் பொருள்களைச் செய்த கைத்தொழில்களும், கலை வளர்க்கப் பயன் பட்ட இசைக் கருவிகள் போன்ற பலவற்றைச் செய்த தொழில்களும் இன்னும் பலவும் தமிழ்நாட்டின் அன்றைய தொழில் வளத்தைக் காட்டுகின்றன. சங்ககால இலக்கியங்களையும் பிற்கால இலக்கியங்களையும் காணும்போது தமிழ்நாடு மிகப் பழங்காலந் தொட்டே தொழில்வளம் பெற்று விளங்கிற்று என்பது நன்கு விளங்கும். பத்துப்பாட்டுப் போன்ற சங்க இலக்கியங்களிலும் சிலப்பதிகாரம் போன்ற

காவியங்களிலும் காணும் நகர அமைப்புக்களும், மதில்களில் பொருத்தப் பெற்றிருக்கும் இயந்திரக் கருவிகளும், ஆடை அணிகளும், அழகார் மாளிகைகளும் நமக்கு அக்காலத்தில் மக்கள் மேற்கொண்ட தொழிற் செல்வ நலனை விளக்குகின்றனவே! பிற்காலத்தில் வந்த பல இலக்கியங்களும் இவ்வுண்மையை நமக்கு விளக்கத் தவறவில்லை. 'ஆலையினில் வெம்புகைபோய் முகில்தோயும் ஆரூர்' என்று சம்பந்தர் திருவாரூரில் வானளாவிய புகைபோக்கிகளையுடைய பல ஆலைகள் இருந்தன எனவும், அவற்றில் எழுந்த புகை வான முகட்டைத் தொட்டது எனவும் காட்டுகின்றார். எனவே இன்று காணும் விண்முட்டும் புகை போக்கிகளைக் கொண்ட ஆலைகளைப் போன்று ஏழாம் நூற்றாண்டிலேயே தமிழ்நாடு பல ஆலைகளைக் கொண்டு விளங்கியது என அறிய முடிகின்றதன்றோ! 'துணிதருசோலை ஆலைத் தொழில்மேவ' என மற்றொரு வகையில் சோலையில் ஆலைத் தொழில் நடைபெற்றது என அவரே காட்டுகிறார். கடற்கரைப் பட்டினங்கள் பலவற்றிலும் 'மலையின் உயர் மரக்கலங்கள்' உலவிய சிறப்பையும் அவை ஏற்றிக் கொண்டுவரும் பல பொருள்களின் சிறப்பையும் இடைக்காலத்தில் பாராட்டுகின்றார்கள். மற்றும் தமிழ் நாட்டில் கடல்மேற் கலம் செலுத்திப் பலர் வாணிபம் செய்திருக்கிறார்கள் என்ற குறிப்பை நாம் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தொல்காப்பியத்திலிருந்தும் பெறுகிறோம். இவற்றாலெல்லாம் தமிழ்நாட்டில் தொழில் வளமும் வாணிப வளமும் மிகப் பழங்காலத்திலிருந்தே உயர்ந்த நிலையில் இருந்தன என அறிய முடிகின்றதன்றோ! இன்று மீண்டும் தமிழகத்தில் தொழில்கள் வளருகின்றன. அவற்றின் வகைகளையெல்லாம் காண வேண்டாவோ!

உரிமை பெற்ற இந்திய நாட்டில் பல திட்டங்கள் தீட்டப் பெறுகின்றன. மக்கள் வாழ்வும் வளமும் பெற்று முன்னேற உள்ள வழிதுறைகள் அத்தனையும் ஆராயப் பெறுகின்றன. அவற்றுள் ஒன்றே தொழில் வளர்ச்சிக்கான ஆதிக்க நெறி. நாட்டில் தொழில்வளர எங்கெங்கு

வாய்ப்பும் வசதியும் உண்டோ அங்கெல்லாம் அவ்வத் தொழில்களைத் தொடங்க இருக்கும் சாத்தியக் கூறுகளை ஆராயப் பல்வேறு குழுக்களை அமைக்கின்றனர். பல வெளி நாட்டு அறிஞர்களும் நிபுணர்களும் ஆண்டுதோறும் வந்த வண்ணமே இருக்கின்றனர். ஒவ்வொரு தொழில் துறையிலும் வல்ல பலநாட்டு அறிஞர்கள் வந்து வந்து நாட்டின் எல்லாப் பாகங்களிலும் சுற்றி ஆராய்ந்து பல சாத்தியக் கூறுகளை எடுத்துக் காட்டுகின்றனர். அப்படியே பல்வெளி நாட்டு அரசாங்கங்கள் நாட்டில் பல தொழில்களும் வளரத் தக்க வழியில் கோடி கோடியாகப் பணத்தைக் கடனாகவும் மானியமாகவும் மாற்றாகவும் கொடுத்து உதவுகின்றன. அப்படியே மத்திய, மாநில அரசாங்கங்களும் தத்தமது வரித் துறைகளை விரிவாக்கிப் புதுப்புது வரிகள் மூலம் பொருள்களைப் பெருக்கி அவற்றை நாட்டின் தொழில் வளம் பெருகவும் பிற துறைகள் முன்னேறவும் பயன்படுத்துகின்றன. அரசாங்கங்களே பல பெருந்தொழிற்சாலைகளை அமைத்துத் தொழில் வளர நேரடி முயற்சியில் ஈடுபடுகின்றன; பெருஞ் செல்வர்பலர் தனியாக வளர்க்க நினைக்கும் தொழில்களுக்குத்தேவையான நிதி உதவியை நல்குவதுடன் வெளிநாடுகளிலிருந்து தேவையான இயந்திர சாதனங்களையும் பிறவற்றையும் பெற உதவுகின்றன. நாட்டின் பல்வேறு நீர் ஓட்டங்களையும் அவற்றின் பெரு நெறிகளையும் ஆராய்ந்து அணைகட்டியும் கீழ்வீழ்த்தியும் மின்சார உற்பத்தியைப் பெருக்கி, அம்மின்சாரத்தைத் தொழிற்கூடங்களுக்கு அரசாங்கம் அனுப்ப ஏற்பாடு செய்கின்றது. அப்படியே நாடு முழுவதும் பற்பல தொழிற் பேட்டைகளை ஏற்படுத்திப் பல தொழில்கள் வளர ஆக்கப் பணிக்கு வழி கோலுகின்றது. பெருந்தொழில்கள் மட்டுமன்றி, குடிசைத் தொழில்போன்ற சிறு தொழில்களையும் இரண்டற்கும் இடைப்பட்ட நடுத்தரத் தொழில்களையும் வளர்க்கவும் பலவகையில் அரசாங்கம் உதவி வருகின்றது. பக்ராநங்கல் மின்சாரம் முதல் பாட்டியர் அப்பளம் செய்தல்வரை எத்தனையோ வகையில்

தொழில் வளர்க்கப் பெறுகின்றது. இத்துறையில் பரந்த இந்திய நாட்டு முயற்சியில் தமிழ்நாட்டின் பங்கு பெரிது.

தமிழ்நாட்டில் தனியாரும் அரசாங்கமும் உரிமை பெறு முன்பும் பெற்றபின்பும் பலவகையில் தொழில்களை வளர்த்து வருவதைக் காண்கின்றோம். சென்னை, கோவை, மதுரை முதலிய பெருநகரங்கள் இத்தகைய தொழில் வளத்தால் மிக விரைவில் வளர்ந்து உயர்ந்து வருவதைக் காண கின்றோம். அப்படியே சிறு சிறு நகரங்களிலும்—ஏன்? கிராமங்களிலும்கூடப் பல புதுப்புதுத் தொழில்கள் வளர்க்கப் பெறுகின்றன. அவற்றைத் திறம்பட நடத்தவும் நன்கு தொழிற்படுத்தவும் தக்க பொறியாளரும் வல்லுநர் களும் இல்லாத குறையைப் போக்க நாட்டில் பொறியியற் கல்லூரிகளும் பல்கலைத் தொழிற் பள்ளிகளும் நாள்தோறும் வளர்ந்து வருவதைக் காண்கின்றோம். எண்ணற்ற தொழிற் பள்ளிகளிலும் பொறியியற் கல்லூரிகளிலும் பயிலும் மாணவர் தற்போது வேலை தேடித் திரியும் தொல்லையின்றி தேர்வு முடித்ததுமே பல்வேறு தொழில் துறைகளில் அமர்த்தப் பெறுகின்றனர். அரசாங்கப் பொருளுதவியும் அவ்வத் துறையில் வல்லவர் மேற்பார்வையும் பொருந்த நாட்டில் வளரும் தொழில்கள் அளவில. அவற்றை யெல்லாம் அளவிட்டு எழுத முடியாது.

நாட்டின் பல பகுதிகளிலும் சுற்றிவந்த எனக்கு அங்கங் குள்ள தொழில்வள மாறுபாட்டைக் காண, இந்நூலை எழுத வேண்டும் என்ற எண்ணம் உண்டாயிற்று. எனினும் தமிழ் இலக்கியத்தோடும் வரலாற்றோடும் பண்பாட்டுடனும் என் உறவை அமைத்துக் கொண்டு அமைதியாக ஒரு மூலையில் முடங்கிக் கிடக்கும் என்னால் இப்பணியைச் செய்யமுடியுமா என்ற எண்ணமும் என் உள்ளத்தில் எழுந்தது. அதே வேளையில் தமிழ் இலக்கியம் பாடிய பழங் காலப் புலவர்கள் இலக்கியத்துக்கிடையிடையே அக்காலத் தமிழ்நாட்டின் தொழில் வளத்தையும் காட்டிக் கொண்டே சென்ற சிறப்பும்

என் கண்முன் காட்சியளித்தது. மற்றும் பொருளியல் துறையில் வல்ல என் நண்பர் சிலர் இம்முயற்சி நாட்டுக்குத் தேவையானதென்றும் உடனடியாகச் செய்ய வேண்டிய ஒன்றும் என்றும் தத்தம்மாலான உதவியை அவ்வப்போது செய்வதாகவும் வாக்களித்தனர். அவர்தம் முயற்சி எனக்கு முதலில் ஊக்கம் அளித்தது. பின்னர் அரசாங்கச் சார்பில் தொழில்துறை நெறியாளரும் மின்சாரத் தலைமைப் பொறியாளரும் என் வேண்டுகோளுக்கு இணங்கி அவரவர் துறைகள் வளர்ச்சியுற்ற நெறிகளைப் பற்றிய குறிப்புக்களை அவ்வப்போது உதவி வந்தனர். சில தொழிற்சாலைகளை நான் நேரில் சென்று பார்த்தபோது அவற்றின் பொறுப்பாளர்கள் பரிவுகாட்டி எனக்கு வேண்டிய உதவிகள் அனைத்தையும் செய்தார்கள். சிலர் புகைப்படங்களையும் பிற குறிப்புக்களையும் கொடுத்து உதவினார்கள். இன்னும் அவர்தம் தொழில்துறை பற்றித் தேவையான எல்லாவற்றையும் கொடுப்பதாகக் கூறினார்கள். அத்தகைய நல்லன்பர்தம் முயற்சி அனைத்தும் சேர்ந்தே இந்நூலை உருவாக்கின என்று சொல்ல மகிழ்கின்றேன்.

இந்த நூலை எழுதத் தொடங்க நினைத்தபோது இன்றைக்கு மூன்றாண்டுகளுக்கு முன்—1961-இன் தொடக்கத்தில்—இதை இரண்டு பிரிவுகளாக அமைக்க வேண்டுமென எண்ணினேன். முதற் பகுதியில் தமிழ்நாட்டில் அன்று வாழ்ந்த தொழில் வளத்தையும், இன்றுள்ள வளநிலையையும், தொழிலுக்கு அடிப்படையான மூலப் பொருள், மின்சாரம், முதலீடு, உற்பத்தித்திறன், ஆட்சிநிலை, வாணிபம் முதலியவற்றையும், அவற்றோடு தொழில் வளம்பெற உதவும் பிற பற்றியும் விளக்க நினைத்தேன். இரண்டாவது பகுதியில் இன்று அரசாங்கமும் தனியாரும் பல்வேறு வகையில் பெருக்கியுள்ள தொழில் அமைப்புக்களைப்பற்றித் தொகுத்து வெளியிடக் கருதினேன். எல்லாவற்றையும் எடுத்துக் காட்ட இயலாது என்றாலும் துறைக்கு ஒன்றாக—வகைக்கு ஒன்றாக—ஒரு நூற்பாலை—ஒரு நெசவாலை—ஒரு தொழிற்

பேட்டை—ஓர் உருக்கு ஆலை—என்ற வகையிலும் தனிப்பட்ட நெய்வேலி, பெரம்பூர் ரெயில் பெட்டித் தொழிற்சாலை என்றவற்றைக் காட்டும் நிலையிலும் ஒரு சிலவற்றைக் காட்டினால் நாட்டின் இன்றைய தொழில் வளம்பற்றி ஓரளவு உணர்த்த முடியும் என நினைத்தேன். வாய்ப்பு நேருமேல் நான் இரண்டாம் பகுதியாகச் சேர்க்க நினைத்தவற்றைத் தனிநூலாகக் கொண்டுவரலாம். அப்பணியைக் காலத்தின் கையில் ஒப்படைத்து மேலே செல்லுகிறேன்.

இந்நூலில் எனது கட்டுரைகளைத் தவிர்த்து வேறு சிலருடைய கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன. மேலை நாடுகளுக்குச் சென்று தொழிற் கல்வியைப்பற்றி ஆய்ந்து அறிந்து பட்டம்பெற்றுவந்த என் மருகர் திரு.சோ. வேதபுரி B.Sc., B.E., M.Sc. (Birmingham) எழுதிய உற்பத்தித்திறன், மேலாட்சி பற்றிய இரண்டு கட்டுரைகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. அரசாங்க வெளியீடாகிய 'பத்தாண்டுச் சாதனைகள்' என்ற நூலிலிருந்து சில பகுதிகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. பிறவற்றிலுள்ள புள்ளி விவரங்களும், மின்சார நிலையங்கள் பற்றிய கருத்து, குறிப்பு முதலியனவும் அவ்வத்துறையில் வல்ல நெறியாளரும் பிறரும் அளித்தவையாகும். அனைவருக்கும் என் நன்றி உரித்து.

1961-இல் எழுதப் பெற்ற சில கட்டுரைகளில் உள்ள குறிப்புக்களை விடச் சில தொழில் துறைகள் இன்று மிகவும் வளர்ச்சி அடைந்துள்ளன. இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டமுடிவிலேயே இந்நூலைக் கொண்டு வரவேண்டுமென்று பெரு முயற்சி செய்தேன். எனினும் காலமும் சூழலும் பிற நிலைகளும் இடந்தரவில்லை. இன்றுதான் என் எண்ணம் நிறைவேறுகின்றது.

இருபதாம் நூற்றாண்டில் ஒரு நாட்டின் செல்வ நிலையும் நாகரிகமும் பிற உயர்வுகளும் அந்நாட்டுத் தொழில் அடிப்படையிலேயே கணக்கிடப் பெறுகின்றன. எந்த நாடு

தொழிலிலும் வாணிபத்திலும் அவற்றோடு இணைந்த பிற நிலைகளிலும் உயர்ந்துள்ளதோ அந்த நாடே இன்று உலகில் சிறந்த நாடாக, வல்லரசு நாடாகப் போற்றப்படுகின்றது. அமெரிக்காவும், ரஷ்யாவும் அத்துறைகளில் போட்டியிட்டு வளர்கின்றன. மிகச்சிறு நாடுகளும் இன்று தொழில் துறையில் வளருகின்றன. எனவே நாமும் நம் தொழில் வளத்தைப் பெருக்க வேண்டிய தேவை உண்டாயிற்று. தொழில் சமுதாயத்தின் உயிர் நாடியாகிவிட்டது. எனவே நாடு தொழில் மயமாகின்றது. இந்த வளர்ச்சியை—குறுகிய காலத்தில் அடைந்த பெருமாறுதலை — உலகத்தலைவர் பலரும் வியக்கிறார்கள். பல அறிஞர்கள் நூல்கள் எழுதியுள்ளார்கள். இத்தகைய மக்கள் பெரும் பணியில்—அறிஞர் தம் ஆய்வுப்பணியில்—என்னுடைய இப்பணி ஒரு சிறு திவலை. எனவே தமிழ் நாட்டு அறிஞர்கள் இந்நூலை ஏற்று ஆதரிக்க வேண்டுமெனக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இந்நூலை வெளியிடுங் காலத்து எனக்கு உதவிசெய்த எல்லா அறிஞர்களுக்கும் என் தலை தாழ்ந்த நன்றியை நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன். தமிழ் நாட்டு அரசாங்கத்துக்கும் அதன் தொழில் துறை, மின்னியல் துறைத் தலைவர்களுக்கும் மற்றவர்களுக்கும் என் நன்றி. இந்நூலை நன்கு நோக்கி, அணிந்துரை தந்த முதலமைச்சர் திரு. **மீ. பக்தவத்சலம்** அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளக் கடப்பாடுடையேன்.

தமிழ்நாடு மேலும் மேலும் தொழில் வளம் பெற்றுப் பிற துறைகளில் - பண்பாடு - நாகரிகம் - கலை முதலிய பிறதுறைகளில் – வழிகாட்டியாக உள்ளதுபோன்று இந்திய நாட்டுக்கு வழிகாட்டியாக - உலகத்துக்கு எடுத்துக் காட்டாக விளங்க வேண்டுமென்பது என் ஆசை. என் ஆசையை வருங்காலத் தமிழ்ச் சமுதாயம் நிறைவேற்றும் என்ற துணிவுடனே இந்நூலைத் தமிழன்னைக்குப் பாதகாணிக்கையாகப் படைக்கிறேன். வாழ்க தமிழ் நாடு ! வளர்க அதன் தொழில் வளம்!

தமிழ்க்கலை இல்லம்<br>சென்னை 24-2-64

**அ. மு. பரமசிவானந்தம்**

## 2 வாழ்வின் தேவை

"எனை நான் என்ப தறியேன், பகல் இரவாவதும் அறியேன்" என்று மாணிக்கவாசகர் தம்மை மறந்த நிலையில் ஆண்டவனைப் பாடும்போது கசிந்து உருகு கின்றார். அந்த முதற் காலத்தில் வாழ்ந்த மனிதன் நிலையும் இத்தகையதே. தன்னை இன்னானென அறிந்து கொள்ள முடியாது-அறிந்து கொள்ள நினையாது-தான் வளர்ந்து வந்த உயிரினத்தினின்று வேறுபட்ட போதிலும் அதை எண்ணிப் பார்க்காது விலங்கொடு விலங்காக வாழ்ந்த அந்த ஆதி மனிதன் எதையும் எண்ணிப் பார்க்கவில்லை; பார்க்க நினைத்தால் அவனால் அது முடியாத ஒன்று. அவனுக்கு இரவு பகல் என்ற வேறுபாடு கிடையாது, 'ஏதோ வெளிச்சம் இருக்கிறது; எதிரில் உள்ள பொருள் தெரிகின்றது' என்ற நினைப்பில் பகலில் ஓடி ஆடி உணவு தேடியும், இருட்டில் ஒன்றும் செய்ய முடியாத காரணத்தால் இரவில் ஓரிடத்தே தங்கியும் அவன் வாழ்ந்தான். 'காட்டிலும் நாட்டிலும்

எத்தனையோ விலங்குகள் அந்த நிலையில் இன்றும் வாழ்வதைக் காண்கின்றோம். அந்த முதல் மனிதன் அப்படியே இரவுக்கும் பகலுக்கும் வேறுபாடு காணாது 'யான், எனது' என்ற பற்றோ உரிமையோ காணாது எப்படியோ விலங்கொடு விலங்காக வாழ்ந்து வந்தான். எனவே அவனுக்கு 'வேண்டியது எது? வேண்டாதது எது?' என்பன புரியாதன. ஏதோ விலங்குகளைப் போன்று வயிற்றுப் பசிக்குப் பழத்தையோ காயையோ அன்றி மாமிசத்தையோ உண்டு 'அதுவே முடிவு' என்ற உணர்வில் அவன் வாழ்ந்து வந்தான். அவன் தேவை அத்துடன் நிறைவேறிற்று. எனவே அந்நிலையில் வீடும் வாயிலும் நாடும் நகரும் உடையும் அணியும் வாகனங்களும் விண்வெளிப் பயணமும் பிற இன்றைய மனிதனுடைய தேவைகளும் அவனுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை யல்லவா! இப்படித் தேவையே இன்னதென அறியாத மனிதநிலையி லிருந்துதான் இந்த இருபதாம் நூற்றுண்டில் எல்லாத் தேவைகளையும் பெருக்கிக்கொண்டு, பெறமுடியாத நிலையில் அல்லும் பகலும் ஓய்வின்றி உழைக்கும் 'நாகரிக மனிதன்' உருவானுன். ஆனால் அவனுக்கும் இவனுக்கும் உள்ள இடைவெளி அதிகம்-எல்லையில்லாதது. இந்த நீண்ட கால எல்லையில் அவன் தேவைகளும் அத்தேவைகளுக் கேற்ற செய்பொருள்களும் அச்செய்பொருள்களை ஆக்கும் தொழில்வகைகளும் எவ்வெவ்வாறு பல்கிப் பெருகின என்பதை எண்ணிப் பார்த்தல் இன்றியமையாததாகும். அவ்வாறு ஆராயும்போது 'தேவை' மனிதனை எங்கெந்த வகையில் ஈர்த்துச் செல்லுகிறது என்பதையும் அறிய முடிகின்றதல்லவா!

முதற்கால மனிதனுக்கு ஆடை கிடையாது. அவனது முதல் தேவை பசி நீக்கமே. கண்டு, கேட்டு,

உண்டு, உயிர்த்து, உற்று அறியும் ஐம்புலன்களுக்கும் தனித்தனியே பசி உணர்வும், பருகவேண்டுமென்ற அவாவும் உண்டு என்பதை அறிவோம். ஆதி மனித னுக்கு அப்புலன்கள் ஐந்தும் இருந்தாலும் அவை திறம்படத் தொழிலாற்றாத காரணத்தாலோ ஒன்றுக் கொன்று தொடர்பு கொள்ளாத காரணத்தாலோ, எல்லாப் புலநுகர்வுகளுக்கும் அவன் போதிய முதலிடம் கொடுக்கவில்லை. ஓரறிவுயிராகிய புல் தொடங்கி எல்லா உயிரினமும் இனப்பெருக்கம் செய்கின்றன. ஆகவே அவை அனைத்தும் உணர்வற்றவை என்றோ ஆண் பெண் உணர்ச்சி அற்றவை யென்றோ யார் சொல்ல முடியும்? ஓரறிவுயிராகிய தாவர இனத்திலே அந்த உணர்வைப் பெருக்கும் வகையிலேயே வண்ண மலர்களும் பல்வேறு மகரந்தப் பொடிகளும் தோன்றிச் சிறக்கின்றன என்று அத்துறையில் வல்ல விஞ்ஞானி கள் அழகுற எடுத்துக்காட்டியுள்ளனரே! அப்படியே அறிவு வளரவளர ஆண் பெண் சேர்க்கைக்குரிய வாய்ப்புக்களை இயற்கையோ அன்றி இறையோ வாரி வாரி அளிப்பதைக் காண்கின்றோம். வீட்டில் வளரும் சிட்டுக்குருவியாகிய வீட்டுக்குருவி இனத்தில் ஆண் பெண் கலந்து மகிழ்ந்து முட்டையிட்டு இனப்பெருக்கம் செய்வதைக் காண்கின்றோம் நாம். ஆணுக்கும் பெண் ணுக்கும் தோற்றத்திலேயே வேறுபாடுகளை அமைத்து ஒன்றற்கிருக்கும் திறன், செயல்நிலை, வண்ணம் முதலியவற்றை மற்றொன்றிற்கு இல்லையாகச் செய்து ஒன்றை ஒன்று விரும்பும் வண்ணம் இயற்கையிலேயே அவற்றை அமைத்திருக்கும் திறன் போற்றக்கூடிய தன்றோ!

மயில்களில் ஆண்கள் தோகையொடு பொலி வதும், களிறுகள் தந்தம் பெற்றுச் சிறப்பதும், சேவல்

கொண்டை கொண்டு நடப்பதும் இத்தகைய ஈர்ப்புச் சக்திக்காகவே என்பர் ஆய்வாளர். எனவே ஆண் பெண் கலந்து இனப் பெருக்கம் செய்யும் வாழ்வு உயிரினத்தின் அடிப்படை வாழ்வாகவே அமைந்துள்ளமையைக் காண்கின்றோம். எனவே விலங்கினத்திலிருந்து பிரிந்த மனிதனுக்கு இவ் வுணர்வு இயற்கையிலேயே அமைந்துவிட்டது என்பதில் வியப்பில்லையல்லவா! எனவே அதை வாழ்வின் தேவை என்றது வாழ்வு அந்த இனப் பெருக்கத்திலிருந்து பிரிக்கமுடியாத ஒன்று என்று முடிவிலே நாம் மேலே செல்லலாம்.

வயிற்றுப் பசி எல்லோருக்கும் உண்டு. அதுதான் முதல் மனிதனுக்கும் இன்றைய இருபதாம் நூற்றாண்டின் மனிதனுக்கும் பொதுவாக உள்ள தேவையாக அமைகின்றது. ஆதி மனிதன் அந்த வயிற்றுப் பசியை விலங்குகளைப்போலத் தணித்துக்கொண் டிருந்திருப்பான். ஏதோ கண்டகண்ட காய்கனி கிழங்கு முதலியவற்றையும் விலங்குகளின் மாமிசத்தையும் அப்படியே உண்டு உண்டு அவன் கழித்த ஆண்டுகள் அளவிறந்தன. அந்த உணவுப் பொருள்கள் தேவையான அளவு கிடைக்காத காலத்திலேயே அவன் எண்ணம் உணவு தேடவேண்டும் என்று தூண்டியிருக்கும். அப்பொழுதே அவனுடைய முதற்றொழில் தொடங்கியிருக்க வேண்டும். 'தொழில் உலகம்' என்று இந்த நூற்றாண்டில் நாம் நம் இருபதாம் நூற்றாண்டு உலகத்தையும் 'தொழில் யுகம்' என்று நம் காலத்தையும் போற்றுகின்றோம். அதற்கேற்றபடி இன்று உலகெங்கணும் எண்ணற்ற தொழில்கள் உண்டாகின்றன. அவை அனைத்தும் மனித வாழ்வின் தேவைக்கே பயன்படுகின்றன. சாதாரண உணவினை முன்னிறுத்தி இவ்வுண்மையை வள்ளுவர் விளக்கிவிட்டார். மாமிச

உணவினைக் கடையிலே விற்பனைக்கு வைப்பவன் ஏன் அப்படிச் செய்கிறான்? உயிரைக் கொன்று கடைகளில் விற்பது பாவ மல்லவா? இவற்றை வினவாக எழுப்பி அவற்றிற்கு விடையும் காண்கின்றார் வள்ளுவர். உண்மையில் அந்தப் பாவத்துக்கு உரியவர் அதை வாங்கி உண்பவரேயன்றிக் கொன்றவ ரல்லர் என்பது அவர் துணிவாக இருக்கலாம் என அவர் குறள் நமக்கு உணர்த்துகின்ற தன்றோ!

'தினற்பொருட்டாற் கொல்லா துலகெனில் யாரும்
விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல்' (குறள் : 256)

என்று திருவள்ளுவர் கூறுவதன் கருத்தென்ன? மனிதன் தான் தின்பதற்காகத் தேவையான உயிர்களைக் கொல்லத் தொடங்கவே அவற்றைக் கொன்று விற்றுப் பொருள் பெருக்க வணிகர் தலைப்பட்டனர் என்பர். எனவே மனிதன் தேவைதான் தொழில் உலகிலும் வாணிப உலகிலும் முக்கிய இடம் பெறுகின்றது. இதையே இன்றையப் பொருளியல் அறிஞர்கள் (Eeonomist) தேவையும் பெறுதலும் (Demand & Supply) என்று கூறுகின்றனர். இந்த இலக்கண முறைகளும் கணக்குகளும் ஆதி மனிதன் அறியாதன. இருபதாம் நூற்றாண்டின் மனிதன் வாழ்வின் தேவையை எல்லையற்றுப் பெருக்கிக்கொண்டு அதற்கேற்பத் தொழில் துறைகளையும் பிறவற்றையும் பெருக்கிக்கொண்டே அதே வேளையில் ஒருவரை ஒருவர்-ஓரினத்தை ஓரினம்-ஒரு நாட்டை ஒரு நாடு வீழ்த்தி அழிக்கும் வகையிலே-முன்னேறிக்கொண்டே இருக்கிறான். ஆனால் ஆதி மனிதனுக்கு இந்தத் தேவை, குறித்த அளவில் நின்றுவிட்டது. பின்னால் மனிதன் தன் தேவையையும் அதன் வழி ஆசையையும் பெருக்கிக்கொண்டதைப் பார்த்துச் சமயத் தலைவராகிய தாயுமான அடிகள்,

'ஆசைக்கோர் அளவில்லை அகிலமெல்லாம் கட்டி
ஆளினும் கடல்மீதிலே
ஆணைசெலவே நினைவர் அளகேசன் நிகராக
அம்பொன்மிக வைத்தபேரும்
நேசித்து இரசவாத வித்தைக் கலைந்திடுவர்
நெடுநா ளிருந்தபேரும்
நிலையாகவே இனும் காயகற்பந் தேடி
நெஞ்சுபுண் ணுவர் எல்லாம்
யோசிக்கும் வேளையில் பசிதீர உண்பதும்
உறங்குவது மாக முடியும்'

என்று காட்டி மனித வாழ்வின் அடிப்படைத் தேவையினையும் அதனைக்கொண்டே பிற தேவைகளை வளர்த்துக்கொண்டு மனிதன் எங்கெங்கோ ஓடுவதையும் காட்டி நகைக்கின்றார். இன்றைய உலகம் அவரது பாட்டுக்குச் சான்றாகவன்றோ எங்கெங்கோ சென்று கொண்டிருக்கிறது! அதே வேளையில் அடிப்படைத் தேவையாகிய 'பசிதீர உண்ணும்' நிலை மக்கள் எல்லோருக்கும்-உயிரினம் அனைத்துக்கும்—நிறைவேறவில்லை என்பதையும் காண்கின்றோம். மக்கள் வாழ்வில் ஏற்றத் தாழ்வே இவற்றை வளர்க்கின்றது. எனவே 'சமதர்மச் சமுதாயமே' உலகுக்குத் தேவையென்று அரசியல் அறிந்தவரும் பொருளியல் நிபுணர்களும் கூக்குரலிடுகின்றனர். ஆனால் அவர் தம் பேச்சுக்கள் அனைத்தும்,

'வணிகமும் பொருள் நூலும் பிதற்றுவார்
வாழும் நாட்டில் பொருள்கெடல் கேட்டிலார்.
துணியு மாயிரம் சாத்திரம் கற்கினும்
சொல்லுவார் எள் துணைப் பயன் கண்டிலார்',

என்று பாரதியார் காட்டுவது போன்று பயனின்றியே கழிகின்றன. அதனாலேதான் நாடுகள்தோறும் இனப் போராட்டங்களும் வர்க்கப் போராட்டங்களும் நிகழ்வ

துடன் நாட்டுக்கு நாடு உலகை நடுங்கவைக்கும் போர்க் குமுறல்களும் உண்டாகின்றன. இவையெல் லாம் 'உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும்' இருபதாம் நூற்றுண்டின் நாகரிகக் கோலம்போலும்! ஆனல் அந்த ஆதி மனிதன் இவற்றிற்கெல்லாம் அப் பாற்பட்டவனய் வயிற்றுத் தீத்தணியும்-பசிபோக்கும் தேவை ஒன்றினையே அறிந்திருந்தான்.

இயல்பாக வயிற்றுக்குத் தேவையான உணவு கிடைக்கவில்லை என்ற நிலை உண்டான பிறகே அவன் உணவுக்கு என்ன செய்வது என்று எண்ணியிருப் பான். 'Necessity is the mother of invention' (தேவை ஆய்வை வளர்க்கின்றது) என்ற ஒரு பழமொழி ஆங் கிலத்தில் உண்டன்றே! அதன் வழியே இன்னும் தேவையே பலப்பலப் புது ஆய்வுகளைச் செய்யத் தூண்டுகின்றது. ஆதி மனிதனும் இதற்கு விலக்கான வனல்லன். எனவே தன் வயிற்றுப்பசி தணிய உயரத்திருந்த காய்கனிகளையும் ஓடிய பிற விலங்கு களையும் பறந்த பறவைகளையும் வீழ்த்திக் கொல்ல எண்ணியிருப்பான். அந்த எண்ணத்துக்கு அவ னுக்கு உற்றுதுணையாயின யாவை? கூரிய ஆயுதங் களை அன்று வடித்தவர் யார்? ஆயுதமே அறியாத காலமல்லவா அது! பக்கத்திலிருந்த கூரிய கற்களை அவன் தனக்குத் துணையாகப் பயன்படுத்திக் கொண்டான். கூரிய கற்களை வீசிக் காய்களை வீழ்த் தினன்; ஓடிய விலங்கை அடித்தான், பறக்கும் பறவை யைப் படுத்தான். இப்படியே அவனுடைய முதல் தொழில் தொடங்கிற்று. இதையே வரலாற்று ஆசிரி யர்கள் 'முதல் கற்காலம்' என்று வரலாற்று எல்லை யிட்டுப் பேசுகின்றார்கள்.

வழியிடைக் கண்ட கற்களை எடுத்துத் தன் உணவைக் கொள்ளப் பயன்படுத்திய மனிதன் அந்தக் கற்காலத்திலேயே தன் உணவை அறுக்கவோ சிதைக்கவோ அன்றித் தக்க வகையில் பக்குவப்படுத்தவோ முடியாத நிலையில், அக்கற்களைக் கூராக்கக் கற்றுக் கொண்டான். கல்லாலாகிய கத்தியும் பிறவும் அக்காலத்தில் அவன் செய்தவையே. அதுவே அவனுடைய முதல் தொழிலாக அமைந்தது. அதற்கெனத் தனியாக அவனுக்குத் தொழிற்சாலைகள் கிடையா. கண்ட கண்ட இடங்களில் கண்ட கண்ட கற்களை எடுத்துக் கூராக்கிக் கொண்டான் அவன். ஆனால் அதற்கென அவன் பல கற்களுள் சிலவற்றைத் தேர்ந்தெடுக்கக் கற்றுக்கொண்டிருக்கவேண்டும். எனவே தொழிலின் முதற்படியில் அவன் தொழிலுக்குப் பயன்படும் (Raw material) பொருள்களின் தரத்தை ஆராயும் திறத்தையும் கற்றுக்கொள்ள ஆரம்பித்துவிட்டான் என்றே சொல்லவேண்டும்.

கற்காலத்துக்குப் பிறகு இரும்புக்காலம் செம்புக் காலம் முதலிய காலங்கள் வரலாற்றில் வருகின்றன எனக் காண்கின்றோம். அவற்றின் பொருள்கள் என்ன? அவ்வக்கால மனிதன் அவ்வவ் வுலோகங்களாலாகிய பொருள்களைப் பயன்படுத்தினான் என்பதே பொருளாகும். ஆனால் அந்த முதற் கற்காலத்துக்கும் இந்த இரும்பு செம்புக் காலங்களுக்கும் இடையில் எத்தனையோ நூற்றாண்டுகள்-ஆயிரமாயிர மாண்டுகள்-கழிந்திருக்க வேண்டும். அதற்குள் தனித்தனியாக வாழ்ந்த மனிதன் கூடி வாழக் கற்றுக்கொண்டவனாக வேண்டும். இரும்பைக் காய்ச்சி உருக்கி எஃகாக்கி அதையும் கூரிய ஆயுதங்களாக வடிக்க அவன் கற்றுக்கொண்ட

தொழில்வளமே இந்த இருபதாம் நூற்றுண்டின் உருக் காலேகள் அத்துணேக்கும் வித்திட்ட ஒன்று. எனவே அந்த முதன் மனித இனத்தவர் யாவராயினும்–அவர் இன்று இல்லேயாயினும் - அவர் வாழ்ந்த காலம் நோக்கி–தெரிந்தால் திசை நோக்கி–இன்றைய மனித இனமே வணக்கம் செலுத்தக் கடமைப்பட்டுள்ளது. அதே நிலேயில் அவன் செம்பையும் பல ஆயுதங்களாக ஆக்கிப் பயன்படுத்தக் கற்றுக் கொண்டான். இந்த இரும்புச் செம்புக் காலங்களில் அவனுடைய தேவை சற்று அதிகமாகவே வளர்ந்திருக்க வேண்டும் என்பது துணிவு.

இந்தப் பிந்திய வரலாற்றுக் காலங்களாகிய செம்பு இரும்புக் காலங்கள் வரை அவனுடைய தேவை 'உணவோடுதான் நின்றதா?' என்று எண்ணத் தோன்றும். ஆயினும் நன்கு ஆராயின் அவன் தேவை சற்று விரிவடைந்திருக்க வேண்டுமென்பது நன்கு புலனுகும். உணவு மட்டுமன்றி உடையும் அவனுடைய அடிப்படைத் தேவையாக அமைந்துவிட்ட காலம் அது. விலங்கொடு விலங்காக வாழ்ந்த காலத்தில், வேண்டுமாயின் அவன் தன் உடலே மறைக்க, வேண்டுமென்ற உணர்வேயில்லாது வெறும் உணவை மட்டும் தேடி அலேந்திருப்பான். ஆனல், மற்றைய மனிதரொடு அவன் சேர்ந்து வாழத் தொடங்கிய அந்த இரும்புச் செம்புக் காலங்களில் தன் உடலே மறைக்க வேண்டுமென்ற உணர்வு அவன் உள்ளத்தில் அரும்பி இருத்தல் இயல்பேயாகும். அந்தக் கால மனிதன் தன்னே விலங்கினும் வேருக உணரத் தொடங்கிய வேளேயும் அதுவாகும். எனவே உடலே மறைத்து மானத்துடன் வாழவேண்டும் என்ற உணர்வு அவன் உள்ளத்து

எழுந்திருந்திருக்கும். அந்த உணர்விலேயே அவன் மனிதனுன். உணவு உயிரினங்கள் அனைத்துக்கும் தேவை; ஆனால் உடை மனிதனுக்கு மட்டும் தேவை. எனவே அந்த உடை உணர்வே அவனை மனிதனாக்கியது. அந்த உடை உணர்வே இன்று கோவை, மதுரை போன்ற தமிழ்நாட்டு நகரங்களையும், பம்பாய், ஆமதாபாத் போன்ற வடநாட்டு நகரங்களையும் பிற வெளிநாட்டு ஆலை நகரங்களையும் செல்வ வளம் கொழிக்கச் செய்கிறது என்பது உண்மையன்றோ!

முதல் மனிதனுக்கு மட்டுமன்றி இன்றை மனிதனுக்கும் அடிப்படைத் தேவைகள் உணவும் உடையும் தாமே. இவற்றைத் தமிழ்நாட்டுப் புலவர்கள் மிக எளிமையாக உணர்த்திவிட்டுச் சென்றிருக்கிறார்கள். பள்ளிப் பிள்ளைகளும் எளிமையாகப் பயிலும் வண்ணம் ஔவையார்,

"உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்
எண்பது கோடிநினைந் தெண்ணுவன" (நல்வழி : 28)

என்று கூறி, இந்த இரண்டிலும் உணவு முதற்படி என்பதைக் காட்டி, இந்த இரண்டும் உலகில் வாழும் எல்லோருக்கும் அடிப்படைத் தேவையெனவும் அதை எண்ணி எல்லோரும் இந்த அடிப்படைத் தேவையைப் பெற முயலாது, முன்னணியில் செல்பவர்கள் எதை எதையோ எண்ணி எண்ணிச் சஞ்சலப்பட்டு உலகுக்கு அலக்கண் உறச் செய்கிறார்கள் எனக் காட்டுகின்றார். இவை இரண்டும் உலகில் எல்லோருக்கும் அமைந்து விட்டால் பிற வேறுபாடுகள் உலகில் இருந்தாலும் அதிகமாகத் தெரியாது என்பதே அவர்கள் கருத்து. இதைத்தான் இன்றைய அரசியல் தலைவர்கள், 'உழைப்பவன் உண்ணவும் உடுக்கவும் வசதி இன்றிப் பட்டினி

யிருந்து பனியிலும் மழையிலும் நனைந்து கொண் டிருக்க, மற்றவர் பட்டுடுத்து மச்சுவீட்டில் வாழ்வதா?" என்று மேடைப் பேச்சாக மாற்றியிருக்கிறார்கள். எனவே உலகம் இன்றும் எவ்வளவு முன்னேற்ற மடைந்ததாகக் கூறிக் கொண்டாலும், இந்த அடிப் படைத் தேவைகளை, எல்லோருக்கும் நிறைவு செய்து விட்டோம், என்று உலக அரசாங்கங்கள் கூறிக் கொள்ள முடியாதல்லவா! இன்னும் பட்டினிச் சாவு களும் உடல் மறைக்கக் கந்தை அற்ற அறுதை வாழ் வும் இல்லையா? இந்த உணர்வு பிறந்து இவற்றை யெல்லாரும் பெறத் தந்தால் மற்றவை இயல்பாக அமைந்துவிடும். இந்த உண்மையை மேடையில் பேசு கின்ற அளவுக்குத் தலைவர்கள் செயலில் காட்டுவார் களாயின் பயன் உண்டாகுமே! பொறாமை-பூசல்-திருட்டு-இலஞ்சம்-கொலை முதலியன பசியின் விளைவே. மேலைநாடுகளில் இவைகள் ஓரளவு இல்லாததற்குக் கார ணம் அந்நாட்டு அரசாங்கங்கள் மக்களுக்கு உணவும் உடையும் நிறையக் கிடைக்கச் செய்வதே.

> 'உண்பது நாழி உடுப்பன இரண்டே
> பிறவு மெல்லாம் ஓரொக் கும்மே' (புறம்: 181)

என்று இதையே இருபது நூற்றாண்டுகளுக்கு முன்னர்த் தமிழ்ப்புலவர் நக்கீரர் சொல்லிச் சென்று ரல்லவா? உலகம் என்று உணருமோ?

உணவை மட்டும் தேடிய அந்த ஆதி மனிதனுக்கு உடையின் தேவையும் உண்டாகிய காலத்தில் அவனுக்குப் பஞ்சும் பட்டும் அறிமுகமாகாத பொருள் கள். எனவே அவன் தன் உணவுக்குப் பயன்பட்ட விலங்குகளின் தோலையே ஆடையாக அணிந்தான். மரத்தின் தழைகளையும் பட்டைகளையும் பின்னி

இணைத்து அவற்றையும் ஆடையாகக் கொண்டான். அவையே அவனுக்கு முதலாக நெய்தல் தொழிலைக் கற்றுத்தந்தன. மக்கிய மரப்பட்டைகளிலிருந்து உண்டான நார்களைப் பின்னவும் அவற்றை ஆடையாகப் பயன்படுத்தவும் சில நாட்களில் அவன் கற்றுக் கொண்டான். எனவே அவன் நெசவுத் தொழில் நெடு நாட்களுக்கு முன்பே தொடங்கிவிட்டது. உண்ண உணவும் உடுக்க உடையும் அக்காலத் தேவைகளாக அமைய அவற்றின் வழியே அவன் கற்றுக்கொண்ட தொழில்கள் ஒரு சிலவாம்.

அடிப்படை வாழ்வில் இந்த இரண்டுடன் மற்றொன்றும் உண்டல்லவா? அதுவே வீடு. விலங்குகளைப் போலவும் பறவைகளைப் போலவும் சுற்றிப் பரந்து உணவு தேடியும் உடை கண்டும் வாழ்ந்த மனிதனுக்குத் தலைசாய்க்க இடம் வேண்டும் என்ற உணர்வும் அதன் வழித் தேவையும் உண்டானது இயற்கையன்றே ! 'விலங்குகளுக்குக் குகையும் பறவைகளுக்குக் கூடுகளும் உள்ளன; ஆனால் மனித குமாரனுக்கோ தலைசாய்க்க இடமில்லை' என்று இயேசுபெருமான் கூறியதாக நமக்கு விவிலிய நூல் விளக்கம் தருகிறது. உண்மையிலேயே அவர் கூறிய சமய நெறியிலன்றி உலகியல் நெறியிலும் பலர் இன்றும் 'குந்தக்' குடிசை இல்லாமல் 'விண்ணே கூரையாய் மண்ணே பாயலாய்' உறங்குவதைச் சென்னை போன்ற நாகரிக நகரங்களில் இன்றும் காண்கிறோமே! ஆதி மனிதன் அந்த நிலையில் பலகாலம் வாழ்ந்திருப்பான். விலங்குகள் குகைகளிலும் பறவைகள் கூடுகளிலும் இராப்பொழுதையும் ஓய்வு நேரங்களையும் கழிப்பதைக்கண்ட அவனுக்குத் தனக்கும் தலைசாய்க்க இடம் அமைத்துக்கொள்ள வேண்டும் என்ற உணர்வு உண்டாகியிருக்கும். அந்த உணர்வின்

வழி உண்டான வீட்டுத் தேவையை நிறைவேற்றிக் கொள்ள அவன் எத்தனையோ தொழில்களைக் கற்றுக் கொண்டிருப்பான். இன்று எவ்வளவுதான் இந்த வீடு அமைக்கும் தொழிலில் மனிதன் முன்னேற்றம் அடைந்தாலும் அவன் குருவிக் கூட்டையும் அரக்கு மாளிகையையும் மண் புற்றையும் தேன் கூட்டையும் சிலந்தி அமைப்பையும் கட்டமுடியாமல் திண்டாடுகிறான் அல்லவா! இதைத்தானே புலவர்,

*'வான்குருவி யின்கூடு வல்லரக்கு தொல்கரையான்*
*தேன்சிலந்தி யாவர்க்கும் செய்வரிதால்'*

என்று பாடியுள்ளனர். எனினும் அன்றைய மனிதன் அவற்றைக் கண்டுகண்டு தெளிந்தே தன் வீட்டின் தேவையை ஓரளவு நிறைவு செய்துகொண்டான் என்பது பொருந்தும்.

ஆதிமனிதனுடைய முதல் குடிசை எது என்று நமக்குத் தெரியாது. அது எங்குக் கட்டப்பட்டது என்பதும் புரியாத ஒன்று. எனினும் அந்தக் குடிசை அமைக்கும் தேவை அவனுக்குப் பல்வேறு தொழில்களைக் கற்றுக்கொடுத்தது. கீற்று முடையவும் நார் பிரிக்கவும் மூங்கில் அல்லது மரத்தைச் செம்மைப் படுத்தவும் மண்ணைக் கிளறிப் பிசையவும் மண்ணைச் சுவராக்கவும் இன்னும் எத்தனையோ தொழில்களைச் செய்யவும் அவனுக்குக் கற்றுக் கொடுத்ததன்றோ! அத்துடன் அந்தக் காலமே-அவனைக் கூடி வாழவும் செய்த காலமே - ஆண் பெண் சேர்க்கைதான் கருவுக்குக் காரணம் என்பதை அறியாத அந்த ஆதி மனிதனும் பெண்ணும் அவரவர் மனம் போலச் சுற்றிய நிலைபோக, அவர்கள் இருவரும் சேர்ந்து வாழவே வீடமைத்துக்கொண்ட காலம். பின்

அவர்களும் அவர்தம் குழந்தைகளும் சேர்ந்து குடும்ப மாயிற்று. அத்துடன் பக்கத்திலும் அண்டையிலும் மற்றவர்களையும் சேர்த்து வரிசையாக வீடுகளை அமைத்துக்கொண்டு ஊர் அமைத்துச் சமூகமாக வாழக் கற்றுக்கொண்ட காலமும் அதுவேயாகும். அந்தக் காலத்தில் அவன் சமூக வாழ்விற்கு வேண்டிய பல் வேறு தொழில்களைக் கற்றுக்கொண்டவனாயிருக்க வேண்டும். சாலை அமைத்தலும் சோலை வளர்த்தலும் அவன் தொடங்கிய தொழில்கள் அல்லவா! அத்துடன் அக்காலத்திலேயே அவன் பயிர்த் தொழிலையும் கற்றுக்கொண்டவனாதல் வேண்டும். பயிர்த் தொழிலே அவன் வாழ்வில் அவனைப் பண்பட்டவனாக்கியதோடு பல தொழில் வல்லவனாக்கிக் கூட்டு வாழ்வில் அவனைப் செம்மைப்படுத்தியதாகவும் ஆதல் வேண்டும். 'உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்' என்று பாரதி உழவையும் தொழிலையும் இணைத்தே சொல்லியதில் நல்ல கருத்து உண்டு. இன்று புறத்தோற்றத்தில் பெருந் தொழில்களுக்கும் உழவுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்பதுபோன்ற உணர்வு இருந்த போதிலும் ஆராய்ந்து பார்த்தால் அவற்றின் தொடர்பு விளங்காமல் போகாது. திருவள்ளுவனார் கூறிய 'சுழன்றும் ஏர்ப் பின்னது உலகம்' என்ற மேலான பொய்யா மொழி இரண்டாம் நூற்றாண்டுக்கும் இருபதாம் நூற்றாண்டுக்கும் மட்டுமன்றி மனித இனம் உள்ள அளவும் மெய்யாக வாழ்வில் உள்ள ஒன்றாகும். எத்துணைத் தொழில்வளம் மிகினும், உழவு சிறந்து விளைவுள் பெருகவில்லையானால் அதன் வழி உணவு முட்டுப்படுமானால் ஆலைத் தொழிலாளியின் வாழ்வெங்கே? திறன் எங்கே? செயல் எங்கே? ஒருவேளை 'படி' கூட்டிக் கணக்கிடலாம். எனினும் அந்தக் கணக்கெல்லாம் உழவு வழிக் காணும் உணவுப் பொருள்

அடிப்படையிலே கணக்கிடப் பெறுவன என்பதை யாரும் மறக்க முடியாதல்லவா! எனவே எத்துணைத் தொழில்வளம் பெறினும்-பிற பொருள்களைக் கொண்டு குவித்தாலும்—உணவு இல்லையேல் அந்நாடு உயராது. எனவே தொழில் வளத்திற்கு முன்னர் உணர்ந்து போற்றப்பட வேண்டியது உழவேயாகும். இந்த உண்மையை இன்னும் நம் நாட்டில் நாம் உணராத காரணத்தினாலேயே பல எதிர்பாராத இடர்ப்பாடுகள் உண்டாகின்றன.

உழவு மனிதனுக்குப் பல தொழில்களைச் செய்யக் கற்றுக் கொடுத்தது. உழவு தனி மனிதனால் ஆகக் கூடிய ஒன்றன்று. அவ்வுழவுக்கு வேண்டிய பல்வேறு கருவிகளைச் செய்துகொடுக்க எத்தனை எத்தனை உதவியாளர் தேவை. வயலைச் செம்மைப்படுத்தவும் வாய்க்கால் வெட்டவும் நீர் கட்டவும் எருவிடவும் விதை தெளித்துக் களைஎடுத்து அறுவடை செய்யவும் எத்தனை எத்தனை கருவிகள் அவனுக்குத் தேவை. அத்தேவைகள் வளர வளர நாட்டில் தொழில் வளர்ச்சியும் பெருகியிருக்க வேண்டுமல்லவா! மற்றும் அதற்கு உதவிய அத்தனைத் தொழிலாளிகளையும் அணைத்தே அந்த உழவு மனிதன் கூட்டுச் சமுதாயம் அமைத்துப் பண்பாட்டுடன் வாழக் கற்றுக்கொண்டான். மற்றும் அக் காலமே அவன் ஊரைவிட்டு ஊர்செல்லும் நாடோடியாக இல்லாமல் ஓரிடத்தில் நிலைத்து உறையும் நாட்டையும் ஆக்கிக்கொண்ட காலமாகும். வரலாற்று ஆசிரியர்கள் அந்த நாகரிக காலத்தையே ஆற்றங்கரை நாகரிக காலமெனவும் அந்த நாகரிகமே பிற நாகரிகங்களுக்கெல்லாம் தாய் நாகரிகமெனவும் காட்டுவர். தம் உழவுக்கு நீரைப் பயன்படுத்தக் கற்றுக் கொண்ட அந்த நாளே, பக்ராநங்கல் அணை தொடங்

கிப் பாபநாசம் அணை வரை நம் நாட்டில் வளர் வித்திட்ட நாளாகும்.

உழவு நாளிலிருந்து மனிதன் மெள்ள மெள்ள வளரத் தொடங்கினான்; எனவே அவன் தேவையும் வளரலாயிற்று; ஆகவே, தொழில்களும் நாட்டிலும் வீட்டிலும் நகரிலும் உலகிலும் வளரத் தொடங்கின. ஊர்களும் நகரங்களும் வளரவளர அவற்றிற்குத் தேவையான பல்வேறு பொருள்களைச் செய்யும் தொழிற் சாலைகள் வளர்ச்சி அடைந்தன என்பது சொல்லாமலே அமையும். மற்றும் உணவையும் பிற பொருள்களையும் ஒரூரிலிருந்து மற்றோர் ஊருக்குக் கொண்டு செல்ல வேண்டிய தேவை உண்டாயிற்று. தனி வழியாகக் கல்லிலும் முள்ளிலும் கால் கடுக்க நடந்துசென்ற மனிதன் ஊர்களுக்கிடையில் சாலைகள் அமைக்கக் கற்றுக்கொண்டான். அவை வெறும் மண் சாலைகள் தாம் என்றாலும் அவை அவனது தொழிலை நன்கு வளர்த்தன எனலாம். அச் சாலைகள் மூலம் செல்ல அவன் தன் நடையைத் தவிர சிறுசிறு வண்டிகளையும் பயன்படுத்தத் தொடங்கிய காலமே போக்குவரத்துத் தொடங்கிய காலம். அக்காலமே இன்று நாம் காணும் எல்லாப் போக்குவரத்துக்கும் வித்திட்ட பொற்காலமாகும். அக்காலத்தில் அவன் எந்த வகையான வண்டியைச் செய்தான் என நம்மால் நினைத்துப் பார்க்கக்கூட முடியாது. எந்தெந்த விலங்குகள் அவனுக்குப் பாண்டில் இழுக்கப் பயன்பட்டன என்பதும் சொல்லமுடியாத ஒன்று. மாடுகளும் குதிரைகளும்-ஏன்? - நாய்களும் பிற விலங்குகளும் கூட இன்று வண்டிகள் இழுக்கப் பயன்படுகின்றன. இந்த நிலையில் அக்காலத்திலும் அவனுக்குப் பயன்பட்ட பல விலங்குகள் வண்டிகளை ஈர்த்திருக்கும். விசாகப்பட்டினக் கப்பற் கட்டும்

தொழிற்சாலையும் பிரம்பூர் இரெயில்பெட்டித் தொழிற்சாலையும், பெங்களூர் விமானத்தொழிற்சாலையும் அன்று இல்லை என்பது உண்மைதான். ஆனால் ஊர்தோறும் கொல்லன் உலைக்களம் ஓயாது பல இருசுகளை உருவாக்கி மக்களுக்கு உதவிக்கொண்டே இருந்திருக்குமல்லவா! மற்றும் அன்று ஓடிய வண்டிகளுக்கு வேண்டிய அச்சாணி தொடங்கிப் பல்வேறு பொருள்களைச் செய்த உலைக்கூடங்களும் தொழிற்சாலைகளும் இருந்திருக்க வேண்டுமல்லவா! எனவே மனிதன் ஊர் அமைத்துப் பயிரிடத் தொடங்கிப் பாதை அமைத்துக் கொண்ட அந்த நாளில் அவன் திட்டமிடாமலேயே-எண்ணாமலேயே-ஊர்தோறும் பல தொழிற்சாலைகளை அமைத்துக்கொண்டான் என்பது உறுதி.

உணவும் உடையும் உறையுளும் அவனது அவசியப் பொருள்களாகிவிட்டன. உணவில் தான் பயிரிட்ட பல்வேறு பொருள்களை நெருப்பிலிட்டுப் பதமாக்கி உணவாக்கி உண்ணும் திறம் பெற்றுவிட்ட மனிதன் உடையிலும் பல மாற்றங்களைக் காண முயன்றிருப்பானல்லவா! அந்த முயற்சிகளே அவனுக்குப் பட்டினிலாடையும் பஞ்சியிலுடையு மட்டுமன்றிக் கம்பளிப் போர்வைகளையும் அளித்திருக்க வேண்டும். குளிர் நிலத்தில் வாழ்ந்த மனிதன் ஆடுகளின் கம்பளப் போர்வையைக் கண்டு, தான் குளிரால் வருந்த அவை குளிரைச் சட்டை செய்யாமல் 'சட்டை' இட்டனபோன்று இருப்பதைக் கண்டு அவற்றின் மேற்பரப்பிலுள்ளவற்றைக் கொண்டு தனக்கும் கம்பளி உடையைத் தேடிக் கொண்டவனாக வேண்டும். மனிதன் வாழ்வில் பட்டும் பஞ்சும் இடம்பெற்ற காலம் எந்த நாளாக இருந்தாலும்-அக்காலம் இன்று நம்மால் அறியமுடியாத நிலையிலிருந்தாலும்-அக்காலம் மிகச் சிறந்தகாலமென்பதை யாரே

மறுக்க வல்லார்? அந்த அடிப்படைதானே இன்று நாட்டை உடைவகையில் - பலப்பல வண்ண ஆடைகளில் பலப்பல நூலும் பட்டும் மயிருமற்ற செயற்கைப் பொருள்களால் ஆகிய ஆடைகளில்—வாழவைக்கின்றது.

கூட்டுச் சமுதாயமாக வாழ்ந்த மனிதன் வேறுபடவும் கற்றுக் கொண்டானல்லவா! அதனால்தானே மிகப்பழங்காலத்திலேயே மாறுபட்டங்களும் போராட்டங்களும் பிற கொடுமைகளும் அவற்றின் வழி நாட்டுப் பிரிவுகளும் உண்டாயின. எனவே மனிதன் பிரிந்து போரிடக் கற்றுக்கொண்ட காலத்திலும் ஒருவரிடமிருந்து மற்றவரும் ஒருராரிடமிருந்து மற்றூராரும் ஒருநாட்டாரிடமிருந்து மற்றொரு நாட்டாரும் தத்தம்மைப் பாதுகாத்துக் கொள்ளத் தேவை உண்டாயிற்று. முன்னமே வனவிலங்குகளிட மிருந்தும் பிற கொடுமைகளிடமிருந்தும் தன்னையும் தன் பயிர்முதலியவற்றையும் பாதுகாத்துக் கொள்ள ஓரளவு பழகிய மனிதன் இந்த மனிதப் போராட்டத்துக்கும் தன்னைத் தயார்செய்து கொண்டான். அந்த விளைவில் அவன் அமைத்த கோட்டைகள் பல; செய்த பாதுகாப்புக் கருவிகள் பல; மற்றவரை அழைக்கச் செய்த கருவிகள் பல. அவை யாவும் பின் அவன் தேவைப் பொருளாகவே மாறிவிட்டன இன்று நாட்டுக் காவலுக்கு வருவாயில் பாதிக்குமேல் செலவிடும் நாகரிகத் தேவையைப் பார்க்கிறோமல்லவா! எனவே அன்றையப் போருக்கும் பாதுகாவலுக்கும் வேண்டிய பொருள்களைச் செய்து கொள்ள ஏற்படுத்திய தொழிற் சாலைகள் பல. இந்தப் போராட்டம் என்று தோன்றிற்று என்று சொல்லமுடியாது. ஆதாமும் ஏவாளும் தோன்றிய அன்றே சாத்தானும் தோன்றிற்று என்று விவிலிய நூல் கூறுவது போன்று சேர்ந்து வாழக் கற்றுக்

கொண்ட அன்றே அவன் உள்ளம் பிரிந்து வாழவும் திட்டமிட்டிருக்கலாம். அந்தத் திட்டமே பின் பெரும் போர்க்களமாகியிருக்கும். எப்படியாயினும் அப்போராட்டங்களும் மனிதனுடைய தேவையை ஓரளவு நிறைவு செய்தன எனலாம். கடந்த இரண்டு உலகப் போர் காரணமாக உண்டான எத்தனையோ பொருள்கள் இந்த அமைதிக் காலத்திலும் மக்களுக்குப் பயன் படுவதைக் காண்கிறோம். 'ஜீப்' (Jeep) என்னும் சாதனம் போருக்காக அன்று உண்டாக்கப் பெற்றாலும் இன்று அமைதியான சமுதாய வாழ்வுக்கும் அது எத்தனையோ வகையில் பயன்படுகிறது. போருக்காகவே க்ண்டுபிடிக்கப் பெற்ற அணுவின் ஆற்றலால் சமுதாயத்தை என்னென்ன வகையில் வாழவைக்கத் திட்டமிடுகிறார்கள்! இப்படியே பண்டைக் காலத்துப் போர்களும் வளர்ந்து வந்த மக்கட் சமுதாயத்திற்கு எண்ணற்ற தொழில்வளங்களைத் தேடித் தந்திருக்குமல்லவா!

இதுவரையில் நாம் கண்ட தேவைகளும் அவற்றின் வழி வளர்த்த தொழில் வளர்ச்சிகளும் மனித சமுதாயத்தின் தெளிவான வரலாற்றுக் காலத்து முற்பட்டனவேயாகும். அவனது வரலாற்று எல்லையில் அவனது பெருகிய தேவைகளும் அதனால் அவன் உண்டாக்கிய தொழிற்சாலைகளும் அளவிறந்தன. இன்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளாக—எகிப்து—சுமேரியா—சிந்துவெளி-காவிரி நாட்டு நாகரிகங்கள் தோன்றிய அந்த நாளிலிருந்து அவன் தேவை நாள் தொறும் பெருகிக் கொண்டே வருகின்றது. அதற்கென அத்தேவையை நிறைவு செய்யச் சாதனங்களும் தொழிற் கூடங்களும் பிற அமைப்புகளும் வளர்ந்து கொண்டே வருகின்றன. எகிப்தின் உயர்ந்த 'பிரமிட்'

கோபுரங்களும், சிந்துவெளியின் மொகன்சோதாரோ ஹாரப்பா போன்ற நாகரிகங்களும், தமிழ் நாட்டுப் பழம்பெருநகரங்களைக் காட்டும் சங்க இலக்கியங்களும் அவ்வக்காலத்திய மனிதத் தேவைகளையும் அவற்றை நிறைவு செய்யப் பயன்படுத்திய பொருள்களையும் அவற்றை உண்டாக்க அமைந்த தொழிற்சாலைகளையும் நமக்கு நாள்தோறும் நினைவூட்டிக் கொண்டே இருக்கின்றன அல்லவா!

இமயமுதல் குமரிவரையிலும் அலெக்சாண்டிரியா ரோம்முதல் பாடலிபுரம் (பாட்னு) வரையிலும் மக்கள் இரண்டாயிர மாண்டுகளுக்கு முன்பே தாராளமாகப் பழகிவந்தார்கள் என அறிகிறோம். 'குமரியோடு வட இமயத்து ஒரு மொழி வைத்து உலகாண்ட' வரலாற்றை இரண்டாயிரமாண்டுகளுக்கு முன்பே கண்டிருக்கிறோம். அப்படியே கிரேக்க நாட்டிலிருந்து மௌரியப் பேரரசின் காலத்தில் பஞ்சாப் வரையில் அலெச்சாந்தர் வந்ததையும் அதற்குமுன்பே கண்டிருக்கிறோம். அதே காலத்தில் தமிழ்நாட்டு மேற்குக் கடற்கரையில் கிரேக்க நாட்டுக் கப்பல்களும் கீழைக் கடற்கரையில் சீன நாட்டுக் கப்பல்களும்—பாய்மரக்கப்பல்கள் தாம்—தங்கி வாணிபம் செய்தன எனவும் வரலாற்று வழியாலும் மொழி நூலாராய்ச்சியாலும் காண்கின்றோம். எனவே அந்தக் காலங்களில் பலநாடுகள் தம்முள் பழகி இருந்தன என உணர்கின்றோம். எனவே பலநாட்டு நாகரிகங்களும் பண்பாடும் பழக்க வழக்கங்களும் பிறவும் கலந்து நின்றமை போன்றே வேறு பலநாட்டுப் பொருள்களும் இடமாற்றமும் பெற்றிருக்க வேண்டும். வேற்றுநாட்டுப் பொருள்களைக் கண்ட ஒவ்வொரு நாட்டு மக்களும் அவ்வப் பொருள்களின் தேவையும் பயனும் உணர்ந்து அவைகளைத் தத்தம்

நாடுகளில் செய்யப் பெருமுயற்சி செய்திருப்பார்க ளன்றோ! அதனாலேதான் நாடுதோறும் பல்வேறு தொழில்கள் பெருகலாயின. இன்று பிறநாட்டுத் தொழில் வல்லுநர்தம் முயற்சியினாலும் உறுதுணை யாலும் நம்நாட்டில் பல்வேறு தொழில்களை வளர்ப்பது போன்றே அக்காலத்திலும் ஒரு நாட்டு மக்களில் தொழில் வல்லார் பிறநாடுகளுக்குச் சென்று அவ்வத் தொழில் வளரத் தக்க வகையில் ஆக்கமும் ஊக்கமும் தந்து உலகெங்கணும் நல்ல முறையில் தொழில் வளரப் பாடுபட்டிருப்பார்கள் எனத் தெரிகின்ற தன்றோ!

உலக நாடுகளை யெல்லாம் இங்கே நாம் எடுத்து ஆராய்தலென்பது இயலாத ஒன்று. பரந்த பாரத நாட் டைப் பற்றி எண்ணவும் நமக்குக் காலமும் இடமும் போதா. தமிழ் நாட்டுப் பண்டைத் தொழில் வளத் தைத் தனியாகக் காணல் சாலும். எனவே இங்கே பொதுவாக இந்திய நாட்டு வரலாற்று எல்லையில் காலந் தோறும் உண்டான மாறுதல்களையும் அவற் றின் வழி அமைந்த தேவைகளையும் அதனால் வளர்ந்த தொழில் துறைகளையும் பொதுவாகக் கண்டு அமைய லாம் என எண்ணுகின்றேன். அலெக்சாண்டர் படை யெடுப்புக்காலம் தொடங்கி 1947-ம் ஆண்டுவரையில் இந்தியாவை நாடி வந்த வேற்று நாட்டவர் எண்ணற் றவர். அலெக்சாண்டருக்கு முன்னரும் பலர் நம்நாடு நோக்கி வந்துள்ளனர். அவருள் முதலாவதாக வந்த வரை ஆரியர் என்கின்றனர் வரலாற்றுளர். எப்படி யாயினும் ஆரியர் காலந் தொட்டு ஆங்கிலேயர் காலம் வரையில் நாடு பல மாற்றங்களைப் பெற்றுள்ளது. வந்தவர் தம் வாழ்வுக்கும் நாகரிகப் பழக்கவழக்கங் களுக்கும் ஏற்ப எத்தனையோ புதுப்புதுப் பொருள்களைக்

கொண்டுவந்தனர். அவற்றையெல்லாம் இங்கேயே செய்து வளம்பெருகும் வகையில் பல்வேறு தொழிற் சாலைகள் அன்று தொட்டு இன்றுவரை வளர்ந்துள் ளன. ஆரிய திராவிட வேறுபாடும் இந்து முஸ்லீம் வேறுபாடும் பிற வேறுபாடுகளும் ஒன்றிக் கலந்து விட்டன. என்று கூறுமாறு பல்வேறு தன்மையாளர் தம் வாழ்வின் தேவைகள் நாட்டின் ஒன்றிய தேவை களாக மாறி, அந்த அடிப்படையிலேயே அவற்றை வளர்க்கும் தொழிற்கூடங்களும் அமைந்துள்ளன. உயர்ந்த பெருந் தொழில்கள் தொடங்கிச் சாதாரண குடிசைத் தொழில்வரை எந்த வேறுபாடும் இல்லா வகையில் எல்லாச் சமூகத்தாரும் ஒன்றிக் கலந்து செயலாற்றும் வகையிலேயே தொழில் நிலை யங்கள் பெருகியுள்ளன. எனவே எல்லாக் கலப்பு களும் நாட்டின் தொழில்வளத்தைப் பெருக்கின என் பது பொருந்தும்.

மனிதன் வளர வளரத் தன் தேவைகளைப் பெருக் கிக்கொண்டே போகிறான். இன்று தொலைபேசியும் உந்துவண்டியும் பிற சாதனங்களும் நடுத்தர மனித னுடைய இன்றியமையாத தேவைகளாக உள்ளன எனப் பேசப்படுகின்றது. உணவும் உடையும் உறை யுளும் அடிப்படைத் தேவைகள் என்ற நிலைமாறி உல கில் எத்தனையோ மனித வாழ்வின் அடிப்படைத் தேவைகளாக அமைந்து வருகின்றன. உலக அரங் கில் இன்று வானவூர்தி வாழ்வின் அடிப்படைத் தேவையாகிவிட்டது. வானவெளியில் தோன்றும் பல பொருள்கள் சில ஆண்டுகளில் மனிதனின் இன்றியமை யாப் பொருள்களாகலாம். எனவே மனிதன் அறிவு வளர வளரப் பல தேவைகள் பல்கிப் பெருகுகின்றன. புகைவண்டியும் உந்துவண்டியும் வானவூர்தியும்

தொலைபேசியும் பிறவும் மனித வாழ்வின் தேவைப் பொருளாக அமைந்த காரணத்தால் அவைகளைப் பெருக்கும் சாதனங்களாகிய தொழிற்சாலைகள் வளர வேண்டிய தேவையும் கூடவே உண்டாகின்றது. அப்படியே மனிதனுடைய இயற்கை உணவுடனேயே செயற்கை உணவுகளைக் கொள்ளத் தொடங்கிய காரணத்தாலே பல உணவுத் தொழிற்சாலைகள் உருவாகின்றன. அப்படியே கண்ணைப் பறிக்கும் வண்ண ஆடைகளைப் பட்டிலும் பருத்தியிலும் கம்பளியிலுமன்றி வேறு வகையிலும் மேற்கொள்ள விரும்பிய காரணத்தாலேயே பல்வேறு பொருள்களிலிருந்து பல வகை ஆடைகளை உண்டாக்கும் பல தொழிற்சாலைகள் நாடெங்கும் உண்டாகின்றன. இப்படியே ஒவ்வொரு துறையையும் எண்ணிக்கொண்டே போனால் அவ்வரலாற்றின் தொழில் வளர்ச்சிபற்றிய பல்வேறு குறிப்புக்கள் நமக்குக் கிடைக்கும். கடந்த பெரும் போருக்குப் பின் உண்டான பலவாய்ப்புகள் மனிதனுடைய வாழ்வின் தேவையை மிக அதிகமாக வளர்த்துவிட்டன. நாம் முன்னே கண்ட தாயுமானவர் பாடலில் காட்டிய ஆசையினும் மிக அதிகமாக மனிதன் தன் ஆசையை வளர்த்துக்கொண்டே போகிறான். அந்த ஆசைகள் அனைத்தும் அவனைப் புதுப்புதுத் தொழில் வளர்ச்சியில் ஊக்கம் பெறச் செய்கின்றன. எனவே நம் நாட்டிலும் உலகிலும் நேற்று வரை கேள்விப்படாத பல்வேறு பொருள்களை உண்டாக்கும் தொழிற்சாலைகள் வளர்ந்து கொண்டே வருவதைக் காண்கிறோம். அத் தொழிற்சாலைகள் அனைத்தும் மனித சமுதாய நல்வாழ்வுக்காக அமையவேண்டுமென்பதே நம் ஆசை.

மனிதனுடைய தேவை வளர வளரத் தொழில் வளம் பெருகுவது நல்லதேயாகும்; அதனால் மனித

னுடைய வாழ்க்கைத்தரமும் சமுதாய வளர்ச்சியும் சிறப்பதும் உண்மைதான்! ஆனால் அத்தேவைகள் தனி நலமும் சுயநலமும் கலந்ததாக மாறும்போதுதான் நாம் அஞ்சவேண்டியுள்ளது. போர்கள் உலகில் பல புதுமை களை உண்டாக்கிப் பலப்பல புதுத் தொழில்களை உண் டாக்கினபோதிலும் அவற்றை நினைத்தாலே மனித உள் ளம் அஞ்சத்தானே செய்கிறது. எனவே அமைதியை நாடும் மனித உள்ளத்துக்கு அவதியை அளிக்கும்போர் துன்பத்தைத் தருவதில் வியப்பில்லை அல்லவா! உல கெங்கணும் பலவிடங்களில் அணுபற்றிய ஆராய்ச்சி களும் அணுஉலைக்கூட ஆக்கவேலைகளும் நடைபெறு வதனை அறிகிறோம். அவை அனைத்தும் மனித வாழ் வின் வளர்ச்சிக்கும் வளத்துக்கும் உதவியாக அமையு மானால் எல்லோரும் மகிழ்வார்களன்றோ! ஆனால் அவற்றை ஆக்கத் துறைக்குப் பயன்படுத்துவதாக எண்ணிக்கொண்டு சிலர் மகிழும் அதே வேளையில் அவ்வத்துறையில் வல்லார் சிலர் உலகை அழிக்க அவற்றைப் பயன்படுத்தும் செயலில் ஈடுபடுகின்றார் களே என எண்ணும்போது நடுக்கமே உண்டா கின்றது. கடந்த காலப் போர்கள் பல தீமைகளுக் கிடையில் சில நன்மைகளைச் செய்தன என்பது உண்மையாயினும், இனி வரும் போர்கள் யாரை வாழ விட்டுவைக்கும் என அறியா வகையில் மனிதன் மட்டு மன்றி ஓரறிவுடைய புல்பூண்டு வரை அடியோடு அழிக்கும் ஆற்றல் வாய்ந்தவையாக இருக்குமாதலால் அவற்றால் முழுக் கேடே அன்றிப் பயன் விளையப் போவதில்லை. இந்த உண்மைகளை நம்மைக் காட்டி லும் அவற்றுடன் விளையாடும் விற்பனர் நன்கு அறி வர்; அறிந்தும் இப்படி அவர்கள் சோதனைக்குமேல் சோதனை செய்வது மனித சமுதாயத்துக்கு வேதனை

யாகவே உள்ளது. எனவே அவை வாழ்வின் தேவை தாம் என்று யாரும் சொல்லமாட்டார்களே. மனிதன் வாழ்வின் தேவையை எல்லையற்றுத் தன்னை மறந்து பெருக்கிக்கொண்டதன் விளைவோ இது என்று அஞ்சக் கூடிய வகையில் இன்றைய உலக நிகழ்ச்சிகள் நடை பெறுகின்றன. நல்லவர்கள் அந்த அழிவுச் சக்திகளை மடித்து மறைத்து ஒழிக்கவேண்டும் என்கின்றனர். ஆம். இன்றைய சமுதாயத்தின் தேவை அந்த அழிக் கும் சக்திகளை அழிப்பதேயாகும். ஆதி மனிதன் தன்னை வாழவைக்கும் சத்தியை உருவாக்கும் தொழிற் சாலைகளை அமைக்கும் திறனில் தன்னை வளர்த்தான். இடைக்கால மனிதனும் அதே எண்ணத்தில் உலகை வாழவைக்கும் எண்ணற்ற தொழிற்சாலைகளை உண் டாக்கி வளர்த்து உலக சமுதாயத்தை வாழவைத்தான், ஆனால்-இன்றைய மனிதன்-இருபதாம் நூற்றாண்டில் செல்லும் நாகரிகத்தில் வல்லவனாகிய மனிதன் மனித சமுதாயத்தை மட்டுமன்றி உயிர்ச் சமுதாயத்தை அழிப்பதையே தன் வாழ்வின் தேவையாகக் கொண்டு அதற்கேற்ற தொழிற்சாலைகளை உலகெங்கணும் உண் டாக்கிக்கொண் டிருக்கிறான்! கடவுளைப்பற்றிக் கூறு பவர் யுகாந்த காலத்தில் திரிபுரமெரித்த விரிசடைக் கடவுள் உலக அரங்கில் சம்மாரமூர்த்தியாக உருவு கொண்டு ஆடல்புரிவான் என்பர். அந்த நாள்தான் இன்று வந்துவிட்டதோ என்று எண்ணுமாறு உலகச் செயல்கள் செல்லுகின்றன. ஆண்டவன் உண்மையில் அப்படியே வந்தாலும் உயிர்களின் நலன் கருதி அவற் றைக் காத்தே மாற்றுப் பொருள்களை அழிப்பான் என்பர்; அதையே 'துட்டநிக்கிர சிட்ட பரிபாலனம்' எனவும் கூறுவர். ஆனால் இன்றைய மனிதன் தான் உட்பட அனைவரையுமே அழிக்கும் தேவையை நாடு கிறான். இதைத் தவறு என உணர்கின்றவர்களும் காட்

டவும் கூறவும் அஞ்சுகின்றார்கள்; ஏன் ? அவன் உதவி யையும் உறுதுணையும் நாடும் காரணமாக இருக்கலாம். ஆனால் உண்மையில் மனித சமுதாயம் வாழவேண்டு மானால் அதன் தேவை ஆக்கத் துறைக்கு வழிகோலுவ தாக அமையவேண்டும். இனியாயினும் நல்லவர் அத்துறைக்கு வழிகாட்டின் உலக சமுதாயம் வாழத் தோன்றிய அத்தனை தொழில்களும் வாழும். அன் றேல்-யாரே விடை கூறவல்லார் ?

## 3. தமிழ் நாடு – முன்னாளில் தொழில் வளம்

தமிழ்நாடு காலத்தால் முந்தியது. உலகில் சில பாகங்களே தொன்மை வாய்ந்தவை என்று நில்நூல் ஆராய்ச்சியாளர் அறுதியிடுவர். அவற்றுள் ஒன்று தமிழகம். விந்திய மலைக்கு வடக்கே பெருங்கடல் இமயத்தைத் தன்னுள் ஆழ்த்தி வைத்திருந்த அந்தப் பழங்காலத்திலே தமிழகம் தெற்கில் விரிந்த நிலப் பரப்பை உடையதாகிக் குமரிமலை, குமரிஆறு, பஃறுளி யாறு போன்றவற்றைக் கொண்டு சிறந்திருந்தது. ஒரு காலத்தில் குமரி மலையும், ஆறும் பிறவும் அழிய அதே காலத்தில் தோன்றிய இமயத்தையும் கங்கையையும் தமவாகக் கொண்டு பாண்டியர் ஆண்டார்களென்று சிலப்பதிகாரம் செப்புகின்றது[1]. இந்தத்

1. பஃறுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கை இமயமும் கொண்டு
தென்திசை ஆண்ட தென்னவன்
(சிலம் 11 : வரி. 24-27)

தமிழ்நாட்டு இலக்கியக் கூற்றை நில ஆராய்ச்சியாளர்களும் வரலாற்றுளர்களும் மெய் எனவே தங்கள் ஆராய்ச்சியால் விளக்கிக் காட்டுகின்றனர். எனவே காலத்தால் முந்திய தமிழ்நாடு பல வகையில் சிறந்திருந்திருக்கும் என்பதில் ஐயமில்லை யல்லவா!

தமிழ்நாடு பண்பாடு, இலக்கியம், கலை முதலியவற்றில் சிறந்திருந்தது என்பதை இன்று உலக முழுதும் அறிந்து போற்றுகின்றது. அப்படியே தமிழ் நாட்டில் பழங்காலத்தில் பல்வேறு கைத்தொழில்களும் சிறந்திருந்தன என்பதையே நாம் இங்கே காணல் வேண்டும். எத்தனையோ கலைகளில் சிறந்திருந்த தமிழ் நாடு தொழில் துறையில் முன்னேற்றம் அடைந்திருந்ததில் வியப்பில்லையல்லவா! கிழக்கே சீன நாடு தொடங்கி, சுமத்திரா ஜாவா முதலிய தீவுகளிலிருந்தும் மேற்கே மத்தியதரைக் கடல் நாடுகள் தொடங்கி எகிப்து, சிறிய ஆசியா, துருக்கி முதலிய நாடுகளிருந்தும் மக்கள் வந்து தமிழ்நாட்டு இருபுறக் கடற்கரைகளிலும் கொண்டும் கொடுத்தும் தத்தம் வாணிப வளனைப் பெருக்கிக் கொண்டார்கள் என்றும், அவ்வாறு வெளிநாட்டிலிருந்து வந்தவர்கள் நிலைத்துத் தங்கிய தெருக்கள் மதுரையிலும் புகாரிலும் வஞ்சியிலும், இருந்தன என்றும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுற்பட்ட இலக்கியங்கள் நமக்குச் சான்று பகர்கின்றன.

*‘ முத்து குளிப்பதொரு தென் கடலிலே*
*மொய்த்து வணிகர்பல நாட்டினர் வந்து*
*நத்தி நமக்கினிய பொருள் கொணர்ந்து*
*நம்மருள் வேண்டுவது மேற்கரையிலே ’*

என்று விடுதலைக் கவிஞர் இந்த நூற்றாண்டில் இப்பாட்டைப் பாடினார் என்றாலும் இந்த நிலை இரண்டா

யிரமாண்டுகளுக்கு முன்பும் தமிழ் நாட்டில் இருந்த நிலையேயாகும். அவ்வக் காலத்தில் வாழ்ந்த புலவர் களும் வரலாற்றாளர்களும் இந்த உண்மையைக் கூறாது சென்றதில்லை.

இன்று உடை தயாரிக்கும் கைத்தறித் தொழிலும் நூலும் உடையும் தயாரிக்கும் ஆலைத்தொழிலும் பொதுவாக இந்தியாவிலும் சிறப்பாகத் தமிழ்நாட்டி லும் சிறந்து போற்றப்படுகின்றன. இந்தியாவின் கைத் தறித் தொழிலில் பெரும் பகுதி தமிழ்நாட்டிலேயே நடைபெறுகிறது. அப்படியே மதுரையும் கோவை யும் ஆலைகளைப் பெருக்கி வளர்க்கின்றன. இந்த ஆடை நெய்யும் தொழில் தமிழ்நாட்டில் பழங்காலத்தில்–வர லாறு வரையறுக்கப் படாத காலத்தில்–நிலைத்திருந் தது. பெரு நகரங்களிலும் சிறு சிறு ஊர்களிலும் ஆடை நெய்வோர் தெருக்களே தனித்தனியாக இருந் தமை காண்கின்றோம். அவர்கள் வெறும் பருத்தியால் மட்டுமன்றிப் பட்டினும் கம்பளமாகிய மயிரினும் கூட ஆடை நெய்தார்கள் எனக் காண்கின்றோம்.

‘பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்
கட்டு நுண்வினைக் காருகர் இருக்கை’
(சிலப் 5 : 15 - 16)

நூலினும் மயிரினும் நுழை நூற்பட்டினும்
பால்வகை தெரியாப் பன்னூ றடுக்கத்து
நறுமடி செறித்த அறுவை வீதியும்
(சிலப் - 14 : 205 - 7)

எனப் புகார் நகரச் சிறப்பையும் மதுரைப் பெரு நகர் இருந்த சிறப்பையும் சிலப்பதிகாரம் பாராட்டு கின்றது. அந்தப் பட்டினைப் பல்வேறு வண் ணங்கள் தோய்த்தும் சரிகையிட்டும் மென்மை

யாக்கியும் தாம் அணிந்ததோடு செல்வர்கள் தம்மைப் பாடவந்த புலவர்களுக்கும் அத்தகைய உயர்ந்த பட்டாடைகளையே பரிசாக வழங்கினுர்கள் எனக் காண்கின்ருேம். இக்காட்சி தமிழ் இலக்கியத்தில் பல இடங்களில் காட்டப் பெறுகின்றது. நாம் ஒன்றிரண்டு கண்டால் போதும் என எண்ணுகின்றேன்.

பத்துப்பாட்டில் வருகின்ற ஆற்றுப்படைத் தலைவர், ஒவ்வொருவரும் தம்மைப்பாடி வந்த பரிசிலருக்கு இத்தகைய பட்டாடை நல்கினர் என்ற சிறப்பை,

'கொட்டைக் கரைய பட்டுடை நல்கி' (பொருந: 155)

எனக் கரிகாலனைப் பாடிய முடத்தாமக் கண்ணியாரும்,

'காம்பு சொலித்தன்ன அறுவை நல்கி'

(சிறுபாண் : 236)

என நல்லியக் கோடனைப் பாடிய நத்தத்தனும்

'ஆவி யன்ன அவிர் நூற் கலிங்கம்' (பெரும்பாண் : 469)

என இளந்திரையனைப் பாடிய உருத்திரங்கண்ணனும் பாராட்டியுள்ளனர். இவற்ருல் பட்டாடைகள் நல்ல வண்ணக் கரைகளோடு விளங்கியிருந்தன எனவும், ஒளி வீசும் நிறத்தனவாக அழகாக விளங்கின என்வும், பாலாவியைப்போன்று மென்மையுடையனவாக இருந்தன எனவும் காண்கின்ருேம். இன்று பல ஆலைகள் இத்தகைய தனிவகை (ரகங்கள்) ஆடைகள் நெய்வதாக விளம்பரம் சாற்றுவதை நாம் காண்கிருேமல்லமோ! எனவே ஆடை நெய்தற்ருெழில் இரண்டாயிரமாண்டுகளுக்கு முன்பே உயர்ந்திருந்ததென அறிகின்ருேம். அவ்வகைகள் 'எத்தகைய பேராலைகளில் நெய்தார்கள்; எப்படி நெய்தார்கள்?' என்பன போன்ற

சான்றுகள் இன்று நமக்குக் கிடைக்கவில்லை என்றாலும், அன்று விண்தோய் புகை போக்கிகள் இருந்ததாகவும் இலக்கியங்கள் காட்டுகின்றன. ஆங்கில அரசின் காலத்தில் 'டக்கா மஸ்லின்' போன்ற மெல்லிய நல்லிழைத் துணிகளின் தொழில் வளம் நசித்த வரலாற்றை அறிந்த நமக்கு, பல்வேறு படையெடுப்புக்கு உட்பட்ட தமிழகத்தில் அத்தகைய தொழில் இடைக்காலத்தில் நசித்தமைக்குக் காரணம் விளக்கத் தேவையே யில்லையன்றோ!

மற்றும் ஆடையின் பெயர்கள் அமைந்த நிலை கொண்டே அத்தொழில் வளத்தை நன்கு அறியலாம். நீண்ட பாவிலிருந்து அறுப்பதை 'அறுவை' என்றும் துண்டிப்பதைத் 'துண்டு' என்றும் துணிப்பதைத் 'துணி' என்றும் வெட்டுவதை 'வேட்டி' என்றும் காரணத்தோடு பெயரிட்டு வழங்கிய இத்தொழில் பழங்காலத் தொழில் என்பதோடு மட்டுமன்றி, இன்றும் வெளிநாடுகளுடன் வாணிபம் செய்யத்தக்க வகையில் நல்ல வண்ண ஆடைகளைப் பெருக்கும் தொழிலாக அமைந்திருப்பதை அறிகின்றோம்.

ஆடைக்கு அடுத்துப் பல உண்கலப் பொருள்களையும் வேறு பல வீட்டுப் பொருள்களையும் அன்றைய இலக்கியங்களில் காணும்போது நாம் வியக்கவேண்டியுள்ளது. இன்று அரசாங்கப் பொருள் உதவியும் தொழில் நுட்ப உதவியாளர் பக்கத்துணையும் இருந்தும் எத்தனையோ தொழில்கள் வளராது நசிவதைக் காணும் நமக்கு, நம் முன்னோர் அழகுற வளர்த்த கலை நலத்தோடு கூடிய உலோகத் தொழில்களை எண்ணி வியக்கத் தோன்றுகின்றது. மக்கள் உண்ணும் கலன்கள் பொன்னாலும் பிற உலோகங்களாலும் அழகுற அமைந்திருந்த சிறப்பை,

*'பெறலருங் கலத்தில் பெட்டாங்கு உண்கென*
(பொருந: 156)

*'இளங்கதிர் ஞாயிறு எள்ளுந் தோற்றத்து*
*விளங்கு பொற்கலத்தில் விரும்புவன பேணி'*
(சிறு : 243 - 4)

*'மீன்பூத்தன்ன வான்கலம் பரப்பி'* (பெரும் : 477)

என்று பெறுதற்கரியதும், சூரிய ஒளியும் பின்னடை யும் பொன்னாலாகியதும், மீன்கள் பூத்தனபோன்று ஒளிவிடுவதுமாகிய கலம் என்றும் புலவர்கள் பாராட்டி யுள்ளார்கள். உண்ணும் கலமும் உடுக்கும் உடையுமே இந்த வகையில் அழகுற அமைந்திருந்தன வென்றால் பிற தொழில்கள் சிறந்திருந்தன என்று சொல்லவும் வேண்டுமோ !

பொன்னாலும் மணிகளாலும் பலப்பல வகையான அணிகள் செய்யும் தொழில் அக்காலத்தில் சிறந்திருந் தது. தாமரை-பொன்மலர் நாற்றமுடைத்து என்பது போன்று-ஒளியுடன் கூடி விளங்கும் வகையில் கைவண்ணத்திறன் காட்டிய தொழிலாளர் அக்காலத் திருந்தனர். யானையின் தந்தங்களைக் கொண்டு பல் வேறு வேலைப்பாடமைந்த தேர் செய்த தச்சர் அக் காலத் திருந்தனர். ஒளிபொருந்திய பல முக அமைப் போடு கூடிய வண்டிகளும் கப்பலும் படகும் செய்த வரும், தேர் செய்தவரும், சுடுமண்ணால் பெருங்கரையே சமைத்தவரும் தமிழ் நாட்டில் இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன்பே வாழ்ந்து வந்தனர். இவற்றை யெல்லாம்,

*'எரியகைந்தன்ன ஏடில் தாமரை'* (பொரு : 159)
*'நூலின் வலவா நுணங்கரில் மாலை*
*வாலொளி முத்தமொடு பாடினி அணிய'* ( ,, 161-62)

'கோட்டாற் செய்த கொடுஞ்சி நெடுந்தேர்' ( ,, 163)

என்ற முடத்தாமக் கண்ணியார் சொற்களும்,

'வண்முகப் பாண்டில்' (சிறுபாண் : 260)
'தச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த
ஊரா நற்றேர் உருட்டிய புதல்வர்' .
(பெரும்பாண்: 248-9)
' நாவாய் சூழ்ந்த நளிநீர் படப்பை ' ( ,, 328)
தாமரைப் பொகுட்டின் காண்வரத் தோன்றிச்
சுடுமண் ஓங்கல் நெடுநகர் வரைப்பு ' ( ,, 403-4)
'பொலந் தாமரைப் பூச்சூட்டியும்' (மதுரை: 103)

என்ற பிற புலவர்தம் வாய்மொழிகளும் நமக்கு நன்கு விளக்குகின்றன வன்றோ! நகரமைப்புபற்றி இன்று நாம் பேசுகின்றோம். அன்றைய நகர் அமைப்பைப் பற்றிய அடி நம்மைத் திகைக்க வைக்கின்றது. தாமரை மலரை ஒத்த நகர அமைப்பினை மேற்கொண்டு திறம் படத் தொழில் இயற்றி அக்கால நகரங்களை அமைத்த பெருமை தமிழருக்கு உண்டன்றோ!

இத்தகைய நகர அமைப்புக்கும் பிற பணிகளுக் கும் இன்றைய நிலை போன்றே அன்றும் இரும்பு முக்கிய இடம் பெற்றது. ஆயினும் இன்று நாம் பெறும் சிமிட்டி அன்று இல்லை. அதற்குப் பதிலாக உயர்ந்த நிலையில் சுதை அல்லது சுண்ணும்பு பயன்பட்டதை நன்கு அறிகிறோம். சுண்ணும்பு, இரும்பு, மரம் இவற் றைக் கொண்டு வானோங்கிய மாளிகைகளைக் கட்டிய தொழிலாளர்கள் தமிழ் நாட்டில் எங்கணும் பழங்காலத் தில் சிறந்திருந்தனர். அவர்தம் பரம்பரையினரே இடைக்காலத்தில் வானோங்கிய கோபுரங்களோடு கூடிய, பிற நாட்டார் கண்டு கண்டு வியக்கும் பெருங் கோயில்களைக் கட்டியவர்கள். அந்த நிலையைப் பிறகு

காணலாம். இரும்புக் கொல்லரும், மரம்கொல் தச்சரும் பிற கம்மியரும் சிறக்க வாழ்ந்தார்கள் என்பதை,

'கருங்கைக் கொல்லன் இரும்பு விசைத்தெடுத்த கூடம்'
(பெரும்: 437)

இருந்த காஞ்சியென்று, காஞ்சிபுரத்தை உருத்திரங் கண்ணனுர் காட்டுவர்.

'கோடுபோழ் கடைநரும் திருமணி குயினரும்
சூடுறு நன்பொன் சுடரிழை புனைநரும்
பொன்னுரை காண்பரும் கலிங்கம் பகர்நரும்
செம்புநிறை கொண்மரும் வம்புநிறை முடிநரும்
பூவும் புகையும் ஆயும் மக்களும்
கண்ணுள் வினைஞரும் பிறரும் கூடி' (மதுரை: 511-18)

மதுரைப் பெருநகரில் அத்தலைநகரின் தொழில் வளத்தைப் பெருக்கினுர்கள் என்று மாங்குடி மருதனுர் பாராட்டுகின்றுர்.

இத்தகைய வெள்ளியும் பொன்னும் மணியும் மரமும் கொண்டு அமைத்த கோயிலில் பல்வேறு தொழில்வளம் மிக்கிருந்த சிறப்பை நக்கீரர்,

'ஆடவர் குறுகா அருங்கடி வரைப்பின்
வரைகண் டன்ன தோன்றல, வரைசேர்பு
வில்கிடந் தன்ன கொடிய, பல்வயின்
வெள்ளி யன்ன விளங்கு சுதை யுரீஇ
மணிகண் டன்ன மாத்திரள் திண்காழ்
செம்பியன் றன்ன செய்வுறு நெடுஞ்சுவர்
உருவப் பல்பூ வொருகொடி வளைஇ
கருவொடு பெயரிய காண்பின் நல்இல்
(நெடுநல் :107-114)

என்று விளக்கிப் பாண்டிமாதேவியார் தங்கிய அப் பெருமாடத்தையே நம் கண்முன் கொண்டுவந்து வைக்கின்றுர். ஆடவர் எளிமையில் குறுக முடியாத

அருங்காவலுடையது ; மலைபோல் உயர்ந்தது ; பல கொடிகளாகிய உச்சியை உடையது; அதன் சுண்ணும் பிட்ட சுதைநிறம் வெள்ளியையும் தோற்றேடச் செய்தது; பல வயிரங்கள் நிறைந்து செம்பிறுற் செய்த நல்ல சுவருடன் பல கைவண்ணச் சித்திரங்களுடன் கூடிய உள்ளோடு(கர்ப்பக் கிரகம்) நின்ற நல்இல் அது என அவர் நமக்கு விளக்கும்போது அக்காலத்திய உயர்ந்த கட்டடக் கலையும் அதைப் போற்றி வளர்த்த தொழில் திறமும் நம்மை வியப்புக்குள் ளாழ்த்திவிடவில்லையா !

இத்தகைய மக்களுக்கு இன்றியமையாத உடை, உணவு, உறையுள் என்ற மூன்றையும் திறம்பட ஆக்கியும் செப்பனிட்டும் தரும் தொழில் வளத்தோடு பிற எல்லாத் தொழில்களும் தமிழ் நாட்டில் சிறந்திருந்தன என்பதைப் புறநானூறு போன்ற பல இலக்கியங்கள் நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. போர்க்களத்துக்கு வேண்டிய பல்வேறு படைக்கலங்களைக் கல்வை உலோகமாகிய எஃகினுல் செய்து அந்த ஆயுத்த்தை 'எஃகம்' என்றே அழைத்த பெருமை தமிழருக்கு உண்டு. எனவே தமிழ் நாட்டில் எத்தனையோ விடங்களில் உருக்காலைகள் இருந்திருக்க வேண்டும் என்பது வெள்ளிடைமலை யன்றோ! போர்க்களத்தில் பயன்படுத்துவதற்கும், மாற்றாரிடத்திலிருந்து தம்மைப் பாதுகாப்பதற்கும், நகரங்களை எதிரிகளிடமிருந்து மீட்பதற்கும் செய்யப்பெற்ற பல ஆயுதங்களும் பல இயந்திரங்களும் பிறவும் பழங்கால இலக்கியங்களில் பலவிடங்களில் சிறக்கப் பேசப்பெறுகின்றன.

வாயிலொடு புழைஅமைத்து
ஞாயில்தொறு-புதை நீரீஇ ' (பட்டினப்: 287-8)

என்பர் உருத்திரங்கண்ணனார். மதுரை நகரப்புற மதில்களில் வைக்கப்பட்ட பல்வேறு இயந்திர சாதனங்களைச் சிலப்பதிகாரமும் பிற இலக்கியங்களும் காட்டும்போது அந்த எல்லையில் நாம் இன்றும் இல்லை என எண்ணி வியக்கவேண்டியுள்ளதன்றோ! பிறரை அழிக்கும் கருவிகளை வளர்க்கும் அந்த அளவில் நம்மைக் காத்துக்கொள்ளும் கருவிகளைச் செய்துகொள்ள நாம் முன்னேறவில்லை யல்லவா! எத்தனையோ உலோகத் தொழிற்சாலைகள் போர்க் கருவிகள் தற்காப்புக் கருவிகள் போன்ற நாட்டுத் தேவைகளையும், இரும்பாலும் செம்பாலும் வெள்ளியாலும் பொன்னாலும் இயற்றிய—பல வீட்டுக்குரிய சாமான்களையும் செய்த—தொழிற் பேட்டைகளும் தொழிற் பட்டறைகளும் நாட்டில் பல பாகங்களிலும் சிறந்து விளங்கின என்பது தேற்றம்.

இனி இத்தகைய தொழில்வளம் சிறந்த நாட்டில் வாணிப வளம் சிறந்தோங்கியிருக்கும் என்பது சொல்லாமலே அமையு மல்லவா! கடைச்சங்க காலமாகிய இன்றைக்கு ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் கீழைக் கடற்கரையில் 'புகார்' என்னும் காவிரிப் பூம்பட்டினமும் மேலைக் கடற்கரையில் 'வஞ்சி' என்னும் இன்றைய கொச்சியும் துறைமுகங்களாக விளங்கின. இந்த இரு கடற்கரைத் தலைநகர்களிலும் பல்வேறு நாட்டவர் வந்து தங்கி, கொண்டும் கொடுத்தும் வாணிப வளனைப் பெருக்கினார்கள் எனக் காண்கின்றோம். இரண்டும் இன்று நிலைகெட்டன. புகார் அழிந்து சிற்றூராகி விட்டது. வஞ்சி நிலை மாறி இன்று வேறு வகையில் வளர்கின்றது. பாண்டிய நாட்டுக் கொற்கை முத்து வாணிபத்தைச் சிறக்க நடத்திய கொற்கை சிற்றூராகக் கிடக்கின்றது. பதிலாகத் தூத்துக்குடி வளர்வது ஆறுதல் தருகின்றது. கடற்கரையில்

கப்பல்களாகிய கலங்கள் திசை அறிய அமைத்த விளக்கின் சிறப்பை இளங்கோவடிகள்,

'இலங்குநீர் வரைப்பிற் கலங்கரை விளக்கமும்'
(சிலப்: 6–141)

எனக் குறிப்பிடுவர். பிறநாட்டு வணிகராகிய யவனர் தம் குறிகாட்ட விளக்கமைத்தனர் என்பதை,

'யவனர் ஓதிம விளக்கு' (பெரும்: 317)

எனக் காட்டுவர். இந்த நிலையே இன்று விளக்கொளி காட்டும் 'விளக்குத் தம்பம்' (Light House) என்ற பெயரில் வழங்குகின்றது. இவ்வாறு கடல்மேற் சென்ற கலங்களில் பல பண்டங்கள் வந்தன என்ற உண்மையை,

'வாலிதை எடுத்த வளிதரு வங்கம்
பல்வேறு பண்டம் இழிதரு பட்டினம்' (மதுரை: 536-7)

என மாங்குடி மருதனார் காட்டுகின்றார்: ஆம்! இக்காலத்தைப் போன்று பலவகையில் இலங்கும் பெருங் கப்பல்கள் இன்றேனும், காற்றால் செலுத்தப்பெற்ற பெருங் கப்பல்கள்-வங்கங்கள்–நாட்டில் பெரு வாணிபம் நடைபெற அடிப்படைக் காரணங்களாக இருந்தன. பல வங்கங்கள் உலவிய காரணத்தால்தானே இதைத் தமிழர், தம் 'வங்கக் கடல்' என அழைத்தார்கள் என்று எண்ணவேண்டியுமுள்ளது.

அவ்வாறு பல கப்பல்கள் பல்வேறு பொருள்களை ஏற்றியும் இறக்கியும் நின்ற சிறப்பினை உருத்திரங் கண்ணனார்,

'நீரினின்று நிலத்தேறவும்
நிலத்தினின்றி நீர்பரப்பவும்
அளந்தறியாப் பலபண்டம்
வரம்பறியாமை வந்தீண்டி' (பட்டின: 129-33)

என்று காட்டுவர். வரம்பறியாத, அளக்க முடியா அளவில்-அத்துணை அளவில் பண்டங்கள் இறங்கியும் ஏறியும் சென்றாலும் அவற்றை அளந்தே, அங்கங்கே இருந்த அலுவலர் கணக்கிட்டுத் தம் நாட்டு முத்திரையாகிய புலி இலச்சினையை இட்டே வெளி அனுப்பினர் எனக் காண்கின்றோம். இக்காலத்தில் சுங்கச் சாவடி (Custom House) போன்று அக்காலத்தும் துறைமுகப் பட்டினங்களில் சாவடிகள் இருந்து வெளி நாட்டு வாணிபத் துறையைத் திறம்பட வளர்த்துக் காத்தன என அறிகின்றோம்.

'புலிபொறித்துப் புறம் போக்கி' னர்கள் (பட்டினப்:135)

எனக் காட்டுவர் உருத்திரங் கண்ணனார். புகார் நகரின் வாணிபப் பொருள்கள் பல. அவற்றுள் ஒரு சில வற்றையே ஆசிரியர் வரிசைப்படுத்திக் காட்டுகின்றார்; நாமும் காண்போம்:

'நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலை பிறந்த மணியும் பொன்னும்
குடமலை பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடற் றுகிரும்
கங்கை வாரியும் காவிரிப் பயனும்
ஈழத் துணவும் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவும் நெரிய வீண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகு'. (பட்டி. 185-193)

என அவர் அந்நகரின் வாணிப வளனை நன்கு காட்டுகின்றார். இந்த அடிகளால் தமிழ்நாடு பிற நாடுகளோடும் இந்தியநாட்டுப் பிற பகுதிகளோடும் கொண்ட வாணிபத் தொடர்பு பற்றி ஒருவாறு அறிந்துகொள்ள முடிகின்றதன்றோ! இத்தகைய வாணிப வளனை

வளர்த்த 'புகார்' நகரைக் கடல் கொண்டது. இன்றைய உரிமை அரசாங்கத்தார் அகழ்ந்தெடுத்து அந்த நகர் சிறந்த துறைமுகமாக விளங்கிய சிறப்பினை வெளிக்காட்ட முனைந்திருப்பது போற்றற்குரிய ஒன்றாகும்.

இனி, இத்தகைய வாணிபத்தை வெறும் புற ஆரவாரத்தோடு மட்டுமன்றி உள்ளப் பண்போடும் நடத்தி வந்தார்கள் எனக் காண்கின்றோம். இன்றைய வாணிகத்துறையில் உள்ள குறைபாடுகளைக் காணவும் கண்டு ஒறுக்கவும் அரசாங்கத்தார் எத்தனையோ முறைகளைக் கையாளுகின்றார்கள் அன்றோ! ஆகவே வாணிபம் வளர்ந்தால்மட்டும் போதாது; அது பண்பட்ட நல்ல முறையிலும் நடைபெற வேண்டும் என்ற உண்மையை அன்றே தமிழ் மக்கள் உணர்ந்திருந்தார்கள். இதையே உருத்திரங்கண்ணனார்.

*'கொள்வதூஉம் மிகை கொள்ளாது*
*கொடுப்பதூஉம் குறை படாது'* (பட்டினப்: 210—11)

என்ற ஒன்றைக் காட்டி உணர வைத்துள்ளார். திருவள்ளுவரும்,

*'வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணி*
*பிறவும் தமபோற் செயின்'* (குறள்: 120)

என்ற அடிகளிலே எல்லா நேர்மைத் திறங்களையும் அடக்கிவிட்டார். எனவே வாணிபம் பெருத்த அளவில் மட்டுமன்றித் திருத்தமான செம்மை முறையிலும் நடைபெற்றுவந்த பழங்காலத்தை எண்ணி மகிழ வேண்டாமா! ஆம்! மகிழ்ந்தார் பலர். எனவே பல நாட்டு மக்கள் இந்நாட்டுக்கு வந்து இங்கேயே தங்கிப் பல்வேறு வாணிபங்களைச் செய்து சிறந்தார்கள் எனக் காண்கின்றோம். இந்த உண்மையினையும் அதே புலவர், உருத்திரங் கண்ணனார்

'மொழிபல பெருகிய பழிதீர் தேயத்து
புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்
முட்டாச் சிறப்பிற் பட்டினம்' (பட்டின: 216—18)

எனக் காட்டுவர். இவற்றால் பல மொழி பேசிய பல நாட்டு மக்கள் தத்தம் நாட்டுக்குப் பழி உண்டாகாத வழியில் நேரிய முறையில் வாணிபம்செய்யத் தத்தம் நாடுகளைவிட்டு இங்கே வந்து தங்கியிருந்தார்கள் என அறிகின்றோம். இன்றைய வணிகரில் பலர் தத்தம் தேயத்தைப் 'பழிதீர் தேயமாக்க வில்லையே' எனப் பல நாட்டு அரசாங்கங்கள் வருந்துவதைக் காண்கிறோம். தமிழ்நாட்டிலும் அண்டை நாட்டிலும் சில ஆண்டுகளுக்குமுன் அத்தகைய பழி உண்டாகிச் சில பொருள்களில் வெளிநாட்டு வாணிபம் குறைவுற்றமை இன்னும் நெஞ்சிலிருந்து நீங்கவில்லை யல்லவா!

இவ்வாறு பழங்காலத்தில் தமிழ் நாட்டில், பல்வேறு தொழில்களும், அத்தொழில்கள் பற்றிய வாணிப வளனும், அவற்றிற் கேற்பப் பொருளாதார நலனும் பெருகியிருந்தன என்பதைக் காண்கின்றோம். இவற்றையெல்லாம் விளக்கும் இலக்கியங்கள் பல. எனினும் விரிவஞ்சி 'பத்துப்பாட்டு' என்று ஒரு தொகையையே ஈண்டு நான் எடுத்துக்கொண்டேன். பிற தொகை நூல்களும் சிலம்பு மேகலை போன்ற காவியங்களும் அக்கால வாணிப வளனையும் தொழில் செழிப்பையும் காட்டிக் காட்டிப் போற்றுவதை அவ்வவற்றுள் புகுந்து தமிழ் மக்கள் அறியக் கடமைப்பட்டவர்கள் என்பதை ஈண்டு நினைப்பூட்டுவது தவறில்லை என எண்ணுகிறேன். சிலப்பதிகாரத் தலைவனே பெரு வாணிகன். அவனை முன்நிறுத்திக் காப்பியம் எழுதிய இளங்கோவடிகளும் அவரடி யொற்றி மேகலையை யாத்த சாத்தனாரும் அக்காலத்தில் முடியுடை மூவேந்தர்

தம் தமிழ் நாட்டையும் அவர்தம் தலை நகரங்களையும் அவற்றுள் கொழித்த தொழில் வளனையும் அதன்வழி விரிந்து சிறந்தோங்கிய நல்ல வாணிப வளனையும் பல வகையில் விளக்குவதை இரு காப்பியங்களையும் பயின் றவர் நன்கறிவர். மற்றவரும் கற்று அறிந்து போற்றி அத்தொழில் வளத்தையும் வாணிபத்தையும் இன்றும் என்றும் வளர்க்க ஆவனசெய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, அக்காலத்தை விட்டு இடைக் காலத் தில் தமிழ்நாட்டின் சிறந்த தொழில் வளத்தையும் வாணிபச் சிறப்பையும் காண நினைக்கின்றேன்.

கடைச் சங்க காலத்திற்குப் பிறகு தமிழ் நாட்டில் ஓர் இருண்ட காலத்தைக் காண்கின்றோம். அக்காலத் தில் தமிழ் நாட்டுக்கு வந்தவர் பலர். அவருடன் பல சமயங்களும் நாகரிகப் பண்பாட்டுப் பழக்க வழக்கங் களும் குடியேறின. அவற்றிற்கேற்ற வகையில் பல் வேறு பழந்தொழில்கள் நிலைமாறப் பலப்பல புதுத் தொழில்கள் இடம்பெற்றன. ஏழாம் நூற்றாண்டில் தமிழ் நாட்டுக்கே முற்றும் புதியவராகிய பல்லவர் வருகை தந்து சிறக்க ஆண்ட வரலாற்றைக் காண் கின்றோம். அக்காலத்தில் அதுவரையில் தமிழ் நாட் டில் காணமுடியாத குகைகளைக் குடைந்து செப்பம் செய்து அழகுபடுத்தும் ஒரு புதுவகைத் தொழில் வளரக் கண்டோம். அஜந்தா, எல்லோரா, எலிபெண்டா விலுள்ள குகைக் கோயில்கள் ஆகியவற்றைப்போல் அத்துணைப் பெரிய அளவில் இன்றேனும் நாட்டின் பல பாகங்களிலும் அவை உண்டானதைக் கண்டோம். அப்படியே பல இசைக் கருவிகளும் வேறுபல் பொருள் களும் புதிதுபுதிதாக நாட்டில் உலவியதைக் காண் கின்றோம். கோயில் அமைப்பும் அவர்கள் காலத்தி லேயே மெல்ல மெல்ல மாறி ஏற்றக்குறைய பிற்காலச்

சோழர்கால அமைப்பினை போன்ற அளவில் வளரத் தொடங்கிற்று. எனவே சமய அடிப்படையில் எழுந்த கோயில்களும் அக்கோயில்களுக்குத் தேவையான பல உலோக விக்கிரகங்களும், பிற பொருள்களும் உண்டாக்கத் தக்க தொழில்வளம் பெற்றிருந்தது. மேலும் அக்கோயில்களுக்கு வந்து வழிபடுபவர்கள் பலவேறு ஆடைகளையும் அணிகளையும் அணிந்திருந்தார்கள் எனக் காண்கின்றோம். ஆடற்கலையும் பாடற்கலையும் கோயில்களில் இடம்பெற்றிருந்தன. அக்காலத்திலும் அதற்கடுத்த சில காலங்களிலும் கோயில்கள் மக்கள் பொது மன்றங்களாக (Community Centres) மாறி நாட்டுத் தொழில்களையும் கலைகளையும் வளர்த்தன. அக்காலத்தில் பழம்பெருந் துறைமுகங்கள் இன்றேனும் மாமல்லபுரம் சிறந்த கடற்கரைப் பட்டினமாக விளங்கி நின்றது. கடற்கரை முழுதும் சிறுசிறு படகோடும் துறைமுகங்கள் இருந்தன என்று தேவாரங்கள் போன்ற பல பாடல்கள் மூலம் நன்கு உணருகிறோம். நாகைப்பட்டினம் சிறந்த துறைமுகமாக அக்காலத்தில் விளங்கிற்று. புகாரில் இறங்கிய குதிரை முதலிய பிறநாட்டுப் பிராணிகளும் பிற வாசனைப் பொருள்களும் நாகையில் இறங்கின எனக் காண்கின்றோம். அதனாலேயே அக்கரையில் நின்று பாட்டிசைத்த சுந்தரர்.

> *‘ காற்றனைய கடும்பரிமா ஏறுவது வேண்டும்*
> *கடல்நாகைக் காரோணம் மேவி இருந்தீரே ’*

எனவும்,

> *‘ கத்தூரி கமழ்சாந்தம் பணித்தருளல் வேண்டும்*
> *கடல்நாகைக் காரோணம் மேவியிருந்தீரே ’*

எனவும் பாடினார்.

மற்றும் சம்பந்தர் பல இடங்களில் கலங்கள் உலவிய சிறப்பைப் பாடாமலில்லை.

> *கலங்கள் வந்துலவும் கழிப்பாலை யுளாய்*

எனவும், இன்னும் பலவகையிலும் பாடி விளக்கியுள்ளார். அவர் பல்லிடங்களில் கலங்கள் கடற்கரைப்பட்டினங்களில் நின்று பல்வேறு தொழிற்படு பொருள்களை வாணிபமாக்கி விற்றும் பெற்றும் சென்ற காட்சியைக் காட்டுகின்றார். மற்றும் எண்ணற்ற இசைக் கருவிகளை அவர் காட்டுகின்றார். அவற்றை யெல்லாம் செய்யும் தொழிற்சாலைகள் நாடெங்கும் இருந்தன எனக் காண முடிகின்றதன்றோ! இச்சிறு தொழில்கள் மட்டுமன்றி முகில்தோய் புகை கக்கும் புகைபோக்கிகளையுடைய பெருந் தொழில்களும் தஞ்சை நாட்டில் பலவிடங்களில் இருந்தன எனக் காண்கின்றோம். சிறப்பாகச் சர்க்கரை ஆலைகள் பல அக்காலத்தில் சோழ நாட்டில் இருந்திருக்க வேண்டும் எனத் தேவாரப் பாடல்களால் நன்கு அறிகிறோம். மற்றும் உழவும் அதன் வழிப் பெருகும் விளைவும் நன்கு பாராட்டப்பெறுகின்றதைஅறியும்போது அக்காலத் தமிழ்நாட்டு மக்கள் உழவையும் தொழிலையும் இரு கண்ணெனக் காத்துப் போற்றி வளர்த்து, தாமும் உண்டு பொது இடமாகிய கோவில்களில் சேர்த்து இல்லாதவர்க்கு அளித்தும் பஞ்ச காலங்களில் நாட்டுக்குப் பகிர்ந்து கொடுத்தும் ஒன்றிய வாழ்வில் வாழ்ந்தார்கள் என உணர முடிகின்றது. அத்தகைய நல்ல கூட்டு வாழ்வு இன்று நாட்டில் இல்லை என்றுகூடச் சொல்லலாம்.

பல்லவர் காலத்தை விட்டுப் பிற்காலச் சோழர் காலத்து வருவோமாயின் வரலாற்று ஆசிரியர்கள் அக்காலத்தைப் ‘பொற்கால’ மெனக் கூறுவதன் காரணம் நன்கு புலனாகும். அவர்கள் உண்டாக்கி வைத்த நில அமைப்பு, நில அளவு, சமயக் கோயில்கள், அவற்றின் வழிபாட்டுமுறை, இன்ன பிற இன்றளவும் மாறுதவகையில் அப்படியே இருக்கின்றமை அறிகின்

றேம். அக்காலத்திலும் அதற்கு முன்னும் பின்னும் எழுப்பிய வானோங்கிய கோயில்களை நினைத்துப் பார்க்கும் போது-அண்ணார்ந்து நோக்கும் போது-நாம்மட்டுமன்றி உலக மனித சமுதாயமே பெருமை கொள்ள முடிகின்றது. பொறியியற் கலை அக்காலத்தில் எத்துணைச் சிறந்திருக்க வேண்டும் என எண்ண முடிகின்ற தன்றே! வானோங்கிய கோபுரத்து உச்சியின் தளமாக ஒரு பெருங்கல்லைத் தஞ்சைக் கோயிலில் உபயோகித்திருப்பதைக் கண்டு கண்டு வியவாதார் யார்? எத்தகைய தூக்குச் சாதனங்களும் பிற வசதிகளும் இல்லாத அக்காலத்தில் இத்துணைப் பெருங் கோயில்களையும் கோபுரங்களையும் அவர்கள் எவ்வாறு கட்ட முடிந்தது? என்ற கேள்விக்கு யாரே விடைகொடுக்க முடியும்? பல நூற்றுண்டுகள் கழித்தும் மங்காத ஒளி வீசிக்கொண்டிருக்கும் அத் தில்லைக் கோயிலில் அமைத்துள்ள பொற்றகட்டின் வேலைப் பாட்டினை எண்ணிப் போற்ருதிருக்க முடியுமா? கோபுரங்களிலும் கோயில்களின் சுற்றுச் சுவர்களிலும் பிற பகுதிகளிலும் அமைத்துள்ள சித்திர வேலைப்பாடுகள் தாம் எத்தகைய தொழில்திறம் வாய்ந்தவை! வெண் சுதை கொண்டும் பல்வேறு வண்ணங்கள் கொண்டும் இயற்றிய பலப்பல காட்சிகள் இன்றும் நம்முன் நேற்றே செய்தன போன்று சிறக்க உள்ளன வன்றே! இவைகளையன்றி வெண்கலத்தாலும் செப்பாலும் சிலைகளும் தகடுகளும் அமைத்த பெருமையும், கற்களையும் உலோகங்கயும் பேசவைக்கும் வகையில் அவற்றில் எழுத்துக்களைப் பொறித்த பெருமையும் இக்காலத்தைச் சார்ந்தனவன்றே! கோயில்தோறும் நடந்த விழாக்களில்தான் எத்தனை வேலைப்பாடுகள்? மரத்தாலும் இரும்பாலும் பிற உலோகங்களாலும் அமைக்கப் பெற்ற தேர்களும் எண்ணற்ற வாகனங்களும் இன்

றனவும் வாழ்கின்றனவே. இவ்வாறு சமய அடிப்படையில் சோழர் காலத்தில் வளர்ந்த கைத்தொழில்கள் எண்ணற்றவை.

இவர்கள் காலத்திலும் நாகைப்பட்டினம் சிறந்த துறைமுகமாக விளங்கியதையும் சீனநாடு வரையில் வாணிபம் மட்டுமன்றி அரசியல் உறவும் தொடர்பும் கொள்ள அத்துறைமுகம் பெரிதும் பயன்பட்டதையும் காண்கின்றோம். மற்றும் அக்காலத்தில்தானே இராஜேந்திரன் கங்கையும் கடாரமும் கொண்டு வெற்றி வேந்தனாக விளங்கினான். வடநாடுவரை படைஎடுத்து வெற்றி கொண்டான் என்றால் எத்தனை எத்தனை ஆயுதங்கள் செய்யப் பெற்றிருக்க வேண்டும்? எத்தனை எத்தனை ஆயுதத் தொழிற்சாலைகள் நாட்டில் இருந்திருக்க வேண்டும்? மற்றும் கடல்மேற் கலஞ் செலுத்திக் கடாரம் போன்ற நாடுகளை வென்றதோடு சீனா, ஸ்ரீவிஜயம் (ஜாவா) போன்ற நாடுகளோடு அரசியல் தொடர்பும் அவர்கள் கொண்டிருந்தார்களென்றால் கப்பல் கட்டும் தொழில் எத்துணை முன்னேற்றம் பெற்றிருக்க வேண்டும் என உணரவேண்டும். வெறும் வாணிகக் கப்பல்கள் மட்டுமன்றிப் போர்க் கப்பல்களும் கட்டக் கூடிய பல பெருந் தொழிற்சாலைகள் தமிழ் நாட்டுக் கடற்கரையில் இருந்திருக்க வேண்டும் எனக் கொள்ளவேண்டு மல்லவா?

இவைகள் மட்டுமன்றி அக்காலத்தில் நாட்டில வீட்டுவாழ்வும் பிற பொதுவாழ்வுகளும் எத்தனையோ புதுப்புது வகைகளில் மாறியுள்ளமையைக் காண்கின்றோம். அதற்கேற்ற எத்தனையோ புதுப் புதுத் தொழில்கள் வளம்பெற் றிருக்க வேண்டு மல்லவா? பொன்னால் செய்த பசுவயிற்றில் புகுந்து

வெளிவரும் அளவு 'இரண்ய கருப்பம்' நடத்திய காலமல்லவா அது. ஆகவே பொற்றொழில் எத்துணைப் பெரும் அளவில் நடைபெற்றிருந்திருக்க வேண்டும்! அப்படியே பிற உலோகத் தொழில்களும் வளர்ந்தன.

கைத்தொழிலைப் போலவே உழவையும் வளர்த்த காலமும் அதுவே. நாட்டை வளம் படுத்திய காரணத்தாலேயே சோழர் 'வளவர்' எனப் பெயர் பெற்றனரன்றோ! 'குளந்தொட்டு வளம் பெருக்கிய' பெருமை அவருடையதன்றோ! காவிரிக்கு முதற் கரிகாலனே இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் கரை கட்டியவனன்றோ! பிற்காலச் சோழர், தம் காலத்தும் அக்கொள்கையை ஒட்டியும் கட்டிய காவிரி அணைகளை இன்றும் நாம் வியக்கின்றோமல்லவா? இன்று எத்தனையோ பொறியாளர்களும் பிற நாட்டுச் சிறந்த விற்பனரும் இருந்து கட்டும் பாலங்களிலும் அணைகளிலும் சிறந்தவையாகவும் உரம் பெற்றவையாகவும் அக்காலத்தில் கட்டிய அணைத்தும் விளங்குகின்றனவன்றோ! நாட்டில் இன்று காணும் எத்தனையோ ஏரிகளும் கால்வாய்களும் அக்காலத்தில் வெட்டப்பட்டனவேயன்றோ! இவ்வாறு தொழிலையும் உழவையும் இடைக்காலத்தில் போற்றி வளர்த்தனர்.

பிற்காலச் சோழர் காலத்துக்குப் பின் பல நாட்டினர் தமிழ் நாட்டில் புகுந்தனர். அரசியல் காரணமாக நடைபெற்ற போராட்டங்கள் பல. இந்திய நாட்டின் வட பகுதியில் உண்டான அத்தனை மாறுதல்களும் இங்கும் உண்டாகத் தொடங்கி விட்டன. அடிக்கடி அரசியல் மாற்றங்கள் நடைபெற்றுக் கொண்டே இருந்தன. எனினும் அத்தனை மாறுபாடுகளுக்கிடையிலும் தமிழ் நாட்டில் பல்வேறு தொழில்கள் வளர்ந்து

கொண்டே இருந்தன என்பது தேற்றம். மிகப் பழங் காலத்தில் உண்டான மீன் பிடித்தல் போன்ற உணவுப் பொருள் பெருக்கும் தொழில், மேலை நாட்டார் வந்த பிறகு பல வழிகளில் நன்கு வளரத் தொடங்கிற்று. கட்டடக்கலை பற்றிய தொழிலும் மங்கவில்லை. மதுரைத் திருமலை நாயகர் மண்டபத்தையும் தஞ்சைக் கோட்டையும் அக்காலத்தில் தோன்றிய பிற கட்டடங் களையும் கல்லணை போன்ற திண்ணிய அணைகளையும் பிற கைவண்ணப் பணிகளையும் பார்க்கும் போது தமிழ் நாடு எத்தனை வகையில் அரசியல் மாற்றம் பெற்ற போதிலும் உழவிலும் தொழிலிலும் ஓரளவு நிலை குலையாது வளர்ந்து வருவது உண்மையன்றோ!

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்திலும் இந்தியாவின் பிற பாகங்களைக் காட்டிலும் தமிழ் நாடு பல் வகையில் தொழில் துறையிலும், கல்வி கலை முதலியவற்றிலும் முன்னேறியுள்ளது. இன்றும் இந்திய நாட்டுப் பல பெருந் தொழிற்சாலைகளிலும் மின்சார நிலையங்களி லும் நீர்த்தேக்க அலுவலகங்களிலும் பல தமிழ்ப் பொறி யாளர்கள் தம் திறம் காட்டிப் பணிபுரிவதைக் காண் கிறோமல்லமோ! இவ்வாறு மிகப் பழங் காலந் தொட் டுத் தன் தொழில் வளத்தையும் கலை நலத்தையும் பயிர் வளத்தையும் மங்காது போற்றிக் காத்த தமிழ் நாடு உரிமை பெற்ற பின்பும் அதே நிலையில் குறையாத வகையில் மேலும் மேலும் வளர்ந்து வருகின்றது என்பது இன்று நாம் காணும் காட்சி. கடந்த பத் தாண்டுகளில் தமிழ் நாட்டுத் தொழில் வளம் பெற்ற வகையினை நன்கு பகுத்துக் காண்பதோடு வருங் காலத்துக்கு வேண்டிய ஆக்கப் பணிக்கு வழி கோல வேண்டிய பொறுப்பும் நம்முடையது என்பதை நினைவில் கொண்டு மேலே செல்லலாம்.

# தமிழ் நாடு இன்றும் - நாளையும்

'குமரியோடு வடவிமயத் தொருமொழி வைத்துல காண்ட நெடுஞ் சேரலாதன்' காலத்தே பரந்த பாரத எல்லையையே தமிழ்நாட்டு எல்லையாகக் கூறிவந்தனர். அதை நிறுவ நமக்குப் போதிய சாதனங்கள் இல்லை என்றாலும் ஒரு காலத்தில் தமிழினம் இமயம் வரை இருந்திருக்கலாம் என்பதை நிலை நாட்ட மொழி ஆராய்ச்சிகளும் வரலாற்றுச் சிதறல்களும் ஓரளவு துணைபுரிகின்றன. அவற்றை வைத்துக் கொண்டு நாம் உரிமை கொண்டாடப் போவதில்லை; கொண்டாட வும் முடியாது. பிற்காலங்களிலே தமிழ் மொழி வழங்கும் தமிழ் நாட்டு எல்லையை வரையறை செய்துள்ளார்கள். அவற்றின்படி வடக்கே வேங்கடமும் தெற்கே குமரி யும் கிழக்கும் மேற்கும் கடல்களும் தமிழ் நாட்டு எல்லை களாக அமைந்தன.

*‘வட வேங்கடம் தென் குமரி*
*ஆயிடைத் தமிழ் கூறும் நல் உலகம்’*

எனத் தொல்காப்பியமும்

*‘வேங்கடம் குமரி தீம்புனற் பௌவமென்*
*றின்நான் கெல்லை தமிழது வழக்கே’*

எனச் சிலப்பதிகாரமும்,

தமிழ் நாட்டுக்கு எல்லை வகுத்தன. ஆயினும் அந்த எல்லையும் இன்று இல்லை. மேற்கே மலையாளம் தனி நாடாக வளர்ந்து விட்டது. தமிழ் நாட்டு மூவேந்தருள் ஒருவராகிய சேரர் பரம்பரையினர் இருந்து, பதினேழும் நூற்றாண்டு வரையில் தமிழ் வளர்த்த மலைநாடு பிரிந்து மலையாள மொழி வழங்கும் தனி நாடாகவே மாறிவிட்டது. எனவே நன்னூலார் காலத்தில் தமிழ் நாட்டு எல்லை,

*‘குணகடற் குமரி குடகம் வேங்கடம்’*
*எனும்நான் கெல்லையில் இருந்தமிழ்க் கடலுள்’*

என்று மாறி மேற்கே கடல் எல்லை மாறி குடகு மலை எல்லையாக அமைந்து விட்டது. அண்மையில் வேங்கடமும் தமிழ் நாட்டு எல்லையாக இல்லை என்ற நிலை தெளிவாகிவிட்டது. பிரிந்திருந்த குமரிமுனை மறுபடியும் தென் எல்லையாக நின்று நமக்கு நலம் பயக்கின்றது. கிழக்கே வங்கக் கடல் மாற்ற முடியாத நிலை பெற்ற எல்லையாக நின்று விட்டது. நம் காலத்தில் வாழ்ந்த பாரதி கூட,

*நீலத் திரை கடல் ஓரத்திலே நின்று*
*‘நித்தம் தவம் செய் குமரி எல்லை — வட*
*மாலவன் குன்றம் இவற்றிடையே புகழ்*
*மண்டிக் கிடக்கும் தமிழ் நாடு’*

என்று வீறு தோன்றப் பாடினார். எனினும் வட எல்லை

நம் வசம் இல்லை. நம் ஆந்திர நண்பர்கள் அதை உரிமை கொண்டாடிக் கைப்பற்றியுள்ளனர். எனவே இன்றையத் தமிழ் நாடு எல்லையில் சுருங்கியதாக அமைந்துள்ளது. இந்நாட்டின் இன்றைய பரப்பு சுமார் 50,000 சதுரமைல் எனக் கணக்கிட்டிருக்கின்றனர்.

தமிழ் நாட்டில் உள்நாட்டிலும் கடற்கரையிலும் பன்னெடுங் காலமாகப் பலப்பல தலைநகர்களைக் கண்டோம். புகாரும் கொற்கையும் வஞ்சியும் கடற்கரைப் பட்டினங்களாக இருந்து வாணிபத்தைப் பெருக்கி நாட்டை வளம்படுத்தின. மதுரையும் காஞ்சியும் உறந்தையும் தஞ்சையும் தலைநகரங்களாக இருக்க அவ்விடங்களில் ஆண்ட மன்னர் எண்ணற்றவர்—பல பரம்பரையினர். ஆயினும் ஆங்கிலேயர் நம் நாட்டிற்கு வந்த பிறகு அவையாவும் தலைநகர்களாக இல்லாமல் புதிதாகச் சென்னைப்பட்டினம் தலைநகராயிற்று. தமிழ் நாட்டு வடகிழக்குக் கோடியில் கடற்கரையில் அமைந்த இந் நகர் ஆங்கிலேயராலேயே அமைக்கப் பெற்று வளர்ச்சியடைந்தது. இன்று உரிமை பெற்ற பின்பும் இத தலைநகர் பல்வேறு தொழில் வளங்களும் பிறவும் வளரவளர வளர்ந்து கொண்டே வருகின்றது. சுமார் இருபது லட்சத்துக்கு மேற்கொண்ட மக்களை உடையதாகிப் பரந்த பாரதத்தில் கல்கத்தா, பம்பாய் ஆகிய இருபெரு நகரங்களை அடுத்து மூன்றுவதாகும் நிலையில் சென்னை இன்று சிறக்க வளர்கின்றது. தமிழ் நாட்டுத் தொழில் வளத்தையும் அண்டை நாடுகளான ஆந்திர கன்னட கேரளநாட்டுத் தொழில் வளத்தையும் வளர்க்கின்ற வகையில் சென்னைத் துறைமுகம் விரிவடைந்து கொண்டே வருகின்றது. பல்வேறு தொழிற்சாலைகளும் சென்னையில் பெருகப்பெருக அதன் எல்லை

யும் வளர்கின்றது. இத்தலைநகரிலிருந்து, மக்களால் தேர்ந்தெடுக்கப் பெற்ற சட்ட மன்றங்களும் அவற்றின் அமைச்சர்களும் ஆளத் தமிழ் நாடு தன்னாட்சி பெற்ற நிலையில் வளர்ந்து வளம் பெற்று வருகின்றது.

இன்றைய தமிழகம் சுமார் 50,000 சதுர மைல் நிலப் பரப்புடையதெனக் கண்டோம். பரந்த பாரத நாட்டின் தென் கோடியில் உள்ள தனி மாநிலமாக இது அமைந்துள்ளது. தில்லிப் பேரரசின் ஆணையின் கீழ் இது ஒரு சிறு உறுப்பு நாடாக அமைந்து தொழில் படுகின்றது. இதன் கிழக்கெல்லை இன்றும் வங்கக் கடலாகவே அமைந்துள்ளது. வடக்கில் ஆந்திரமும் மேற்கில் கேரளமும் வடமேற்கில் கன்னடமும் இதன் அண்டை நாடுகளாக அமைந்துள்ளன. தெற்கில் இந்தியப் பெருங்கடலும் பாக்ஸ் நீரிணைப்பும் அமைந்துள்ளன. எனவே கடந்த பல நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்த நிலப்பரப்பிலும் இன்று எல்லை அளவில் தமிழ்நாடு குறைந்தே யுள்ளது.

இத் தமிழ்நாட்டில் கீழ்ப்பகுதியாகிய கடற்கரைப் பகுதி தாழ்ந்தும் மேற்பகுதி அளவாக உயர்ந்தும் உள்ளது. எனவே இந்நாட்டில் பாய்ந்தோடும் ஆறுகள் அனைத்தும் மேற்பகுதியிலிருந்து கிழக்குப் பகுதிக்கு ஓடிக் கடலோடு கலக்கின்றன. கிழக்கு மேற்கு என்ற இரு திசைகளைக் குறிக்கும் பெயர்கள் இந்த அடிப்படையில் உண்டானவையே. வரவரக் கீழ் இறங்குவது கிழக்காகவும் மேல் உயர்வது மேற்காகவும் பெயரிடப் பெற்றன. கீழைப்பகுதி ஆறுகளால் மருத நிலமாக வளஞ் செய்யப் பெறுகின்றது. இதில் ஓடும் நதிகளை,

*காவிரி தென்பெண்ணை பாலாறு தமிழ்*
*கண்ட தோர் வையைப் பொருனைநதி-என*
*மேவிய ஆறு பலவோடத் திரு*
*மேனி செழித்த தமிழ்நாடு'*

என்று பாரதியார் அழகுபடப் பாராட்டியுள்ளார். ஆம்! வான் பொய்ப்பினும் தான் பொய்யாத இருவேறு பருவக் காற்றால் வரும் மழைநீரினால் என்றும் வற்றாத ஆறாக உள்ள காவிரி, ஆறுகளில் முதலிடம் பெற்றுள்ளது. மற்றைய பாலாறு தென்பெண்ணை ஆகிய ஆறுகள் ஒரோவோர் சமயங்களில் வெள்ளப் பெருக்காலும் வேறு காலங்களில் ஊற்றுப் பெருக்காலும் உலகூட்டி நாட்டை வளம்படுத்துகின்றன. தெற்கே உள்ள வையையும் தாமிரவர்ணியும் பெரும்பாலும் வற்றா ஆறுகள் என்னுமாறு வளம் கொழித்தோடுவதை இன்றும் காண்கின்றோம். இப்பேராறுகள் இரண்டாயிர மாண்டுகளுக்கு முன் சங்க இலக்கியங்களில் காட்டப் பெற்ற படியே இன்றும் நாட்டை வாழ்விக்கின்றன.

கிழக்குத் தொடர்ச்சி மலைக்கும் கீழ்க் கடலுக்கும் இடையில் பாய்ந்தோடும் இவ்வாறுகள் தமிழ் நாட்டின் ஒரு பகுதியை வளமுள்ள நாடாகச் செய்கின்றன. இன்று இந்த ஆறுகள் அனைத்திலும் அணைகள் கட்டி விவசாயத்துக்கும் மின்சாரத்துக்குமாகப் பயன்படு வகையில் நீரைத் தேக்கி வளம் படுத்தும் நிலையில் பல ஆக்கப் பணிகள் நடைபெற்றுள்ளன; நடைபெற்றுக் கொண்டே வருகின்றன. கிழக்குத் தொடர்ச்சி மலைக்கும் மேற்குத் தொடர்ச்சி மலை, மைசூர், கேரள நாட்டுக்கு இடையிலும் உள்ள பழங்காலத்திய கொங்கு நாடும் தமிழ் நாட்டின் பகுதியே யாகும். அப் பகுதி, கோயன்புத்தூர், சேலம், உதகை மாவட்டங் களாக இன்று அமைந்துள்ளது. இன்று இப்பகுதியும்

பாவனி, குந்தா முதலிய ஆறுகளின் அணைகளால் வளம் படுத்தப் பெறுகின்றது. தமிழ் நாட்டின் பயிர் வளம் இத்தகைய பேரணைகளால் மட்டுமன்றி ஊற்றுக் கால்களாலும் ஏரிகளாலும் பிற சிறு பாசன வசதிகளாலும் சிறந்துள்ளது.

இந்நாட்டின் தட்ப வெப்பநிலை மக்கள் வாழ்வுக்கு ஏற்றதாகவே அமைந்துள்ளது. 110°F க்கு மேற் போகாமலும் 65°F க்குக் குறையாமலும் வெப்பநிலை; நாட்டில் அமைந்திருப்பதால் வடநாட்டைப் போன்று கொடும் வெப்பத்தையும் நடுங்கும் குளிரையும் இங்கே காணமுடியாது. உதகை, கோடை போன்ற இடங்கள் மலைப்பகுதிளானமையின் மிகுதியும் குளிர்ச்சியுள்ளனவாகிக் கோடைகாலத்தில் நாட்டு மக்களை 'வருக' என வரவேற்று மகிழ்ச்சி யூட்டுகின்றன.

இந்நாட்டின் மழை அளவும் ஓரளவு பொருத்தமானதாகவே அமைந்துள்ளது. வட கிழக்குப் பருவக் காற்று, தென் மேற்குப் பருவக்காற்று இரண்டுமே இந் நாட்டிற்குத் தேவையான மழையைத் தருகின்றன. பெரும்பாலும் இன் நாட்டின் பகுதிகள் ஆண்டொன்றுக்கு 25 அங்குல முதல் 75 அங்குலம் வரை மழையினைப் பெறுகின்றன. இந்த அளவு நடுநிலை அளவே என்பது நன்கு புலனாகும். கீழ்ப்பகுதியாகிய சோழமண்டலக் கரையே அதிக மழையை வடகிழக்குப் பருவக் காற்றால் பெறுகின்றது. தென் கோடியிலுள்ள நெல்லை முதலிய மாவட்டங்கள் இலங்கை இடைப்படுவதால் குறைந்த அளவே மழையைப் பெறுகின்றன.

இப்பரந்த தமிழ் நாட்டில் சுமார் மூன்று கோடிக்கும் மேற்பட்ட மக்கள் வாழ்கின்றார்கள். தமிழ்நாடு

தனியாகப் பிரிந்த காலத்தில் (1956) எடுத்த கணக்கு இதுவாகும். பரந்த பாரதத்தின் மக்கட் கணக்கில் இது ஐந்தாவதாக அமைந்துள்ளது; பரப்பில் பதினொன்றாவதாகவே உள்ளது; சுமார் ஒரு சதுரமைலுக்கு 597 மக்களைக் கொண்டுள்ளது. இந்திய அடிப்படையில் ஒரு சதுர மைலுக்கு 312 மக்களே உள்ளனர். கேரளம், மேற்கு வங்கத்துக்கு அடுத்த நிலையில் அதிக மக்கள் விகிதத்தை கொண்ட மாநிலமாகும். ஏறக்குறைய இந்தியநாட்டுக் கணக்குக்கு இரண்டு மடங்கு மக்கள் திணிப்புள்ள தமிழ் நாட்டில் பொருளாதாரம் நன்கு வளர்ச்சியடைய வேண்டியுள்ளது. தொழில் வளர்ச்சியிலும் இம்மாநிலம் இந்தியாவில் மூன்றாவதாக இடம் பெறுகின்றது. எனினும் இம்மாநிலத்தில் தனிமனித வருமானம் ஆண்டொன்றுக்கு ரூ 227 ஆக இருக்க, இந்திய வருமானம் ரூ. 261 ஆக அமைந்துள்ளது. (1956).

தமிழ் நாட்டில் பெரும்பாலான மக்கள் கிராமங்களிலேயே வாழ்கின்றனர். மக்கட் பகுதியில் முக்கால் எண்ணிக்கை கிராம வாழ்க்கை நடத்துபவர் என அரசாங்கப் புள்ளிக் கணக்கு கூறுகின்றது. அவ்வாறு வாழ்பவருள் 44% மக்கள், 2000 க்கு மேற்பட்ட மக்கள் உள்ள பெருங்கிராமங்களில் வாழ்கின்றனர். தமிழ் நாட்டில் சராசரி கிராமத்துக்கு 1235 மக்கள் வீதம் வாழ்கின்றார்களென்றும் இந்திய அடிப்படையில் இக்கணக்கு 530 ஆக உள்ளது என்றும் கூறுவர்.

தமிழ் நாட்டில் 295 நகரங்களும் பட்டினங்களும் உள்ளன. நகர்வாழ் மக்களுள் பெரும்பாலோர் (53%) 10,000 க்கும், 1,00,000க்கும் உட்பட்ட நகரங்களிலேயே வாழ்கின்றனர். மூன்றில் ஒரு பகுதிக்கு மேலாகப் பெரு

நகரங்களில் வாழ்கின்றனர். சென்னை நகர் இந்தியாவிலேயே மூன்றாவதாக உள்ளதாகும். தற்போது அதன் மக்கள் எண்ணிக்கை 20 லட்சமாகலாம். சென்னை பெருவாணிப நிலையமாகவும், தொழில் நகராகவும் சிறந்த துறைமுகமாகவும் அமைந்துள்ளது. சென்னையை அடுத்து மதுரை, கோயமுத்தூர் ஆகிய நகரங்களும் அவற்றை அடுத்து சேலம், திருச்சி போன்ற நகரங்களும் தொழில் வளர்க்கும் இடங்களாகக் கணக்கிடப் பெற்றுள்ளன. இவற்றுள் மதுரையும், கோயமுத்தூரும் பலவகையில் தொழில் வளம் பெற்றுள்ளன.

தமிழ் நாடு பொதுவாகத் தொழில் வளம் பெற்றதாகக் கருதினாலும், மக்கள் தொகையில் 14% வீதமே தொழில் துறையில் ஈடுபட்டுள்ளனர் (1956). பெரு ஆலைகளில் சுமார் 350, 700 மக்களே தொழில் புரிகின்றனர் எனச் சில ஆண்டுகளுக்கு முன் எடுத்த கணக்கு காட்டுகிறது. இது இந்தியக் கணக்கில் பத்தில் ஒருபாக (10%) மாகும். இந்நாட்டின் பெரும் ஆலைத்தொழில் நூற்றலும் நெசவுமே. அவற்றுள் 40% ம், பொறியியல் துறையில் 15.7%ம், உணவில் 12.5%ம், இரசாயனத் துறையில் 6. 3%ம், விவசாய வளர்ச்சி ஆய்வுத்துறையில் 3.7%ம் மக்கள் தொழிலாற்றுகின்றனர். ஆலையற்ற தொழிலில் கைத்தறியே பெரும் பங்கு கொண்டுள்ளது.

கடந்த சில ஆண்டுகளில் தமிழ்நாட்டில் பல தொழில்கள் வளர்ச்சியுற்றுள்ளன. தொழிற்சாலைகளுக்கு மின்சார உற்பத்தியில் 68% வீதம் செலவாகின்றது. கடந்த சில ஆண்டுகளில் கீழ்க்கண்ட தொழில்கள் நன்கு வளர்ச்சி பெற்றுள்ளன.

| | |
|---|---|
| போக்கு வரத்துச் சாதனப் பகுதிகள் | 60% |
| பல இயந்திர உறுப்புக்கள் | 47% |
| இரசாயனம் | 46% |
| உணவுப் பொருள் உற்பத்தி | 29% |
| தோல் | 20% |
| ஆடை வகை | 15% |

மற்றும் சர்க்கரை, சிமிட்டி, பீங்கான் முதலிய உற்பத்தித் தொழில்களும் பல்வேறு பொறியியற் கலைகளும் நன்கு வளர்ந்துள்ளன. 1955 க்கும் 1970 க்கும் இடையிலுள்ள பதினைந்து ஆண்டுகளில் இந்திய நாட்டின் தொழில் வளம் 220% ஆகப் பெருகு மெனவும், அக்காலத்தில் தமிழ் நாடு இதே அளவில் வளர்ச்சி பெறின் சிறந்து விளங்கு மெனவும் கூறுவர்.

தமிழ் நாட்டில் இன்னும் பலர் வேலை ஒன்றும் செய்யாது சோம்பி இருப்பதைக் காணமுடிகின்றது. 'சோம்பர் என்பவர் தேம்பித் திரிவர்' என ஔவையும் 'மடியின்மை' என்றே ஓர் அதிகாரத்தை வலியுறுத்திய வள்ளுவரும் பிறந்த நாட்டில் இன்னும் மடியை விடாது பற்றிக் கொண்டிருக்கும் மக்கள் இருக்கிறார்களே என எண்ணும் போது வருத்தம் உண்டாகின்றது. கிராமப் பக்கங்களிலுள்ள மக்களுள்ளே பெரும்பாலோர் உழுங் காலம் தவிர்த்த பிற நாட்களிலே கண்ணைத் துயின்று அவமே காலத்தைப் போக்குவதைக் காண்கின்றோம். இந்நிலை இரங்கத்தக்கதே! தமிழ் நாட்டைத் தவிர இந்தியாவின் பிறபாகங்களில் இந்த அளவுக்குச் சோம்பி வாழ்வார் இலர் எனக் கணக்கிட்டுள்ளனர்.

ஆலைத்தொழில் பணியாளர்கள் எண்ணிக்கையில் சென்னை, பம்பாய், கல்கத்தாவை அடுத்து மூன்றாவ

தாக வருகின்றது. பல்வேறு நல்ல இயந்திர சாதனங்களுடன் திறன் பெற்ற பொறியாளர்கள் மேற்பார்வையில் தமிழ்நாட்டுப் பேராலைத் தொழிற்சாலைகள் இயங்குகின்ற காரணத்தால் இந்த நாடு அத்துறையில் சிறந்த முன்னேற்றம் பெற்றதாகவே கருதப்படுகின்றது. விவசாயத் தொழில்துறைக்கு வேண்டிய பொருள்களை நம் மாநிலமே நமக்கு அளிக்கின்றதென்றாலும் பிற தொழில்களுக்கு வேண்டிய மூலப்பொருள்களுள் சில, நாட்டின் பிற பகுதிகளிலிருந்து கொண்டு வரப்பெறுகின்றன. அதற்கேற்ற, அளவில் தொழிலால் ஆக்கப் பெற்ற பொருள்கள் நாட்டின் பிற பகுதிகளுக்கும் அனுப்பப் பெறுகின்றன. கரி, உலோகங்கள், பருத்தி, பசுந்தோல் ஆலைப்பொருள் முதலின கொண்டு வரப்பெற்று, பதிலாக சிமிட்டி, நூல், தீப்பெட்டிப், பதனிட்ட தோல் முதலியன அனுப்பப் பெறுகின்றன. ஒரு சில தொழில் நிலைகளில் தமிழ்நாடு இந்திய நாட்டுப் பிற பகுதிகளைக் காட்டிலும் உயர்ந்துள்ளது. என்றாலும் பொதுவாக நோக்குமிடத்து ஆலைத்தொழிலளவில் தமிழ்நாடு சற்றே தாழ்ந்துதான் உள்ளது.

பெருந்தொழில்களே யன்றி நாட்டில் பல்வேறு சிறு தொழில்களும் அளவற்றுப் பெருக வாய்ப்புக்கள் உண்டாகியுள்ளன. சிறு நகரங்களிலும், கிராமங்களிலும் பல சிறு சிறு தொழில்கள் தனியாகவும், கூட்டுறவு முறையிலும் தொழிற்பட்டு நல்ல பயன்களை உண்டாக்குகின்றன. இவைகளைத் தவிர கிண்டி, திருச்சி, மதுரை, பேட்டை, விருதுநகர், ஈரோடு, தஞ்சாவூர், மார்த்தாண்டம் முதலிய இடங்களில் தொழிற்பேட்டைகளும் பிறவும் அமைத்துப் பல்வேறு தொழில்கள் வளர முயற்சி செய்துள்ளார்கள்.

நாட்டின் வளர்ச்சியை இமயமுதல் குமரி வரையில் ஒரே நிலையில் எண்ணிக் காண்கின்ற காரணத்திலுலே உறுப்பு நாடுகளின் தேவை ஏறத்தாழ அமைந்து விடுகின்றது போலும். நாட்டுப் பொருள் வருவாய் பதினைந்து ஆண்டுகளில் வளர்வேண்டும் என்ற நிலையில் எண்ணற்ற வகையில் பலப்பல திட்டங்களைத் தீட்டுகின்றனர். 1955-56 ல் இருந்ததைக் காட்டிலும் 1970-71 ல் இருமடங்கு பெருக வேண்டும் என்ற முயற்சியில் அனைவரும் ஈடுபட்டுள்ளனர். 1,08,000 மிலியனிலிருந்து 206,800 மிலியனுக்கு நாட்டுவருமானத்தை உயரக் கொணர வேண்டிய மூலதனத்தையும் கணக்கிட்டுள்ளனர். 31,000 கோடி ரூபாய் தேவை என்பது அவர்கள் கணக்கு. இதில் இரண்டாம் ஐந்தாண்டில் 6200 கோடி

| | | |
|---|---|---|
| மூன்றும் ஐந்தாண்டில் | 9900 | ,, |
| நான்காம் ,, | 14800 | ,, |

செலவாகும் எனக் கணக்கிட்டுள்ளனர். இக்கணக்குகள் அனைத்திந்தியாவுக்கும் பொருந்தியனவாம். இந்த அடிப்படையில் நாட்டின் ஒவ்வொரு பகுதிக்கும் நிதி ஒதுக்கும் போது பலவற்றை எண்ணிப் பார்க்க வேண்டியுள்ளமையின் இவை அனைத்தையும் ஆராய்ந்து ஒரு வரையறுத்த வகையில் ஒவ்வொரு மாநிலத்துக்கும் உதவுகின்றனர். இந்தக் கணக்குப்படி 1971 வரை தமிழ் நாட்டுக்கு 2200 கோடி ரூபாய் தேவையாக உள்ளது. 1955-56ல் தமிழ் நாட்டு வருமானம் 730 கோடியாகக் கணக் கிட்டுள்ளார். இவ்வருமானம் பதினைந்தாண்டுகளில் இருமடங்காக வேண்டுமென்பது திட்டம் தீட்டுபவர் தம் உள்ளக்கிடக்கையாகும்.

உழவைப் பொறுத்த வரையில் தமிழ் நாட்டில் அதிகமாக வளர வாய்ப்பு இல்லை. கடந்த இரண்டா

யிர மாண்டுகளாகவே தமிழ் மன்னரும் மற்றவரும் இத்துறையில் கருத்திருத்தி வந்ததோடு அண்மையி லும் பலவகையில் நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்கியுள் ளமை அறிவோம். நீர்ப்பாசனத்துக்காகவும் மின்சாரத் துக்காகவும் பேராறுகளெல்லாம் பயன் படுத்தப் பெற்று விட்டன. ஆயினும் தமிழ்நாட்டில் பயிரிடக் கூடிய நிலங்கள் பாழாகவே உள்ளன. 19 லட்சம் ஏக்கர் பயிரிடு நிலங்கள் தரிசாக உள்ளன என்றும், இது பயிரிடு நிலத்தில் சுமார் மூன்றில் ஒரு பாகமாகு மெனவும், இந்தியா முழுதிலும் ஐந்தில் ஒரு பகுதியே அவ்வாறு உள்ளது என்றும் கணக்கெடுத்துள்ளனர். ஆயினும் புதுப்புது நீர்ப்பாசன வசதிகள் பெருக இவ ற்றில் பல பயிரிடு நிலங்களாக மாற்றப் பெறலாம். தமிழ் நாட்டில் பாசன வசதி அதிகம் என்றும், 38% வீதம் பாசனம் பெறுகின்ற தெனவும், இந்தியாவில், 17% வீதமே பாசன வசதி உள்ள தெனவும் கணக்கிட் டுள்ளனர். பெரும்பாசன அணைகளும் சிறு ஏரி, கால் போன்றவையும் இறவைக்கிணறுகளும் நாட்டுப் பாசன வகையில் பங்கு கொண்டுள்ளன. நில ஆராய்ச் சியாளர்களால் ஆழ்நீர் வழியே மேலும் பாசன வசதி பெற வழிகள் ஆராயப் பெறுகின்றன.

தமிழ் நாட்டில் காட்டுவளம் அத்துணைச் சிறந்த தாகக் காணப்படவில்லை. ஒருவருக்கு 0.16 ஏக்கரே காடு உள்ளது எனக் கணக்கிட்டிருக்கின்றனர். இந்தியநாட் டின் கணக்கு 0.35 ஏக்கராகும். கனிவளமும் அத் துணைச்சிறந்த வகையில் இல்லை என்றாலும் இன்றைய ஆராய்ச்சிகள் ஓரளவு நமக்கு நம்பிக்கை ஊட்டும் வகையில் அமைகின்றது. நெய்வேலி நிலக்கரியும், சேலத்து இரும்பும் அத்துணைச்சிறந்தன அல்லவேனும் அவற்றால் தமிழ் நாட்டுத் தொழில்வளம் பெருக நல்

வாய்ப்புக்கள் உள்ள தென்பதை யாவரே மறுக்க வல்லார்? இவற்றை வளர்க்கத் தக்க வகையில் இருப்புப் பாதைகளை அமைத்தும் பிறதேவைகளை வெளிநாடுகளிலிருந்து பெற்றும் வேறு தேவைகளை உடனடியாக நிறைவேற்றியும் ஆவன காணவேண்டுமென இந்திய அரசாங்கத்தாரைத் தமிழ்நாட்டு அரசாங்கத்தார் அடிக்கடி வற்புறுத்தி வருகின்றனர். தமிழ்நாட்டு மக்களும் இவற்ருல் நாடே நல்ல தொழில் வளம் பெற்றுச் சிறந்தோங்குமென்ற நம்பிக்கையில் வாழ்கின்ருர்கள்.

மற்றும் சிமிட்டி, கண்ணுடி, சீனு சாமான்கள் போன்றவற்றைச் செய்யும் தொழிற்சாலைகள் அமைப்பதற்கானவாய்ப்புக்கள் உள்ளன எனக்கண்டுள்ளனர். இரசாயனப் பொருள்கள் உற்பத்தியும் பெருகக் கூடிய வாய்ப்புக்கள் உள்ளன. இன்னும் பல்வேறு சிறு தொழில்கள் பெருக நாட்டில் வசதிகள் உள்ளன. எனினும் எல்லாவற்றிலும் பொறியியல் துறையில் பெருவளர்ச்சி அடையக் கூடிய வாய்ப்புக்களே அதிகமாக உள்ளன. இந்த அடிப்படையில் பல பெருந்தொழிற்சாலைகள் அமைக்கும் திட்டம் அனைத்திந்திய அளவிலேயே தீட்டப்பெறுகின்றது. மூலப்பொருள் கிடைக்கும் நிலை, மக்கள் உதவி, தொழிலாளர் நிலை, போக்குவரத்து, பிற நிலைகளை யெல்லாம் ஆய்ந்து பெருந்தொழில்கள் வளர்க்கத் திட்டம் தீட்டி இடங்களைத் தேர்ந்தெடுக்கின்றனர். தமிழ் நாட்டுஇன்றைய வாய்ப்புக்களுக் கிடையில் ஓரிரண்டு பெருந் தொழிற்சாலைகள் இங்கே அண்மையில் நிறுவப்படலாம் என்ற நம்பிக்கை உண்டு. தமிழ்நாடு அனைத்திந்திய அடிப்படையில் பெருந் தொழில்களையும் சிறு தொழில்களையும் வளர்க்கத் திட்ட அமைப்பின்படி செயல்படுமாயின் அடுத்த

பத்தாண்டுகளின் முடிவுக்குள் கீழ்க்கண்டவாறு அவற்றிற்கு மூலதனம் செலவிடப்பெறும் எனவும் கணக்கிட்டுள்ளனர். மொத்தம் 2000 கோடி ரூபாய் செலவு செய்யப்பெறும். அவை,

| | |
|---|---|
| அடிப்படை | 200 கோடி |
| தொழில் | 500 கோடி |
| போக்குவரத்து | 350 ,, |
| மின்சாரம் | 150 ,, |
| வீடு, கல்வி, நலத்துறை | 800 ,, |
| | 2000 ,, |

என்ற வரையறுத்த கணக்கின்படி செலவிடப்பெறும். இதில் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டச் செலவும் சேர்க்கப் பெற்றுள்ளது. இவ்வாறு மூலதனம் செலவு செய்வதால் அடுத்த பத்தாண்டுகளில் தமிழ் நாட்டில் மட்டும் இன்னும் இருபது லட்சம் மக்களுக்கு வேலை கிடைக்கும் என்பது நன்கு தெரிவாகின்றது. எனவே நாட்டின் தொழில் வளர்ச்சி பல வகையில் சமுதாய வாழ்வை உயர்த்தப் பயன்படுகின்றதன்றோ ?

இத்துணைத் திட்டங்கள் இருப்பினும் இயல்பாகவே உள்ள சில குறைபாடுகளாலே சில சமயங்களில் திட்டங்கள் நிறைவேற்ற முடியாத நிலை உண்டாவதையும் காண்கின்றோம். தமிழ் நாட்டில், இயல்பான மூலப்பொருள் இல்லாமை, மின்சாரக் குறைவு, போக்குவரத்து வசதிக் குறைவு ஆகிய சில குறைபாடுகள் உள்ளமையின் நாம் நினைக்கிறபடி விரைவில் தொழில் வளர்ச்சிபெற முடியவில்லை. எனினும் சில நல்ல சாதனங்களும் நமக்கு இல்லாமல் இல்லை.

பரந்த இந்திய நாடு முழுவதும் நிலை பெற்ற அரசியலை நாம் பெற்றிருக்கிறோம். அத்துடன் அரசாங்கத்தில் பணிபுரியும் பணியாளர்களும் பெருநெறியாளர்களும் திறம் வாய்ந்தவர்களாக நல்ல உழைப்பு உடையவர்களாக இருப்பதையும் காண்கிறோம்.

இரண்டாயிரமாண்டுகளுக்கு மேலாக அமைந்த பண்பாடும் இலக்கியமும் மொழிவளனும் பிற இயல்புகளும் மக்களை உண்மையில் ஆக்கப் பணிக்கு ஆயத்தம் செய்கின்றன.

கல்வி, தொழில் துறைகளில் நெடுங்காலமாகத் தெளிந்த அறிவும் அனுபவமும் பெற்று வாழையடி வாழையாக வந்த நல்ல தொழிலியல் ஞானிகளை நாம் பெற்றிருக்கிறோம்.

நாட்டில் பெருஞ்செல்வர் பலர் இல்லையாயினும் இருக்கும் ஒருசிலராகிய நாட்டுச் செல்வர்களும் தத்தம் செல்வங்களை முடக்கி வைக்காமல் பல்வேறு தொழிற்சாலைகள் நிறுவி நாட்டுத் தொழில் வளத்தைப் பெருக்கும் வகையில் நாள்தோறும் முன்னுக்கு வந்து கொண்டே இருக்கின்றனர்.

தொழிலாளிகள் குறைந்த கூலி பெற்று மனநிறைவோடு நிறைந்த வேலை செய்யும் அளவுக்குத் தேவைக்கு அதிகமாகவே நாட்டில் உள்ளனர்.

திட்டகாலத்துக்கு முன்னமேயே அதற்குத் தேவையான பல வழிகளைச் செய்து இயல்பாகவே நாடுவளர்ந்திருக்கும் நிலை மேலும் வளம்பெற ஏற்றதாக உள்ளது.

தமிழ்நாட்டில் உள்ள பொறியாளர்களும் அத் துறையில் வல்ல சில தனி அலுவலர்களும் பன்னெடுங் காலமாகச் சிறந்து சேவை செய்துவருகின்றனர்.

இத்தகைய தமிழ்நாட்டுச் சிறப்பெல்லாம் ஒன்று சேர்ந்து, பொருளாதார நிலையில் நம்நாடு பின்தங்கி இருந்தபோதிலும் தனது தொழில் வளத்தைப் பெருக்கிக்கொள்ள உதவுகின்றன. எனவே வேறு எத்தகைய குறைபாடுகளும் இடையூறுகளும் திட்டங்களுக் கிடையில் நேர்ந்தாலும் தமிழ்நாட்டு அரசாங்கமும், மக்களும் அவற்றைப் பொருட்படுத்தாது கருமமே கண்ணுக இருந்து இன்றைய தமிழகத்தை நாளும் நாளும் தொழில் துறையிலும், பிற கல்வி, நலத்துறை முதலியவற்றிலும் ஓங்கச் செய்து தாமும் சிறப்படைந்து தமிழ் நாட்டையும் சிறப்புறச் செய்வர் என்பது உறுதி.

பெருந் தொழில்களை உண்டாக்குவதோ, திட்டங்களை ஒழுங்குபடுத்துவதோ அவற்றுக்குரிய பொருள்களைப் பிரிப்பதோ அன்றிப் பெருந்தொழில் வளர்ச்சிக்குரிய வெளிநாட்டு இயந்திர சாதனம் மூலப் பொருள் முதலியவற்றை வாங்கிக்கொண்டு வருவதோ ஆகியவற்றில் தமிழ்நாட்டு அரசாங்கம் ஒன்றும் செய்ய இல்லாத நிலையில் உள்ளது. பரந்த பாரத நாட்டின் உறுப்பு அங்கமாக இது அமைந்துவிட்ட காரணத்தால் திட்டங்களும், பொருள் ஒதுக்கலும், ஏற்றுமதி இறக்குமதிபோன்ற கட்டுப்பாடுகளும் அனைத்திந்திய அரசாங்கத்தினிடமே இருக்கின்றன. எனினும் தமிழ் நாட்டு அரசாங்கம் இடைவிடாது நாட்டின் தேவையை ஆயிரத்து மூன்று மைலுக்கு அப்பால் கேட்கும் வகையில் முயன்று கொண்டே இருக்க வேண்டும்; முயன்று

கொண்டே வந்திருக்கிறது ; இனியும் முயன்று வரும் என்பதில் ஐயமில்லை. எத்தனை குறைபாடுகளிருந் தாலும் தமிழ்நாட்டு அரசாங்கம் செய்யும் பெருமுயற்சி களாலே அடுத்த இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் தமிழ்நாடு தொழில் துறையில் மிக உயர்ந்த நிலை யில் முன்னேறும் என்பது உறுதி. நல்ல அர சாங்க ஊழியர்கள் எத்தகைய திட்டத்தையும் அய ராது அயிர்க்காது, ஓயாது ஒழியாது நிறைவேற்றித் தர அல்லும்பகலும் தயாராக உள்ளனர். 'உலகெங் கணும் எங்கெங்கு உழைப்பு உண்டோ அங்கெல் லாம் தமிழரைக் காணலாம்' என்று 'கால்டு வெல்' அன்று சொன்ன சொல் இன்றும் உண்மையா கவே உள்ளது. எனவே தமிழ்நாட்டு அரசாங்கம் தமக் குரிய உரிமையைப் பற்றி அதிகமாக வாதாடிப் பொரு ளையும் பிறவற்றையும் வாங்கித் தருவது உறுதி. ஊழியர்களும் மக்களும், அவர்கள் பின்னின்று எந்தத் திட்டத்தையும் இடரினும் தளரினும் அஞ்சாது முன் னேறி நிறைவேற்றி வைப்பார்கள் என்பதும் உறுதி. தமிழ்நாட்டுக்கு வேண்டிய மின்சாரம், பாசனம், போக்கு வரவுச்சாலை, மூலப்பொருள் செல்வ வளன், பிறநாட்டு இயந்திரம் முதலிய அடிப்படைத் தேவைக்குரிய வற்றை அயராது நமது அரசாங்கத்தார் கேட்டு வாங் கித்தந்துகொண்டே இருப்பின் அவருடன் தோளோடு தோள்சேர்ந்து தமிழ்ச் சமுதாயம் சாதி சமய நீதி நிற பிற எல்லா வேறுபாடுகளையும் மறந்து முன் னேற்றப் பாதைக்கு இயைந்து செல்லும் என்பது உறுதி. மலேயா, இலங்கை, பர்மா, தென்னாப்பிரிக்கா, பிஜித் தீவுகள் ஆகிய வெளிநாடுகளுக்கெல்லாம் தலை முறை தலைமுறையாகச் சென்று சென்று பாடுபட்டுத் தம் வாழ்வையும் இரத்தத்தையும் சிந்திச் சிந்திஅந் தந்த

நாட்டு மக்களாலேயே வேற்றுக் கண்ணோடு நோக்கப் பெற்றுப் பிடர்பிடித்துத் தள்ளப்பட்டுத் தமிழ்நாடு வந்து சேரும் லட்சக்கணக்கான தமிழ் மக்கள் எந்த வேலையினையும் ஏற்றுத் திறம்பட முடிக்கத் தயாராக உள்ளனர். ஊராருக்கெல்லாம் உழைத்து உழைத்து ஓட்டாண்டியாகிய தமிழ்ச் சமுதாயம் தன்னாட்டை வளம் படுத்தத் தயங்காது என்பது உண்மை. எனவே தமிழ்நாட்டு அரசாங்கத்தார் ஒல்லும் வகையெல்லாம் முயன்று திட்டகாலங்களில் ஒதுக்கும் தொகையில் உரிய பங்கைப் பெறுவதோடு பெருந் தொழிற்சாலைகள் பலவற்றை இங்கே நிறுவத்தக்க வாய்ப்புகளையும் மத்திய அரசாங்கத்திடம் கேட்டுப் பெற்றுக்கொள்ள வேண்டும். தமிழ்நாட்டு அரசாங்கம் அந்தப் பணியில் தவறவில்லை என்பதை உணர்வோம். எனினும் 'சுடர் விளக்காயினும் நன்றாய் விளக்கிடத் தூண்டுகோல் ஒன்று வேண்டும்' என்ற அடிப்படையிலேயே இதை நான் இங்கே குறிக்கின்றேன். இதுவரையில் முயன்றது போன்றே இனியும் தமிழ்நாட்டு அரசாங்கம் முயன்று அடுத்துவரும் திட்டகாலங்களில் — சிறப்பாக அடுத்த பத்தாண்டுகளில் எத்தனை பெருந்தொழில் சிறு தொழில்களை நாட்டில்—தமிழ் மண்ணில்-வளர்க்க முடியுமோ அத்தனைக்கும் வழிகோலவேண்டுமெனக் கேட்டுக்கொள்ளுகிறேன். 1976ல்—நான்காவது, ஐந்தாவது திட்டமுடிவுக் காலத்தில் — தமிழ்நாடு பொன் கொழிக்கும் பூமியாக—தன் நிறைவினை எல்லாத் துறையிலும் பெற்ற அங்கநாடாக —செயல்திறத்தைச் செம்மையாகச் செய்து வெற்றிகண்ட நாடாக — விளங்கும் என்ற நம்பிக்கையோடு இப்பகுதியை முடிக்கின்றேன்.

6

# 5. உற்பத்தித்திறனும் வாழ்க்கைத்தரமும்

முன்னைய அத்தியாயம் ஒன்றில் நாம் மனித வாழ்க்கைக்கு மிகவும் அத்தியாவசியமான அல்லது அடிப்படைத் தேவையானவை என்று உணவு, உடை, உறையுள் என்னும் மூன்றையும் குறிப்பிட்டோம். அதே நேரத்தில் இந்த இருபதாம் நூற்றாண்டின் மனநிறைவு இவை மூன்றும் கிடைத்தாலும் அதோடு திருப்தி அடையாமல் மனிதன் தேவைகளைப் பெருக்கிக் கொண்டே செல்கிறான் எனவும் கண்டோம். ஆகவே மனிதர்கள் வாழும் அந்தந்த நாடு அல்லது சமூகத்தை அனுசரித்து அவனுக்குச் சில தேவைகள் அவசியமென்று ஆகிவிடுகிறது. இந்த விதமாக ஒவ்வொரு சமூகத்தில் அல்லது நாட்டில் வசிக்கும் ஒருமனிதன் தன் தேவை அல்லது பெற்றுள்ள வசதிகளை மற்ற வேறோர் இடத்தில் உள்ள ஒரு மனிதனின் நிலையுடன் ஒப்பிட்

டுப் பார்க்கத் தொடங்குகின்றான். இவ்வாறு வேறுபாட்டுடன் உள்ள வாழ்க்கை வசதிகளைத்தான் வாழ்க்கைத் தரம் என்று எல்லோரும் அழைக்கக் காண்கிறோம். இரண்டு உலகப் போர்களுக்குப் பிறகு உலகத்தில் உள்ள ஒவ்வொரு நாடும் ஒவ்வொரு விதமாக முன்னேறி, நாடுகளின் வாழ்க்கைத் தரத்திலே பெருத்த அளவு வேறுபாட்டை ஏற்படுத்திக்கொண்டுள்ளது. இதன் காரணம் அந்தந்த நாட்டு மக்களின் உழைப்பே என்று பலரும் உணர்கின்றனர். இவர்களின் உழைப்பே அவர்கள் நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குக் காரணமாய் அமைந்து சமூக முன்னேற்றத்தைக் கொடுக்கின்றது. இந்தச் சூழ்நிலையில்தான் உற்பத்தித்திறன் (Productivity) என்ற சொல் பழக்கத்திற்கு வரத் தொடங்கியது. உற்பத்தித் திறன் ஒரு நாட்டில் அல்லது சமூகத்தில் அல்லது ஒரு தொழிற் கூடத்தில் அதிகமானால் அங்கங்குள்ள மக்களின் வருவாய் – வாழ்க்கைத் தரம் – உயரும் எனக் கண்டுள்ளனர்.

நாம் ஒவ்வொருவரும் நம் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக்கொள்ள எவ்வளவோ திட்டமிடுகிறோம். ஒரு சிறிது வெற்றியும் கண்டிருப்போம். ஆனால் வாழ்க்கைத்தரத்தை நிச்சயமாக உயர்த்திக்கொள்வது எப்படி என்று தெரிந்து கொண்டோமானால் வாழ்க்கை வாழ்வதன் பயனை அடைவது உறுதி. ஆகவே இதற்கு மூலகாரணமாக அமையும் இந்த உற்பத்தித் திறனைப் பற்றிச் சற்று விளக்கமாகக் காண்பது அவசியம்.

நாம் ஒரு பொருளை உற்பத்தி செய்ய வேண்டுமானால் அதற்குச் சில மூலப் பொருள்களும், அவைகளை

வேண்டிய அல்லது விரும்பிய உருவத்துக்குக் கொண்டு வரச் சில இயந்திரங்கள், அவ்வியந்திரங்களை இயக்கு விக்க வேண்டிய சக்தி, கவனிக்க ஆட்களின் சக்தி, இவைகளை வாங்கப் பணம், அமைக்க இடம் முதலியன வேண்டும். இவ்வசதிகளைத்தான் செய்மானம் (Input) என்று கூறுகிறார்கள். இவற்றைப் பயன்படுத்தி முடிவாக வரும் பொருள்களைத்தான் செலவினம் (Output) என்கிறார்கள். இவற்றின் இடையே சில மூலப் பொருள்களும் மற்றும் செல்வும் வீணாகின்றன. ஆகை யினால் எப்பொழுதும் செலவினம் செய்மானத்தைவிடக் குறைவாகவே இருக்கும். இவ்விரண்டிற்கும் இடையே உள்ள விகிதத்துக்குத்தான் உற்பத்தித் திறன் என்று பெயர்.

$$\frac{\text{விளைவின் அளவு}}{\text{வசதிகளின் அளவு}} = \text{உற்பத்தித்திறன் Productivity} = \frac{\text{செலவினம் (Output)}}{\text{செய்மானம் (Input)}}$$

இது எவ்வளவுகெவ்வளவு ஒன்றை நோக்கி அதிக மாகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு உருவாகும் முறை களில் வீண்நிலை அளவு குறைகிறது என்றும், இதனால் நட்டம் குறைந்து பலன் அதிகரிக்கிறது என் றும் கொள்ளவேண்டும். ஆகையால் பரந்த நோக் கத்தில் பார்க்கும்போது உற்பத்தித்திறனை உயர்த்தல் என்று சொல்வது கிடைக்கின்ற வசதிகளாகிய ஆட்களின் சக்தி, இயந்திர சக்தி, அவற்றை இயக்கு விக்கும் சக்தி, பணம், நிலம் முதலியவற்றினைத் திறமை யுடன் பயன் படுத்திக்கொள்ளுதல் என்பதாகும்.

உற்பத்தி அதிகமானால் மட்டும் சமூகத்தின் அல் லது நாட்டின் பொருளாதாரம் உயர்ந்துவிட முடியாது. அந்த உற்பத்தி எந்த வழியில் அல்லது வகையில் உயர்த்தப்பட்டது என்று காணவேண்டும். உற்பத்

திக்குத் தேவையான வளங்களை, அவைகளுக்காகும் அடக்கச் செலவைப் பொருட்படுத்தாமல் அதிகமான ஆட்களை வைத்தும், இயந்திரங்களை நிறுவியும் அளவு கடந்த பொருள்களைப் போட்டும் உற்பத்தியைப் பெருக்க முடியும். இது ஒரு வழி. மற்ற ஒரு வழி, இருக்கும் வசதிகளை, வைத்துக்கொண்டே வீணாகும் அளவைப் பல விதங்களால் குறைத்து விளைவின் அளவை அதிகப் படுத்துதல். இம் முறையில் நட்டம் குறைந்து, அடக்கச் செலவும் குறைகிறது. முன்னைய வழியைவிட இரண்டாவது வழியே இலாபகரமானது. உற்பத்தி என்பது விளைவின் அளவை மட்டுமே குறிப்பதாகும். உற்பத்தித் திறன் என்பது விளைவின் அளவுக்கும் அதற்காகச் செலவிட்ட வளங்களின் அல்லது வசதிகளின் அளவிற்கும் உள்ள விகிதம். உற்பத்தி அதிகமாவதால் உற்பத்தித்திறன் அதிகமாகவேண்டும் என்று இல்லை. ஆனால் உற்பத்தித் திறன் அதிகமாவதால் நிச்சயமாக உற்பத்தி அதிகமாகிறது. இதை ஓர் உதாரணத்தால் விளக்கலாம். ஓர் தொழிற்சாலையில் வேலை செய்யும் 100 ஆட்கள், அதைப்போன்ற மற்றொரு தொழிற்சாலையில் பணியாற்றும் 125 ஆட்களால் ஆகக்கூடிய பொருள்களை அதே கால அளவில் அதே அளவு வசதிகளைக் கொண்டு உற்பத்தி செய்கிறார்கள் எனக் கொள்வோம். இந்நிலையில் இரண்டு தொழிற்சாலைகளின் உற்பத்தி அல்லது விளைவின் அளவுகள் ஒன்றுதான். ஆனால் முன்னதின் உற்பத்தித்திறன் பின்னதின் உற்பத்தித்திறனை விட அதிகம் ஆகின்றது. இவ்வாறு ஒவ்வொரு சூழ்நிலையிலும் உற்பத்தித்திறன் அதிகமாகும்போது அவ்விடத்திய அல்லது சமூகத்தின் வாழ்க்கைதரம் எவ்வாறு உயருகிறது எனக் கீழே காணலாம்.

ஒரு சமூகம் என்று எடுத்துக்கொண்டால் அதனுடைய மக்கள் தங்கள் வாழ்க்கைத் தேவைகளுக்குத் தங்களின் உழைப்பைக் கொடுத்து ஊதியம் பெறுகிறார்கள். அவ்வூதியத்தைக்கொண்டே தங்களுக்கு வேண்டிய மற்றப் பொருள்களை வாங்கிக் கொள்கிறார்கள். இதே மக்கள்தாம் பல தொழிற் கூடங்களில் அப்பொருள்களைச் செய்ய வேண்டியவர்களாக ஆகிறார்கள். இம்மக்கள் ஒரு தொழிற் கூடத்தில் வேலை செய்யும்பொழுது அங்குள்ள செய்மானத்தை அதாவது வளங்கள் அல்லது வசதிகளைச் சிக்கனமாகவும், திறமையாகவும் பயன்படுத்தி உற்பத்தித்திறனையும், அதன்மூலம் உற்பத்தியையும் அதிகமாக்குகிறார்கள். உற்பத்தித்திறன் அதிகமாகும் காரணத்தால் பொருள்களின் அடக்கவிலை குறைகிறது. அதே சமயம் பொருள்களின் தரம் உயர்ந்து அவைகளைச் செய்யும் நேரம் அல்லது கனஅளவு குறைகிறது. இதே மக்கள் தொழிற் கூடத்தைவிட்டு வெளியே செல்லும்போது சாமான்களை வாங்கும் வாடிக்கைக்காரர்களாகின்றார்கள் (Customers). மிகக் குறைந்த நேரத்தில் மலிவாகப் பொருள்களை உற்பத்தி செய்வதனால் பலருக்கும் அப்பொருள்களை அடைய வழி வகுக்கப்படுகிறது. அப்படி நிறையப் பொருள்கள் விற்பதால் தொழிற் கூடத்திற்குப் பெரும் அளவில் இலாபம் வர ஏதுவாகிறது. அவ்வாறு அதிகலாபம் வரும் தொழிற்கூடத்தில் பணியாற்றும் மக்கள் அதிக ஊதியத்தை அடைகின்றனர். அதிக ஊதியம் பெறும் மக்கள் மேலும் மேலும் மற்றத் தொழிற்கூடங்களில் உற்பத்தித்திறன் உயர்த்தும் வழியில் உற்பத்தியாகும் பல பொருள்களை வாங்கி வாழ்க்கை வசதிகளைச் செய்துகொள்ள இடம் உண்டு. ஆகையால் இந்த உற்பத்தித்திறன் உயரு

வதால் மக்களின் வருவாய் அதிகமாகிறது. அதே சமயம் அவர்களின் வசதிகளை வாங்கும் சக்தி (Purchasing Capacity) அதிகமாகிறது. இதனூடே மக்களின் வசதிகள் பெருகும் வேகம் அல்லது வீதம் (rate) அதிகமாகிறது. ஆகையால் மக்களின் வாழ்க்கைத் தரமும் கூடவே அதிகரித்து உயருகிறது. இது மட்டுமன்றி உள் நாட்டிலும், வேறு பிற வெளி நாடுகளிலும் நம் பொருள்களின் தரம், உயர்ந்திருப்பதாலும், விலை குறைந்திருப்பதாலும் வியாபாரம் பெருகுகிறது. இதன்மூலம் நாட்டுக்கு அதிக வருமானம் உயர; வருமானத்தினால் நாட்டின் பொருளாதாரமும் உயர்கிறது.

உற்பத்தித்திறன் உயர்வதால் மக்களின் வாழ்க்கைத் தரமும், நாட்டின் பொருளாதாரமும் எப்படி உயர்கின்றன என்று மேலே கண்டோம். மேலை நாடுகளில் உபயோகிக்கப்படும் எவ்வழியாயினும் நாம் உடன் அதை மேலானது என்று கருதுகிறோம். மேல்நாட்டுப் பொருள்கள் என்றால் உடன் எவ்விலையாயினும் எவ்வழியினும் பெறத் தயாராக இருக்கிறோம். அவர்களின் பொருள்கள் இங்கே நம்மிடம் விற்கப்படுவதால் அவர்களுக்குப் பணம் நிறையப் போகிறது. அவ்வாறு பணம் போகும் இடத்தில் பணியாற்றும் ஊழியர்களின் ஊதியமும் அதிகமாகிறது. இவ்வாறு ஊதியம் பெருகும் சமூகத்தில் அவ்வூதியத்தைப் பயனுள்ளபடி பயன்படுத்த மக்கள் முற்படுகின்றனர். இதன் காரணமாகவே குறைந்த வேலை நேரம், வேலை நிலைமைகளில் முன்னேற்றம், பொருள்களையும் இன்பத்தையும் அனுபவிப்பதற்கு நல்ல ஓய்வு, வேலையைப் பொறுத்த உயர்ந்த மனநிறைவு என்பவைகள் தாமாக ஏற்படுகின்றன.

இவ்வாறு பலப்பல பயன்களை அடைய வழி செய்யும் உற்பத்தித்திறனை நாம் ஏன் கடைப்பிடிக்கக் கூடாது? இதற்கான வழிகள் என்ன என்று நாம் இதுவரை யோசிக்காமல் இருந்திருப்பினும், இனியாவது கடைப்பிடிக்க முயலவேண்டும். அப்படி இல்லையெனில் பிறநாட்டவர் நம்மைவிட வாழ்க்கையில் முன்னேறிக்கொண்டும் நாம் பின்னேக்கியும் செல்ல இடம் ஏற்பட்டுவிடும். அரசாங்கத்தினர் பலப்பல ஐந்தாண்டுத் திட்டங்கள் போட்டாலும் நம் நாட்டின் பொருளாதார நிலையும் மக்களின் வாழ்க்கைத்தரமும் உயர வேண்டுமானால், முக்கியமாக நம்நாட்டுத் தொழிற் கூடங்களில் — பெருந்தொழில் சிறுதொழில் எதுவாயினும் — உடனடியாக உற்பத்தித்திறன் உயர்ந்தே ஆக வேண்டும். இது தானாக உயர வழிஇல்லை. தொழிற் கூடங்களின் மேலாட்சியினரும் (Management) அக் கூடங்களில் உழைக்கும் மக்களும் தங்களுள் ஒருவரை யொருவர் அறிந்து, நாட்டுக்கும் சமூகத்திற்கும் அவர்கள் எப்படிக் கட்டுப்பட்டிருக்கின்றனர், அவர்களின் பொறுப்பு என்ன என உணர்ந்து முயற்சி செய்து தொழிற்பட வேண்டும்.

உற்பத்தித்திறனை உயர்த்தக் காரணமாக அமையும் காரணிகள் (factors) இரண்டு வகைப்படும். இவைகள் 'வெளி'க் காரணிகள், 'உட்' காரணிகள் என்பனவாகும். முதல் வகையானது அரசாங்கத்தினரின் திட்டங்களையும் உதவியையும், தேசியச் சூழ்நிலையையும், அத்தொழிற் கூடங்களில் பூகோள அமைப்பில் பெற்றுள்ள இருப்பிடத்தையும் பொறுத்திருக்கின்றன. இவற்றில் அடங்குவன :— விற்பனையின் அளவு, பொருளாதாரம், செயல்படும் நிலை, விற்பனைப் போட்டியின் அளவு, மூலப்பொருள்கள் எளிதில் கிடைக்கும்

நிலை அவற்றின் தரம், வளங்கள் அல்லது வசதிகள், எளிதில் இயங்குதல், முதலும் கடனும் எளிதில் கிடைக்கக்கூடிய வாய்ப்பு, வரி, கல்விக்கும் பயற்சிக்கும் வாய்ப்புக்கள், தொழில் ஆராய்ச்சி, இயற்கை வளங்கள், தட்ப வெப்ப நிலைகள், நடப்பிலுள்ள ஆற்றல் மிகுந்த வளங்கள் முதலானவைகள் ஆகும். மற்றொரு வகை காரணியாக இருக்கும் உள் காரணிகள் இயந்திரத் தொகுதிகளில் உற்பத்திப் பெருகுவதற்குப் பயன்படக் கூடிய அடிப்படைக் கருவிகளைப் பெற்றுள்ளன. இவற்றில் சேர்வன: விஞ்ஞான முறையில் அமைந்த மேலாட்சித் தொழில் நுணுக்கங்கள், (Scientific Management) மனிதர் தம் ஒற்றுமை (Human relations), உற்பத்திக்கட்டுப்பாடு (Production control), உற்பத்தித்திட்டமிடுதல் (Production planning), எந்திரத் தொகுதியின் பரப்பு, பொருள்களைக் கையாளும் முறை, வேலை ஆராய்தல் (Method study), வேலையை அளக்கும் முறை (Work Measurement), அடக்கச் செலவுக் கட்டுப்பாடு, தரக் கட்டுப்பாடு, பொருள்களின் உருவக அமைப்பு (Design), எளிமைப்பாடு, சில பகுதிகளைக் கொண்டே பல வகை அளவுப் பொருள்களைச் செய்தல் (Standardization), தனிச்சிறப்பெய்தல் (Spceilisation), உள்ள எல்லா வளங்களையும் முழு அளவிற்கும் பயன்படுத்தும் வகை (Utilisation), இன்னும் இவை போன்றன பிறவும் எனலாம்.

மேற்கண்ட காரணிகளில் இருந்து நாம் உற்பத்தித்திறனை உயர்த்துவது என்பது எளிதானதல்ல என அறிகிறோம். அதே சமயம் எப்படியாவது உற்பத்தித் திறனை உயர்த்தினால் நாட்டில் உள்ள பலரும் பலவிதங்களில் பயனடைவர் எனவும் அறிகிறோம். இந்தப் பொருள் உற்பத்தி செய்ய இந்தச் சூழ்நிலையில் இன்னது

செய்தால்தான் உற்பத்தித் திறனும், அதன் விளைவாக உற்பத்தியும் உயரலாம் என வரையறுத்துக் கூற முடியாது; அந்தந்தச் சூழ்நிலைக்குக் காரணமாக அமையும் காரணிகளையும், மக்களின் ஒற்றுமை உற வுத் தன்மையையும் இன்ன பிறவற்றையும் பொறுத்த தென அறிதல் வேண்டும். முன்பே கண்டவாறு ஒரு முடிவுப்பொருள் அல்லது விளைவை அடையச் செய்யும் முறைகளில் பலதிறப்பட்ட வளங்களை அல்லது வசதி களைப் பயன்படுத்துகின்றோம். உற்பத்தித்திறன் என் பதும் விளைவின் அளவிற்கும் அதற்காகச் செலவிடப் பட்ட வளங்களின் அளவிற்கும் இடையே உள்ள விகிதம் என அறிந்தோம். ஒரு விகிதம் கண்டுபிடிக்க வேண்டுமானால் பின்னத்தில் மேலுள்ளதும் கீழ் உள்ள தும் இரண்டும் ஒரே அளவையில்தான் (Unit) இருக்க வேண்டும். ஆனால் வளங்கள் பலதிறப்பட்டவைகளாக இருக்கின்றன. ஒவ்வொன்றுக்கும் ஓர் அளவை மற்ற வற்றின் அளவையினின்றும் வேறுபட்டிருக்கிறது. பொதுவாக இதைக் கணக்கிடும்போது இரண்டையும் விலைமதிப்பிட்டுப் பின்பு விகிதம் கண்டுபிடிப்பார்கள். ஆனால் ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு வளம் அல்லது வசதியை மட்டும் சீர்திருத்திக் கவனித்துத் திறமை யாகப் பயன்படுத்தி மற்ற வசதிகளின் அளவுகளை அப்படியே வைத்திருக்க வேண்டி இருக்கும். உதாரண மாக வேண்டிய மூலப் பொருள்கள், இயந்திரங்கள், இயங்கும் சக்தி, இடம் முதலியவற்றை அப்படியேவைத் துத் திறமையான வெறுப்பும் கட்டமுமின்றி நிறைய வேலை செய்யும் ஆட்களை வைத்து ஆட்களின் சக்தித் தேவையை மட்டும் குறைத்திருக்கலாம். அல்லது ஆட்கள், இயந்திரங்கள், இயங்கும் சக்தி, இடம் முதலியவற்றை அதே அளவு வைத்து மூலப் பொருள் களின் தரத்தை மட்டும் உயர்த்தி அதன் அளவைக்

குறைத்து உற்பத்தித்திறனை அதிகமாக்கி இருக்கலாம். இப்படி ஏதாவது ஒரு வளனை மட்டும் கொண்டு உற்பத்தித்திறனை அதிகரிக்கும்போது, அந்த உற்பத்தித்திறன் விகிதத்தை எந்தவகை வளத்தைக்கொண்டு அதிகரித்தோமோ அதற்கென்வே சம்பந்தப்படுத்தி (With respect to) தெரிவிப்பது இயல்பு. பொதுவாக மேலைநாடுகளில் ஊழியர்கள் அதிகக் கூலி வாங்குவதாலும், ஆட்கள் கிடைப்பது மிக அரிதாகின்றதாலும் அவர்கள் பொதுவாக உற்பத்தித்திறனை எப்பொழுதும் பணியாற்றுவதுடன் சம்பந்தப்படுத்தியே கருதுவர். (Productivity with respect to Labour). ஆனால் நம் நாட்டில் ஆட்களின் சக்தி அதிகமாகவும் அதனால் அதன் விலை குறைவாயும் இருப்பதால் நம் நாட்டில் உற்பத்தித் திறனை இயந்திர வசதிகளுடன் சம்பந்தப்படுத்தி ஒப்பிட்டுப் பார்ப்பது முறையாகும் எனக் கருதப்படுகின்றோம். (Productivity with respect to Machinery). இம்மாதிரி உற்பத்தித்திறனை ஏதாவதொரு வளத்துடன் சம்பந்தப்படுத்துவது அந்தந்தச் சூழ்நிலையைப் பொறுத்துள்ளது. எப்படிச் சம்பந்தப் படுத்தப்பட்டாலும் பலன் அடக்கவிலையையும், கால அளவையும் குறைப்பதிலேயே முடியும்.

உற்பத்தித்திறனின் நோக்கம், அதிகமான உற்பத்தியைக் குறிக்கிறதே தவிர மிகவும் கடினமான வேலையைக் குறிக்கவில்லை. வேலைச் சுமையை (Work load) அதிகப்படுத்துவதாலோ அல்லது துரிதப்படுத்துவதாலோ உற்பத்தித்திறனை யாரும் எதிர்பார்க்கவில்லை; எதிர்பார்க்கவும் கூடாது. எதிர்பார்த்தாலும் அதில் நிலைத்த வெற்றி காணவும் முடியாது என்பது உறுதி. மேலாட்சி (Management) யானது விஞ்ஞான அடிப்படையில் இயங்குமாயின் தகுந்த உரிய மேலாள

ரைக்கொண்டு நல்ல முறையில் உற்பத்தித்திறனை உயர்த்தமுடியும். உண்மையான-அடிப்படையான-உற்பத்தித்திறன், கொள்கை எந்த வசதியும் அல்லது வரவும் எவ்வகையிலும் வீணுவதைத் தடுக்கிறது. மேலும் வேலை நிலைமைகள் உயர்தல், களைப்பும் கடின உழைப்பும் தவிர்த்தல், வேலையில் அதிக மனநிறைவை நிலவச்செய்தல் போன்ற நோக்கங்களையும் இது கொண்டுள்ளது. அதே சமயம் எந்த ஒரு வேலையையும் அப்போது செய்யும் செய்முறையைக் காட்டிலும் சிறந்த வகையிலும், எளிமையாகவும், சீக்கிரமாகவும் செய்யும் முறை உண்டு என்பதை மறத்தல்கூடாது. அவ்வழியைக் காண முயல்வதே உற்பத்தித்திறன் முயற்சியின் கடமையாகும்.

பல வகையில் பலன்களை நல்கும் இவ்வுற்பத்தித்திறனைப் பற்றிச் சில தவருன கருத்துக்கள் சில சமயம் எதிர்பாராமல் வந்து சேருகின்றன. இம்மாதிரியான தவருன கருத்துக்களை அகற்றுவிடில் உற்பத்தித்திறனைப்பற்றி எண்ணக்கூட இடமில்லை. இதை முதலாளிகள் அதிக லாபம் குவிக்கவே பயன்படுத்தும் ஒரு கருவினெனத் தவருகக் கருதுகிருர்கள். உற்பத்தித்திறன் முயற்சியில், நல்ல முறையில் உண்டான திட்டம், இதை ஏற்படாமல் தடுக்கும் எனலாம். முதலும், உழைப்பும், உற்பத்தித்திறன் உயர்வால் விளையும் பயன்களில் சம பங்கு பெறுவதே அதன் குறிக்கோளாகும். உண்மையில் நுகர்வோரும் அந்தப் பயனில் பங்குபெற வேண்டும். உற்பத்தி அடக்கச் செலவுக் குறைவால் பொருள்களின் விற்பனைவிலை குறைவதன் பலனுக, அவர்கள் நன்மை பெறுகிருர்கள். ஆகவே, உற்பத்தித்திறன் உயர்வால் வளரும் பயன்கள், வேலைதருவோர், தொழிலாளர், நுகர்வோர் என்ப

வர்களிடையே சமமாகப் பங்கிடப் பெறுகின்றனவே தவிர, முதலுக்கே சென்று சேரவில்லை என்பதை நாம் மெய்ப்பிக்கவேண்டும்.

உற்பத்தித்திறன் முயற்சியால், மிகைபாடு, (Redundancy), இடம் மாற்றம், வேலையின்மை என்பன விளையும் என்ற ஓர் அச்சமும் இருக்கிறது. உண்மையில், இது ஏற்படக்கூடியதே ஆகும். உற்பத்தித் திறன், தொழில் நுணுக்கங்கள், செய்முறைகள் என்பவற்றின் சேர்ப்பாலும், உற்பத்தி அடக்கச் செலவைக் குறைக்கும் முயற்சியாலும், இயந்திரத் தொகுதிகளிலும் அல்லது அவற்றின் தனிப்பகுதிகளிலும் தேவைக்கு மிகுதி என்று சிலர் கருதப்படும் நிலை வரலாம் என்பதையும் எதிர்பார்க்கக்கூடும். இதுவே அச்சத்திற்கு அடிப்படை எனலாம். என்றாலும், பிறநாடுகளின் அனுபவத்தைப் பார்த்தால் இப்படி அஞ்சத் தேவை இல்லை என உறுதியுடன் கூறலாம். மாறாக, உயர்ந்த உற்பத்தித்திறன், வேலைதரும் மிக உயர்ந்த நிலைகளுடன் இணைந்து செல்வதையே அந்நாடுகளின் அனுபவம் காட்டுகிறது.

முன் கண்டவாறு உற்பத்தித்திறனை உயர்த்துவதாலும், உற்பத்தி அடக்கச் செலவையும் விற்பனை விலையினையும் குறைப்பதாலும் விற்பனை பெருகி, விரிவான தேவை உண்டாகிறது. பெருமளவில் திட்டமிடுதல், வேலை அளிக்கும் வாய்ப்பு முடிவில் விரிவடைதல் என்பன அவற்றின் விளைவுகளாகும். முதலீட்டுக்கு மிகுந்த பலன் கிடைக்கும் வாய்ப்பு அதிகமாவதால் தொழில் துறை விரிவடைந்து வேலைதரும் வாய்ப்பு பெருகுகிறது. மக்களின் கைகளுக்கு வாங்கும் சக்தி மிகுவதால், மேலும் பல சேவைகளும், கல்வி, பொழு

போக்குக்கான வாய்ப்புகளும் தேவைப் படுகின்றன. இவற்றின் விளைவாலும் வேலைதரும் வாய்ப்பு அதிக மாகின்றது.

உற்பத்தித்திறன் உயரும் முறையில், இயந்திரத் தொகுதிகளின் பகுதிகளிலோ அல்லது சிறு இடங் களிலோ, ஒரு வகையான நிலையற்ற மிகைபாடு (Temporary redundancy) ஏற்படுவதுண்டு. அத்தகைய மாறுபடும் மிகைப் பாட்டினால், வேலையின்மை ஏற்படுவ தைத் தடுக்கும் சக்தி தொழில் துறையினரிடமும் அரசாங்கத்திடமும் உள்ளது. இதற்கான நேரடியான நடவடிக்கைகளை அவர்களால் எடுக்க முடியும். இவற் றுள் அடங்குவன :– முன்கூட்டித் திட்டமிடல், வேலை இட மாற்றங்களை முன்னறிந்து செல்லுதல், எதிர்பார்க்கும் இடமாற்றங்களைப் பற்றிய முன் அறிவிப்புக்கள், மிகைப்பாட்டினைக் குறைப்பதற்காகப் புதிதாக ஆட்களைச் சேர்ப்பதை நிறுத்தி வைத்தல் அல்லது குறைத்தல் முதலியவைகளாம். மாற்றப் பட்ட தொழிலாளரைப் புதிய வேலைகளுக்குப் பொருந் தச் செய்யும் தொழிலுதவியுடன், மறுபயிற்சி தருதல், ஓய்வுப் பணம், வீட்டு வசதிகள் தந்து எவ்விடத்திற் கும் பெயர்ந்து வாழும் நிலையை வளர்த்தல், வேலை யின்மையிலிருந்து பாதுகாப்பு முதலியவைகளும் அவற்றுள் அடங்கும். வேலை உறுதி (Security) என்பது வேலைகளின் தன்மை மாறுத நிலையைக் குறிப்பதாகாது. தொழில் நுணுக்கக் கலை வளர்ச்சி, மாறுபாடு முதலியவைகளுடன், வேலைகளின் தன்மை யும் உறுதியாக மாறியாக வேண்டும். மாறுதல் தேவைப்படும் இடங்களில் தொழிலாளரைச் சேர்க்க வேண்டியுள்ளது. வேலை தருவோர், அரசாங்கம் முதலி யோரின் கூட்டு முயற்சிகளாலும், தொழிலாளருடன்

கலந்தாராய்வதாலும் விளையக்கூடிய சிறிது மாறுபடும் மிகைப்பாட்டினால் ஏற்படும் கவலையும் வேலையின்மையும், திண்ணமாக ஏற்படாமல் தவிர்க்கக் கூடும்.

மேற்கண்ட உற்பத்தித்திறனை உயர்த்தும் முயற்சிகளுள் பலவற்றை நம் தமிழ்நாட்டில் மட்டும் இன்றிப் பாரத்நாடு முழுதுமே அரசாங்கத்தைச் சார்ந்தோ சாராமலோ பல அமைப்புக்களும் நிலையங்களும் அமைக்கப்பட்டு, பலவகையான திட்டங்கள் கடந்த ஐந்தாறு ஆண்டுகளாகத் தீவிரமாகச் செயல்படுத்தப்பெற்று வருகின்றன. அதுமட்டுமன்றி இத்திட்டங்களில் மேலாட்சியினரும், தொழிலாளரும் மற்றும் இருவருக்கும் இடையே உள்ள அதிகாரிகளும் மிக்க ஆர்வம்காட்டி வருகின்றனர்.

1952 லும் 1954 லும் 'ஐ. எல். ஒ.' குழுககள் இந்தியாவிற்கு வந்தன. இவை அகமதாபாத், பம்பாய் நெசவாலைகளிலும், கல்கத்தாவின் சில பொறியியல் நிலையங்களிலும் வேலை செய்து, அவைகளிடம் இந்தப் பல வகைப்பட்ட உற்பத்தித்திறனை உயர்த்தும் முறைகளை இடம்றிந்து கையாண்டதன் பலனாக, அங்கங்கே இருந்த வசதிகளையும், ஆட்களையும் கொண்டே உற்பத்தியைப் பெருக்க முடியும் என்பதை மேலாட்சியினருக்கும், வணிகச் சங்கத் தலைவர்களுக்கும் (Trade Union Leaders) அவை எடுத்துக் காட்டின. அவைகள் 12-5% முதல் 116% வரை விளைவுப் பெருக்கத்தை ஏற்படுத்தி இருக்கின்றன.

இக் குழுக்களின் பரிந்துரைகளாலும் அவைகள் தந்த பயன்களாலும் இந்திய சர்க்காரின் தொழி

லமைச்சு 1955ல் ஓர் உற்பத்தித்திறன் மைய நிலையத்தைப் பம்பாயில் தொடங்கியது. தொழில் கல்விப் பயிற்சிகள், உயர் மேலாட்சிக் கருத்தரங்குகள் (Top Management Seminars), அதன் பயிற்சிகள், தொழிற் பொறியியலில் புதிய மறு பயிற்சிகள், மேலாட்சியினர் —தொழிலாளர் கூட்டுக் கல்விப் பயிற்சி முறைகள், சேமிப்பிடங்களின் புணரமைப்புப் பயிற்சிகள், சமூக அளவில் தொழில்களுக்கான செயல் திட்டங்கள் முதலியவை அடங்கிய பலசெயல் திட்டங்களை அது நிறைவேற்றி இருக்கிறது. நாட்டின் பல்வேறு முக்கிய தொழில் மையங்களில் உற்பத்தித்திறன் உணர்வை எழுப்புதல் பெரும்பாலும் மைய நிலையம் செய்யும் வேலையைப் பொறுத்ததாகும். இவற்றின் மற்றொரு முக்கிய திட்டம் 'TWI' எனும் தொழில் துறைக்குள் பயிற்சி. இதில் ஒரு மேற்பார்வையாளருக்கு வேண்டிய திறமை, அறிவு முதலியவைகளின் அடிப்படையில் அமைந்துள்ளது. 'TWI' ன் பயிற்சி முறைகளில் பயிற்றுவித்தல், தலைமை வகித்தல் (Leadership),முன்னேற்றச் செயல் முறைகள், வேலையில் பயிற்றுவித்தல், வேலை உறவு நிலைகள், வேலைச் செயல் முறைகள் முதலியன அடங்கி இருக்கின்றன.

மற்றும் நாட்டின் பல பாகங்களிலும் பதினாறு மேலாட்சி அமைப்புக்கள் (Management organisations) இதுவரை முக்கியத் தொழில் மையங்களில் தோன்றியுள்ளன. இவைகள் அகில இந்திய மேலாட்சிச் சங்கத்தில் இணைக்கப்பட்டிருக்கின்றன. இவைமட்டும் அன்றி அகில இந்தியத் தொழில் நுணுக்கக் கல்விக் குழு •தொழில்முறைக் கல்வியையும், உயர் தொழில் நுணுக்கக் கல்வியையும் ஒருமைப்படுத்தவும், அவற்றை நன்கு வளர்க்கவும், அமைக்கவும், அவற்

றிற்கு அறிவுரை வழங்கவும் துவக்கப் பட்டதாகும். மற்றொரு குழுவான தேசியத் தொழில் முறை வாணிகப் பயிற்சிக்குழு, கைத்தொழில் துறையில் ஒரே சீரான தரங்களைக் கொண்டுவரவும், திறமைக்கு நற்சான்றுகளை வழங்கவும், நாட்டில் பயிற்சித் திட்டத்தை ஒருமைப் படுத்த ஒரு மையச் செயல் நிலையம் அமைவதற்காக, சமீபத்தில் உருவாகி உள்ளது. வாணிப மேலாட்சிப் (Business Management) பயிற்சிகள் டெல்லி, கல்கத்தா, சென்னை, பம்பாய்ப் பல்கலைக் கழகங்களில் நடத்தப்பட்டு வருகின்றன. நாட்டில் உள்ள பல ஆராய்ச்சி நிலையங்களும் பிற நிலையங்களும் தொழில் துறைகளில் உற்பத்தித்திறன் பெருகுவதற்குத் தத்தம் பகுதிகளில் தமது பங்கினைச் செய்கின்றன எனலாம். இவற்றுள் விஞ்ஞானமும் தொழிலும் பற்றிய ஆராய்ச்சிக் குழு தன்கீழ்ப் பின்னிப் பெருகி உள்ள பல ஆராய்வுக் கூடங்களையும் (Laboratories) ஆராய்ச்சி நிலையங்களையும் பெற்று இருக்கிறது. அவை அகமதாபாத் ஆராய்ச்சிச் சங்கம் (ATIRA) பம்பாய் நெசவு ஆராய்ச்சிச் சங்கம் (BTRA) தென்னிந்திய நெசவு ஆராய்ச்சிச் சங்கம் (SITRA) தேசியச்செயற்படும் பொருளாதார ஆராய்ச்சிக் கவுன்சில் (National Council of Applied Economic Research) கல்கத்தாவில் உள்ள யுனெஸ் கோ ஆராய்ச்சி மையம், இந்தியப் பணியாளர் மேலாட்சி நிலையம் (Indian Institute of personnel Management), சிறுதொழிற் பணி நிலையங்கள் (Small Industries Service Institutes) பெங்களூரில் உள்ள இந்திய விஞ்ஞான நிலையம், கல்கத்தாவில் உள்ள அகில இந்திய சமூக நலமும், வாணிப மேலாட்சியும் பற்றிய நிலையம் முதலியவைகள் ஆகும்

1956ல் இந்திய சர்க்காரின் வாணிபத் தொழிலமைச்சுகள் (Ministries of Commerce and Industries) தொழில்களில் ஒரு விரிவான உற்பத்தித்திறன் முயற்சியைத் தொடங்கும் அடிப்படையை நிறுவுவதற்காக, ஜப்பானில் உள்ள உற்பத்தித்திறன் முறைகளையும் அவைகளைக் கையாளும் முறைகளையும் பார்வையிட்டு அறிந்து வருமாறு ஒரு குழுவினை அங்கு அனுப்பின. அமைப்பு முறையின் கட்டுமானம் (Organisation structure), மேலாட்சிப் பயிற்சிகள் கூட்டுப் பேரம், தொழில் துறையின் கட்டுப்பாட்டுத் தொழில் நுணுக்கங்கள், தொழிலாராய்ச்சி என்பவற்றை அந்தக் குழு அறிந்து வரவேண்டி இருந்தது. அவற்றுடன் இரும்பு எஃகு, பொறியியல், இரசாயனப் பொருள்கள், நெசவு முதலியவை தொடர்பான, மிகப் பெரிய அளவில் ஜப்பானில் நடைபெறும் தொழில்களில் தனிக் கவனம் செலுத்தி அறிவதும் அக்குழுவின் நிபந்தனைகளுள் முக்கியமானது. ஜப்பான் உற்பத்தித்திறன் மைய நிலையத்தின் அமைப்புத் திட்டம், இயங்கு முறை முதலியவற்றை அறிவதும் அந்தக் குழுவினுடைய விருப்பமாகும். மேலும் அதைப்போல ஒரு நிலையத்தினை இந்தியாவில் அமைப்பதும், அத்தகைய வேலை முறையை நிறுவத் தேவையான வழிகளைக் காணச் சிபாரிசு செய்வதும் அதன் எண்ணங்களாகும். தொழில் துறையினர், ஆராய்ச்சியாளர், அரசாங்க அலுவலர் முதலியோர் அந்தக் குழுவில் இருந்தனர். அக்குழு 1957ம் ஆண்டு ஓர் அறிக்கையை வெளியிட்டது. வேலை தருவோர், தொழிலாளர், அரசாங்கம் முதலியோரின் பிரதிநிதிகளும், உற்பத்தித்திறனில் ஈடுபாடு கொண்ட பிற தனிப் பகுதிகளும் சேர்ந்த தேசிய உற்பத்தித்திறன் குழுவை நிறுவுவதற்காக

அது செய்த சிபாரிசு இந்த அறிக்கையில் முக்கியமான இடம் பெற்றது. இந்தச் சிபாரிசு, பயனுள்ள முறையில் உற்பத்தித்திறன் உணர்வு இயங்குவதின் விளைவாகத் தேவைப்படும் சிறந்த தொழில் நுணுக்க உதவி அமைவதற்கும் உற்பத்தித்திறன் உயர்ந்து தோன்றுவதற்கும் ஏற்ற சூழ்நிலையை உருவாக்கும் நோக்கத்தோடும் தரப்பட்டதாகும்.

1957ல் தொழில்களின் வளர்ச்சியும் ஒழுங்கு முறையும் பற்றிய சட்டத்தின் கீழ் சட்டவரம்பிற்குள் நிறுவப்பட்ட முக்கூட்டு அமைப்பான தொழில்களின் மையக் கருத்துரைக் குழு (Central Advisory Counci of Industries), நாட்டில் உற்பத்தித்திறன் முயற்சியை நிறுவுவதற்கு, தேசிய உற்பத்தித்திறன் தூதுக் குழுவின் சிபாரிசை ஆராய்ந்து பார்த்து, அந்தச் சிபாரிசை முழுதும் ஆதரித்து ஒரு கருத்தரங்கைக் கூட்டித் தேசிய உற்பத்தித்திறன் குழு (NPC) வின் அமைப்பு முறையும் திட்டமும் பற்றிய விவரங்களை முடிவு செய்ய வேண்டும் என்ற எண்ணத்தையும் தெரிவித்தது. இதன் விளைவாக 1957ம் ஆண்டு செப்டம்பரில், தொழில் துறையினரிடமிருந்தும் தொழிலாளரிடமிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்ட வல்லுனர்களுடனும், மத்திய சர்க்கார் அமைச்சகங்களுடனும் ஆரம்பக் கூட்டங்கள் நடைபெற்றன. இதன்பின்பு 1957ம் ஆண்டு நவம்பர் மாதம் நடைபெற்ற கருத்தரங்கில் நாட்டின் பலவகைப்பட்ட நிலையங்கள், அமைப்புக்கள் சர்க்கார் ஆகியவற்றின் பிரதிநிதிகள் பங்கெடுத்துக் கொண்டனர். இக் கருத்தரங்கில்தான்(NPC) என்.பி சின் அமைப்புத் திட்டம், நிகழ்ச்சி முறை, நிதி நிலைகள் என்பவற்றின் விவரங்களும், உள்ளூர் உற்பத்தித்

திறன் குழுக்களுடன் அதற்குரிய உறவு நிலையும் உருவாயின. இந்திய சர்க்கார், அக் கருத்தரங்கு அனுப்பிய சிபாரிசுகளை எண்ணிப் பார்த்து, இறுதியில் தேசிய உற்பத்தித்திறன் குழுவை நிறுவுவதென்ற முடிவை 1958ம் ஆண்டு ஜனவரியில் வெளிப்படுத்தினர். உடனே அகில இந்திய வேலை தருவோர், தொழிலாளர் அமைப்புக்களும், தொடர்புள்ள இந்திய சர்க்காரின் அமைச்சகர்களும் தங்கள் பிரதிநிதிகளை அனுப்பினர். அவர்கள் 1958 பிப்ரவரி மாதத்தில் ('NPC') எனும் தேசிய உற்பத்தித்திறன் குழுவினை நிறுவினர்.

இவ்வாறு நிறுவப்பட்ட தேசிய உற்பத்தித்திறன் குழுவின் தலைமைச் செயலகம் தில்லியில் இருக்கிறது. வட்டார ஆணையாளர் (Regional Directorate) செயலகங்களைப் பம்பாய், சென்னை, கல்கத்தா, பங்களூர், கான்பூர் ஆகிய இடங்களில் நிறுவியுள்ளனர். இவ்வட்டார ஆணையாளர்களின் செயலகங்கள், ஆங்காங்கே நிறுவப்படும் உள்ளூர் உற்பத்தித்திறன் குழுக்களின் (Local Productivity Council) செயல்களை ஒருமைப் படுத்தி, அவ் வட்டாரங்களில் NPCன் திட்டத்தை அமைக்கும். இவ்வாறு அமைக்கும்போது NPCன் கிளைகளுக்கும் இதேவேலையில் ஈடுபடும் பல்வேறு நிலைய அமைப்புக்களுக்கும் உறவு நீடிக்கிறது. உற்பத்தித் திறன் முயற்சியைத் தனிப்பட்ட தொழில் பகுதிகளுக்குக் கொண்டு செல்வது அவர்கள் நோக்கம். மேலாட்சியினருடனும் தொழிலாளருடனும் கலந்து இயந்திரத் தொகுதி அளவில் உற்பத்தித்திறன் குழுக்கள் நிறுவப் பெறுவதைத் தூண்டுவதுமே அவர்களின் குறிக்கோளாகும். இவ் உள்ளூர் உற்பத்தித்திறன் குழுக்கள் தமக்கே உரிய அமைப்புத்

திட்டமும் நிதி நிலைகளும் பொருந்திய தனிநிலை யான அமைப்புக்களாக இருந்தாலும், அவை NPC யுடன் இணைந்து, அவற்றின் திட்டங்களைத் தேசிய அமைப்புடன் சேர்ந்து செயற்படுத்தும் என எதிர்பார்க் கின்றனர்.

தொழில் துறைகளில் உற்பத்தித்திறன் உணர்வை இயக்குவதும், உற்பத்தித்திறன் பெருக்கத் திற்குக் கொண்டுசெல்லும் செய்முறைகளையும், தொழில் நுணுக்கங்களையும், இணைக்கத் தூண்டு வதும் NPCயின் திட்டத்தின் நோக்கங்களாகும். உற்பத்தித்திறன் முயற்சியினை நிறுவ மேலாட்சியினர் தொழிலாளர் முதலியோரிடையில் கூட்டுறவு உணர் வும் நம்பிக்கையும் கொண்ட—தகுந்த—சூழ்நிலையை ஏற் படுத்துவதும் அதன் நோக்கமாகும். அதே சமயத்தில் உற்பத்தித்திறன் உணர்வின் எழுச்சியால் தோன்றும் தேவைக்காக உற்பத்தித்திறன் வேலைகளுக்குரிய ஏற் பாட்டினைச் செய்யத் தூண்டுவதும் அதன் கருத்தாக விளங்குகிறது. பல்வேறு கருவிகளும் இடைச் சாத னங்களும் உற்பத்தித்திறன் பெருக்கத்திற்காகப் பயன்படும் வண்ணம் இயந்திரத்தொகுதி அளவில் உற்பத்தித்திறன் முயற்சியைக்கொண்டு செல்வதும் அத்திட்டத்தின் குறிக்கோளாகக் காணப்படுகிறது. அத்திட்டத்தின் முக்கிய விவரங்கள் விளக்கத்துடன் கீழே தரப்படுகின்றன.

தொழில் துறைகளில் உற்பத்தித்திறன் உணர்வை உண்டாக்க NPCன் செய்தி அறிவிப்பு களைப் பற்றிய ஒரு விரிவான திட்டம் தீட்டப்பட்டிருக் கிறது. உற்பத்தித்திறன் பற்றிய ஒரு பத்திரிகையை

வெளியிடுவதும் அவைகளுள் ஒன்றாகும். அது, உற்பத்தித்திறன் முயற்சி, அத்திறனுக்குரிய பல் வேறு நிலைகளைப்பற்றிய கட்டுரைகள், உற்பத்தித் திறன் அளவைகள், உற்பத்தித்திறன் பயன்படுத்தும் வழி வகைகள், வெளிநாடுகளிலிருந்து கிடைக்கக் கூடிய பயனுள்ள செய்திகள் முதலியவைகளைப் பற்றிய மதிப்பீட்டைத் தொழில் துறைக்குப் பரப்பும். இத்திட்டம், உற்பத்தித்திறன் சம்பந்தமான தனிப் பட்ட பொருள்களைப்பற்றிய துண்டு வெளியீடுகளாக, சிறு நூல்களாக, வெளிநாடுகளுக்கு அனுப்பப்படும். N P Cன் பல்வேறு குழுக்கள், உற்பத்தித்திறன் குழுக் கள் என்பவற்றின் அறிக்கைகளை வெளியிடும். உற்பத்தித்திறன் பற்றிய அயல்நாட்டு இலக்கியங் களின் புதிய படிகளின் தழுவல்கள் முதலியவற்றையும் வெளியிடும். இவை கண்காட்சிகளை அமைத்தல், உற்பத்தித்திறன் பொருள்கள் பற்றிய திரைப்படங் களைத் தருவித்து வழங்க வழிசெய்தல், உற்பத்தித் திறன் உணர்வைப் பரப்பக் கண்டும் கேட்டும் அறிந்து கொள்ளும் சாதனங்களைப் பயன் படுத்துதல் முதலிய வற்றைச் செய்யும். சொற்பொழிவுகள், கருத்தரங்கு கள், மாநாடுகள், வட்டமேசைகள் முதலியவற்றை நடத்தும். உற்பத்தித்திறன் பற்றிய ஒரு முழுமையான நூல் நிலையம் அமைக்க ஏற்பாடாகி இருக்கிறது. அமெரிக்க சர்க்காரின் தொழில் நுணுக் கக் கூட்டுறவுத் தூதுக் குழுவினரிடமிருந்து கணக் கற்ற பல வெளியீடுகளைப் பெற்று, நூல் நிலையத்தின் உட்கரு ஏற்கனவே அமைக்கப்பெற்றுள்ளது.

எல்லா நிலைகளிலும் உள்ள மேலாட்சியினர், மேற் பார்வையாளர் என்போருக்கு, விரிந்த அடிப்படையில்

உற்பத்தித்திறன் சம்பந்தமான பல்வேறு பொருள் களில் பயிற்சி வசதிகளை அளிக்க வேண்டும் என்பது குறிக்கோள். அந்தந்த நிலைகளில் உள்ள மேலாட்சி யினருக்கு ஏற்ப, தனித்தனிப் பொருள்களில் வெவ் வேறு பாட நேரங்களும் பாடத் திட்டங்களும் கொண்ட பிரிவுகள் அமைக்கப்படும். இத் திட்டத்தை உருவாக்க உற்பத்தித்திறனுடைய பல்வேறு நிலைகளு டன் தொடர்புள்ள உள்ளூர் உற்பத்தித்திறன் குழுக் கள், இயங்கும் நிலையங்கள், அமைப்புக்கள் என்பவை முடிந்த அளவிற்குப் பயன் படுத்தப்பட வேண்டும் என்ற நோக்கம் காணப்படுகிறது. உற்பத்தித்திறன் பிரச்சனைகளைப் பற்றிய ஆராய்ச்சிக்குழுவினை அமைப்ப தென்பதும் NPCன் திட்டத்தில் மற்றொரு பிரிவாக விளங்குகிறது. இந் நோக்கத்திற்காக உற்பத்தித் திறன் குழுக்களுக்குள் ஆராய்ச்சி அமைப்புகளை ஏற் படுத்தும் நோக்கம் இல்லை. மாறாக நடைபெறும் கல்வி நிலையங்கள், அமைப்புக்கள், பல்கலைக் கழகங் கள் முதலியவற்றில் தனிப்பட்ட பிரச்சனைகளைப் பற்றிய ஆராய்ச்சிகளைத் தொடங்கும் பொறுப்பேற்க வும், தேவைப்பட்ட இடங்களில் அவற்றிற்கு வேண் டிய பொருளுதவிகளைச் செய்யவும் எண்ணங் கொண்டு விளங்குகிறது. மற்றும் தொழில் மையங் களிலும், பல்வேறுபட்ட தொழில் மையங்களுக்கு இடையிலும், தொழில் துறைகளுக்குள் இயந்திரத் தொகுதிகள் ஒன்றுக்கொன்று தமக்குள் சென்று பார்வையிடும் முறையினை இந்தக் குழுக்கள் ஊக்கப் படுத்தி வளர்க்கும். இந்தச் சுற்றுப்பயணத் திட்டத் தில் உற்பத்தித்திறன் தொடர்பான பொருள்களைப் பற்றிய விவாதங்களும் கருத்துப் பரிமாற்றமும் இடம் பெறுகின்றன. இதன் நோக்கம் விஞ்ஞான முறையில்,

நடக்கும் மேலாட்சி, மனித உறவு, தொழிற் படிப்பு, எந்திரத்தொகுதியின் பரப்பு, பொருள்களைக் கையாளும் முறை முதலியவை போன்ற பொதுவான உற்பத்தித்திறன் கருத்துக்களில் தொழில் நுணுக்கப் பரிமாற்றத்தை வளர்ப்பதே. இது உறுதியாகிப் பரவினால், தொழில் துறையினர் அத்தகைய கருத்துக்களை பரிமாற்றம் செய்துகொள்வதில் பங்கேற்கவும், அவர்களை வளர்க்கவும் தயங்கவும் மாட்டார்கள். ஒரே தொழில் துறைக்குள் மட்டும் இயந்திரத் தொகுதிகள் ஒன்றையொன்று பார்வையிடும் என்று யாரும் நினைப்பதில்லை. உண்மையில், வேறுபட்ட தொழில் மையங்களுக்கு இடையிலும் தனியார் துறையும் பொதுத் துறையும் சார்ந்த தொழில்களுக்கிடையிலும், இந்த முயற்சி உள்ளது.

உற்பத்தித்திறன் சம்பந்தமான பல்வேறு பொருள்களில் ஓர் ஆண்டு பயிற்சிபெறும் பொருட்டு வெளிநாடுகளுக்குப் பயிற்சி பெறுவோரை அனுப்பவும் வழி அமைத்துள்ளனர். ஆரம்ப நிலையில், NPC பயிற்சி பெறுவோரைத் தயாரிக்கும். இந்த வகையில் ஆண்டுக்கு 50 பேருக்கு மேல் வெளிநாடு அனுப்பப் பட்டார்கள். அதே சமயம் நாட்டில் உள்ள கல்வி நிலையங்கள், அமைப்புக்களில் உதவத் தனித்திறனார்களையும் (Specialists) ஆலோசனையாளர்களையும் (Consultants) அயல் நாடுகளில் இருந்து வரவழைக்க NPC ஏற்பாடு செய்கிறது.

உற்பத்தித்திறன் முயற்சி கடைசியில் நாட்டின் எல்லாப் பொருளாதாரச் செயல்களையும் தன் வரம்பிற்குள் சேர்த்துக்கொள்ளும் என எதிர்பார்க்கப்படுகிறது.

உற்பத்தித்திறன் பெருக்கத்திற்காக, உழவு, காட்டுத் துறை, வாணிபம் போன்ற பல்வேறு துறைகளில் அரசாங்கத்தைச் சார்ந்த செயல் நிலையங்களும் சாராத செயல் நிலையங்களும் முன்பே பல முறைகளை மேற்கொண்டுள்ளன. இம்முறைகளை ஒரு விரிவான உற்பத்தித்திறன் முயற்சியாக ஒருமைப்படுத்தும் தேவை ஏற்படும். என்றாலும், இப்போதைக்குத் தொழில் துறைகள் வரைமட்டும் NPC இயங்கும் வரையறையைக் கட்டுப்படுத்த எண்ணி உள்ளனர். இருந்தபோதிலும் இப்பகுதியில் பொதுத் துறையிலும் தனியார் துறையிலும் உள்ள சிறிய தொழில்களையும், நடுத்தரமான தொழில்களையும் பெரிய அளவில் இம் முயற்சியில் சேர்த்துக்கொள்ளும்.

இதுவரை நாம் அறிந்தது நாட்டின் வளர்ச்சியில் அக்கறை கொண்டோர் இருக்கும் சூழ்நிலையில் அயல் நாட்டு அனுபவங்களை மேற்கண்ட குழுக்களின் மூலம் நம் நாட்டிற்குக் கொண்டுவர முயல்கிறார்கள் என்பதை அறிவிக்கிறது. இத்துறையில் தமிழ்நாடும் பெரும் அளவிற்குப் பங்குகொண்டுள்ளது. அதே சமயம் தமிழ்நாட்டுத் தொழிலதிபர்கள், வேலை தருவோர், தொழிலாளர்கள் மற்றும் உள்ள அலுவலர்கள் எல்லோரும் ஒருமனதாக உற்பத்தித்திறனுடைய நீண்டநாள் பலன்களைக்கருதி ஒத்துழைத்தால் அன்றித் தமிழ் நாட்டின் தொழில் வளம் மற்ற நாட்டவர் தம் தொழில் வளத்துடன் ஒப்பிட்டுப் பார்க்க முடியாது என்பதை உணர்ந்து நாம் தொழிலாற்ற வேண்டும் என்பதை உணர்ந்து செயல்பட வேண்டும்.

## மேலாட்சி (Management)

ஒரு நாட்டின் பொருளாதார நிலை, வாழ்க்கைத் தரம் முதலியன அந்நாட்டில் உள்ள சிறியதும் பெரியதுமாகிய ஒவ்வொரு தொழிற் சாலையின்—உற்பத்தித் திறனைப் பொறுத்துள்ளன எனக் கண்டோம். சிறிய தொழிற்சாலை ஆயின் அதில் ஓர் இருவரே எல்லா வேலைகளையும் செய்தாக வேண்டி இருக்கும். தொழிற் சாலை பெரியதோ சிறியதோ எதுவாயினும் தொழிற் சாலையில் மேலாட்சியின் செயல்கள் (functions) ஒரு வகைப்பட்டதே ஆகும். உதாரணமாக, ஒரு தொழிற் சாலையை நடத்த என்னென்ன தேவை எனக் காண் போம்; எந்தப்பொருளை உற்பத்தி செய்தால் நிலையான நெடுநாள் விற்பனை இருக்கும் எனவும் ஆராய வேண் டும். ஆராய்ந்தபின் அதற்கு வேண்டிய மூலப்பொருள் கள், அம்மூலப்பொருள்களைச் செய் முறையினால் (pro-

cess) முடிவுப் பொருள்களாக மாற்றி அமைக்க வேண்டிய இயந்திரங்கள், அவ்வியந்திரங்களை எவ்விடத்தில் எம் முறையில் பொருத்திஞல் பொருள், இடம், காலம், முதலியன வீணுகாமல் இருக்கும் என்பது, செய்முறையின்போது பொருள்களைக் கையாள உதவும் கருவிகளைத் , தேர்ந்தெடுத்தல், முடிவுப்பொருள்களின் முடிவான உருவப்படங்கள் தயாரிப்பது, ஒவ்வொரு இயந்திரத்திலும் எந்த வகையான கருவிகளைக் கொண்டு எம்முறையில் செய்ய வேண்டும், எந்த விதத்தில் பொருள்களை உற்பத்தி செய்வது, செய்தபின் அவைகளின் விலைகளை நிர்ணயிப்பது, செய்பவர்களின் கூலி, அவர்களுக்கான நலந்தரு வசதிகள் (welfare), விற்பனைக்கான வசதிகள் ஏற்படுத்துவது, விற்றபின் வாங்கியவர்களுக்கு உதவியளித்தல் முதலானவைகள் மேலாட்சியின் செயல்கள், அல்லது பொறுப்புகள் வகையில் சேர்க்கப்பட வேண்டியவைகளாகும்.

ஓர் இருவர் உள்ள சிறு தொழிற்சாலையில் இவையெல்லாவற்றையும் அவர்களே செய்தாக வேண்டி இருக்கின்றது. அவர்களே மூலப்பொருள்களை வாங்க வேண்டும். வாங்கிய பின்பு அவைகளைப் பரிசீலனை செய்தாக வேண்டும். செய்த பின்பு ஓர் இடத்தில் வைத்து அன்றன்று செய்யவேண்டிய அளவைப் பிரித்து எடுக்க வேண்டும். அவைகளைச் செய்ய வேண்டிய கருவிகளையும் இயந்திரங்களையும் அவை இருக்கும் இடங்களையும் சுத்தம் செய்யவேண்டும். பின்பு மூலப் பொருள்களை, அவைகளின் உதவி கொண்டு வேலை செய்து முடிவுப் பொருள்களாகச் செய்ய வேண்டும். செய்தபின் அவைகளை முறைப்படி உறையிலோ அல்லது பெட்டியிலோ இட்டு விற்பனை செய்தாக

வேண்டும். இப்படி எல்லாச் செயல்களையும் ஒன்றன் பின் ஒன்ருய் அவ்வோர் இருவரே செய்தாக வேண்டி வருகின்றது. ஆனால் பெரிய தொழிற்சாலைகளில் மேலே கூறப்பட்ட செயல்கள் எல்லாவற்றையும் ஒருவரோ அல்லது இருவரோ செய்துமுடிக்க இயலாது. காரணம், வாங்கும் மூலப்பொருள்கள் அவைகளின் செய்முறைக்கு வேண்டிய வசதிகள், ஆட்கள், முடிவுப் பொருள் இவைகளின் எண்ணிக்கையும், அளவும் மிகப் பெரியதாக இருப்பதே ; ஆகையால் ஒவ்வொரு செயலுக்கும் பொறுப்பாக தனித்தனி ஆட்களையோ அல்லது பிரிவையோ அந்தந்தத் தொழிற்சாலையின் அளவைப் பொறுத்து அமைக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

ஆகையால் மேலாட்சியின் செயல்களும், பொறுப்புக்களும் யாண்டும் ஒரேமாதிரியாக இருந்தபோதிலும் இந்த இரண்டு வகைத் தொழிற் சாலைகளிலும் அவைகள் தொழிற்படும் வகைகள் அனைத்தும் நிறைய மாறுபட்டு இருக்கும் என நாம் அறிகிறோம். சிறு தொழிலிலே ஒருவரே முதலாளியும் தொழிலாளியுமாய் இருக்கும் போது அவருக்குள்ள கருத்து, நிறையச் செய்து நிறையப்பணம் ஈட்ட வேண்டும், செலவுகளையும் விரயங்களையும் குறைக்க வேண்டும் என்ற எண்ணம் மேலோங்கி நின்று, தன்னால் இயன்ற அளவு வருந்தி வேலை செய்வதே. ஆனால் பெரும் தொழிற் சாலைகளிலோ முதலீடு செய்தவர் ஒருவர், வேலை செய்பவர் ஒருவர். அதற்குண்டான வசதிகளைச் செய்து தருபவர் ஒருவர். செய்து முடித்த பொருள்களை விற்பவர் ஒருவர் இப்படியாகப் பலப்பல வேலைகளுக்கு என்று தனித்தனியானவர்கள் இருக்கும்போது, ஒருவரே

பார்க்கும் தொழிற்சாலையில் நடக்கும் செயல்களைப் போல் அவ்வளவு துரிதமாகவும் வீண் இல்லாமலும் பெரிய தொழிற்சாலைகளில் நடத்த இயலுவதில்லை. நிறுவனத்தின் முதலாளி அல்லது பணம் முதலீடு செய்தவர் நினைக்கும் அளவிற்கு அவருக்குக் கீழே உள்ள மற்ற எல்லோரும் செயலாற்ற முடிவதில்லை. இதற்குக் காரணம் என்ன? ஒரு நாட்டின் வளம் அந் நாட்டில் உள்ள பலதரப்பட்ட தொழிற்கூடங்கள் மற்ற எல்லாவித செயற்கூடங்களின் செயல்பாட்டைப் பொறுத்துத்தான் இருக்கும். அப்படி அந்த நாட்டு மூல தனங்கள் எல்லாம் பெரிய பெரிய தொழிற்சாலைகளில் முதலீடு (Invest) செய்து நடத்தும்போது முன்னமே கூறியவாறு முதலீடு செய்தவர்கள் எதிர்பார்க்கும் அளவிற்கு அவருக்குக் கீழ் அந்த நிர்வாகத்தில் இடம் பெற்று உள்ளவர்கள் முழு அளவில் செயல்படுத்த முடியாதபடி நடக்குமாயின் நாட்டின் மொத்த உற்பத்தித் திறன் தானே குறைகிறது. பெரிய தொழிற்சாலையில் உழைப்பவர்கள் சிறு தொழிற்சாலைகளில் உழைப்பவர்களைப் போன்று முழு அளவில் எல்லா வசதிகளையும் பயன் படுத்த முடியாத நிலை உண்டாகக் காரணம் என்ன? ஏன் இந்தக் குறைபாடு உண்டாகின்றது? இக் கேள்விகளுக்குப் பலர் பலவிதமான காரணங்கள் காட்டுவார்கள். குறிப்பாகப் பார்க்கின் முக்கிய காரணம் ஒவ்வொரு தொழிற் சாலையையும் நடத்தும் மேலாட்சியே என்பது நன்கு விளங்கும். மேலாட்சியில் உள்ளோர் நல்ல உயர்ந்த மேலாளும் கல்வி அறிவும், நெடுநாள் அனுபவமும் பெற்றவர்களாக இருப்பார்களாயின் அந்த நிறுவனம் நல்ல முறையில் நடக்கும் என்பதில் ஐயமில்லை.

ஆகவே, நாம் மற்ற அம்சங்களைப் பார்க்குமுன் மேலாட்சி என்பது என்ன? அதற்குத் தேவையானவை யாவை? அதற்கு எத்தகைய தரம் வேண்டும்? அதன் பொறுப்பு என்ன? என்பன போன்றவைகளைப் பற்றிச் சிறிது சிந்திப்பது மிகமிக அவசியமாகும். தொழில் வளர்ச்சியில் மேம்பாடடைந்துள்ள மேலை நாட்டினர் பலர் இம் மேலாட்சியைப் பற்றி நிறைய ஆராய்ச்சி செய்துள்ளனர். பலரும் பலவித கருத்தைத் தெரிவித்து உள்ளனர். அவற்றுள் சிலவற்றைப் பற்றி எண்ணிப் பார்ப்பது மிகவும் பயன் தருவதாக அமையும்.

மேலாட்சி என்பது தங்களுக்குக் கீழுள்ளவர்கள் தாங்கள் விரும்புவதைத் தாங்கள் விரும்பும் வழியிலே குறித்த நேரத்தில் குறித்தபடி தவறாது முடிக்க வகை செய்து, தாங்களும் மற்றவர்களும் அச்செயலுக்குஉரிய பலனடைவதாகும் என்பர் சிலர். வேறு சிலர், மேலாட்சி என்பது தாங்கள் நடத்தும் நிறுவனம் என்றும் நிலையாக இருந்து வியாபாரத்தில் மற்றவருடன் போட்டியிட்டு எப்பொழுதும் இலாபகரமாக நடத்திவைப்பதே என்றும் கருதுகின்றனர். எப்படியாயினும் இரு கருத்துக்களையும் ஒன்று சேர்த்துப் பார்ப்பதும் நன்றாகவே அமையும். மற்று, வேறொருவகை இதைவிட ஒருபடி மேலே செல்கிறது. மேலாட்சியின் கடமை அந்த நிறுவனத்தை முன்னவர் விவரித்தபடி நன்கு நடத்தி, அதற்கு முதலீடு செய்தவர்களுக்குத் தக்க வருமானம் வரும்படி செய்யவும், அவ் வருமானம் வருவதற்கு வேண்டிய உழைப்பைக் கொடுப்பவருக் கெல்லாம் நல்ல ஊதியம் கொடுத்து அவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும், நிறுவனத்தில் உற்பத்தித் திறனை உயர்த்தி விரயங்களைக் குறைத்து அதன் விளைவால் உற்பத்திச்

செலவைக் குறைக்கவும், குறித்த நேரத்தில் குறித்த படி நுகருபவர்களுக்குக் (Consumers) குறைந்த விலையில் கொடுத்து அவர்களுக்கு வாங்கும் திறனை அதிகப்படுத்தவும், வெளிநாட்டவருடன் போட்டியிட்டு நாட்டின் பொருளாதாரம், வாழ்க்கை நிலை இவற்றை மென்மேலும் உயர்த்தவும் தகுந்த முறைகளைக் கையாண்டு இதே நிலைமைகளை வருங்காலத்திலும் நிலை நிறுத்தி நிறுவனத்தை நன் முறையில் நடத்தத் தகுதி வாய்ந்த, வருங்கால தகுந்த மேலதிகாரிகளைப் பயிற்றுவிப்பதும் போன்றன என்றும் குறித்துள்ளார்கள். இதிலிருந்து மேலாட்சி ஒவ்வொரு நிறுவனத்திலும் நாட்டின் வருங்காலத்தைச் செழிப்புறச் செய்ய எவவளவு கடமைப்பட்டுள்ளது என்றும் நன்கு விளங்குகின்றது. வேறு ஒரு சிலர் மேற்கூறியன யாவும் மேலாட்சியின் கடமைகளாகவும் பொறுப்புகளாகவும் ஆகும் என்றும், அவைகளை அடைய முக்கியமாக உயர் மேலாட்சியில் (Top Management) உள்ள ஒவ்வொருவரும் அந்தந்த நிறுவனத்தில் உள்ள உறுப்பினர், அலுவலர்கள், உழைப்பைக் கொடுக்கும் தொழிலாளர்கள் எல்லோரிடத்தும் நன்கு பழகி, ஒருவருக்கொருவர் நல்லெண்ணத்துடனும் நம்பிக்கையுடனும் மனம்விட்டுப் பழகும் நிலையைக் உண்டாக்க முயல வேண்டும் என்றும் கருதுகின்றனர். இவ்வாறு மேலை நாடுகளில் ஒவ்வொரு வகையிலும் ஒவ்வொருவர் கூறுவது நல்லதாகவும் அவசியமாகவும் இருப்பினும் நம் நாட்டின் தேவையையும் பிற்போக்கான நிலையையும் பார்க்கும் போது எல்லா வகைகளும் நமக்கு அவசியம் என்பது நன்கு புலனுகிறது.

ஒரு நாட்டின் முற்போக்கையும் மற்றப் பலவித முன்னேற்றங்களையும் கட்டுப்படுத்தும் இந்த மேலாட்சியைப் பற்றி நாம் சிறிது விளக்கமாக ஆழ்ந்து பார்ப்பது நல்லது. இவற்றிற்குத் தேவையானது யாது? அவைகள் தங்கள் நோக்கத்தையும் வசதிகளையும் (resources) என்னென்ன வழிகளில் எவ்வெவ்வாறு செலுத்த வேண்டும்? அவற்றால் உண்டாகும் பலன்கள் என்னென்ன என்பவற்றைக் கீழே காண்போம்.

மேலாட்சி என்பது முக்கியமாக மக்களை வைத்து நிர்வகிப்பது என்ற வகையில் அது மனிதர்களுடன் பழகும் கலை (Art) என்று கொள்ளத்தக்கது. ஆனால் மேலாட்சியை வெறும் தனிவேலை (job) என்ற கருத்தை நோக்கும் போது மிகமிகச் சிக்கலான தொழில் நுணுக்க இயலாக (Technical science) அமைகிறது. ஆயினும் முன்னதே மிக மேலோங்கி நிற்கிறது. இவைகளை அலசிப்பார்க்கும்போது தலைமை வகிக்கும் தன்மைதான் (leadership) மிக மிக அவசியநிலையாகப் புலப்படுகிறது. அது மட்டும் இன்றி மேலாட்சிக்குத் தேவையான பண்பு நலன்களைப் (Qualities) பற்றி உலகில் பழக்கத்தில் எந்த விதமான வரையறுத்த விதிகளும் கிடையா. இவ்வகைய விதிகள் ஏதாவது இருக்கின்றனவா என்று எதிர்பார்ப்பவர்கள் வம்பைத் தான் விலைக்கு வாங்குகிறார்கள் என்பதை நன்கு அறிய வேண்டும். மேலாட்சியினருக்கு ஏற்படும் சூழ்நிலைகளும் சந்தர்ப்பங்களும் ஒரே மாதிரியாக இருப்பதே இல்லை. ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதத்தில்—வகையில் புதியதாகவே இருக்கும். அந்தச் சந்தர்ப்பத்தையும் சூழ்நிலையையும் கருதி அதற்குத் தகுந்தாற் போல் வளைந்து கொடுத்துச் சமாளிப்பதே மேலாட்சி

யின் உயர்ந்த தன்மையையும், மனிதத் தன்மைக்குக் கொடுக்கும் மதிப்பையும் எடுத்துக் காட்டுவதாகும். வளைந்து கொடுக்கும் தன்மையற்ற மேலாட்சி என்றும் வெற்றிகரமாகச் செயல் படாது என்பது திண்ணம். எப்படியாயினும் மேலாட்சியில் பொறுப் பேற்று இருப்பவர்களும் அதன் ஆட்சிக்குட்பட்டு இருந்து செயலாற்றும் செயலாலரும் கலந்து சந்தர்ப்பச் சூழ்நிலைகளுக்குத் தகுந்தவாறு எந்தவித ஆய்வுகள் நலன் அளிக்கும் என முடிவுக்கு வருவதுதான் நல்லது.

உயர்ந்த வகையில் மேலாட்சி நடக்க வேண்டு மாயின் நிர்வாகத்தில் உள்ளவர் சந்தர்ப்பச் சூழ்நிலை களைப் பற்றி ஐயம் ஏதும் இன்றித் தெள்ளத் தெளி வாக நினைத்து அறியும் தன்மை பெற்றவராகவும், தம் முடைய தொழிற்கூடத்தில் நடக்கும் வேலைகளைப் பற்றிய தொழில் நுணுக்கங்களை நன்கு மற் றவருக்கு எளிதில் அவை பற்றி எடுத்துக் கூறக் கூடியவராகவும், இவை மட்டும் இன்றி மிகவும் மேன்மையான குணம் படைத்தவராகவும், நேர்மை யான ஒழுங்குள்ளவராகவும், தன்னடக்கம் உள்ளவரா கவும், எளிதில் மற்றவரைப் புரிந்து கொள்பவராகவும், மற்றவரை மனிதர் எனக்கருதி நன்கு நடந்து கொள்ப வராகவும், மற்றும் முக்கியமாகத் தலைமை தாங்கும் தன்மை நிறைந்தவராகவும் இருக்க வேண்டுவது அவ சியம். இவையாவும் ஒருங்கே பெற்ற ஓர் அலுவலர் இருப்பாரா என்று பார்க்கும் போது மிகவும் கடின மாகத்தான் இருக்கிறது. அம்படியாயின் நாட்டில் உள்ள அவ்வளவு தொழிற் கூடங்களிலும் மேலாட்சி நடப்பது எப்படி என்ற ஐயம் உடன் உண்டாகத்தான் செய்கிறது. மேலாட்சியினரும் மனிதர்கள் தாம் என்று

எண்ணும் பொழுது அவர்கள் குற்ற மற்றவர்களா கவோ அல்லது குறையற்ற வர்களாகவோ இருக்க முடி யாது என்பதும் உடன் தோன்றுகிறது. மேலாட்சியில் இருப்பவர்கள் எவ்வளவுதான் திறமை பெற்றவர்க ளாக இருப்பினும் அவர்கள் ஓர் அளவேனும் தங்களை நாடிவருபவரின் துன்பங்களை மனிதத் தன்மையுடன் கூர்ந்து நோக்கி நிலைமையைச் சீர்தூக்கிப் பார்க்கத் தவறினால் அவர்கள் நீண்ட நாட்கள், அந்தத் தொழி லகத்தை நம்பி, இருந்து, வேலையாற்றும் செயலாளர் களுடன் மனநிறைவுடன் செயல்பட இயலாது என் பதை நன்கு அறிய வேண்டும். இத்தகைய நிலைகளில் மேலாட்சியில் இருப்பவர்கள் பலவிதத் துன்பங்களுக் கும், சிக்கல்களுக்கும், அதிர்ச்சிக்கும், நிலையற்ற தன் மைகளுக்கும் உட்பட வேண்டித்தான் வரும். இச்சம யங்களில் மனம் சிறிதும் தளராது நின்று தங்க ளுடைய தலைமை தாங்கும் திறமையினாலும், உள்ளத் தில் உள்ள அன்பினாலும், எல்லாம் இனிதே முடியும் என்ற நம்பிக்கையினாலும் சூழ்நிலையைக் கட்டுப்படுத் திக்கொண்டு வருபவரே இந்தநிலைக்குத் தகுதியானவர்.

இவ்வளவு தகுதிகளையும் ஒரு நிர்வாகி அடைய வேண்டுமாயின் முதன்முதலில் அவருக்கு வேண்டி யது அமைதியான நற்பண்பும், நிலையைப் பற்றி ஆழ்ந்து தெளிவாகச் சிந்திக்கக் கூடிய தன்மையுமே ஆகும். இவை இருப்பின் மற்றவை அடுத்தடுத்து உண்டாவது திண்ணம். குழம்பிய மனதுடையவரால் அவ்விடத்தில் வெறுங்குழப்பமே உண்டாகும் என்பதில் ஐயமில்லை. மேலாட்சியினரின் செயலாற்றும் திறன் அன்றன்று ஏற்படும் சிக்கல்களுக்கு அவ்வப்போது முடிவான தீர்மானம் செய்வதைப் பொறுத்து இருக்கும்

பிரதி பலன்கள் இந்தத் தீர்மானங்களைப் பொறுத்தே அமையும். ஆழ்ந்த, தெளிந்த சிந்தனை செய்ய இயலாத வரால் என்றும் எந்தச் சூழ்நிலையைப் பற்றியும் எவ்வித மான முடிவும் செய்ய முடியாமல் நிலைமையை மேலும் மோசமாக்க இடமுண்டு. இவ்வரும்பண்பு அடைய வேண்டுமாயின் அவரவர் முதன்முதலில் தம் மனத்தை ஒரு நிலைக்குக் கொண்டுவந்து கட்டுப்படுத்த முயல வேண்டும். இக்கட்டுப்படுத்தும் தன்மையை நெடுநாள் கடினப் பயிற்சிக்குப் பின்பே அடைய முடியும். இச் சீரிய பொறுப்பேற்கும் ஒவ்வொருவரும் தங்களை இவ் வழிக்குட் படுத்திக்கொண்டே ஆக வேண்டும்.

எந்த ஒரு நிறுவனத்தில் தெளிவற்ற நிலைமை, உத்தரவுகள், தாமதமான நடவடிக்கை முதலியன இருந்து வருகின்றதோ, அவை அந்த நிறுவனத்தின் மேலாட்சியில் உள்ளவர்கள் தெளிவான சிந்தனை உள்ளம் அற்றவர் என்பதை உடனே காட்டுகின்றன. இந்நிலைக்குக் காரணம் என்ன என்பதை முக்கியமாக மேலாட்சியினர் நன்கு ஆராய்ந்தறியாததே ஆகும். ஒரு மேலாட்சியில் உள்ள நிர்வாகிக்கு ஆழ்ந்த அறிவு நிறையவேண்டும் என்பது கிடையாது. ஆனால் அவருக்கு உடனடியாக மிகமிக அத்தியாவசிய மானது, தான் அந்த இடத்தில் இருந்துகொண்டு அந்தத் தொழிலகத்துக்குச் செய்ய வேண்டியது என்ன என்பதை தெள்ளத் தெளிய அவர் புரிந்து கொள்ள வேண்டுவதே. அதை அவர் மனத்தில் இருத்தி நினைத்துப் பார்ப்பாரேயானால் நிலைமை அவருக்கு உள்ளங்கை நெல்லிக்கனி போல விளங்கும். அதன் பலனாக ஒவ்வொருவருக்கும் அவர் இன்ன இன்னதை இப்படி இப்படிச் செய்யவேண்டும் என்று தெளிவாக

ஐயமறக் கூற வகையுண்டு. இவ்வாறு மேலாட்சியின் குறிக்கோளை அறிந்து கொள்ளாமல் இருக்கும் வரை அந்த நிர்வாகியிடம் இருந்து தெளிவான உத்தரவுகளும், அவரின் கீழ் வேலை பார்க்கும் மற்றவர்கள் தாம் தாம் என்ன செய்ய வேண்டும் என்று அறிவதும் இல்லாதனவாக அமையும். தங்களுக்கு மேல் உள்ளவர்கள் தங்களிடம் கூறியது ஒன்றும் புரியவில்லை என்றும், தாங்கள் என்ன செய்ய வேண்டும் என்பதை அவர்கள் விளக்கமாகக் கூறவில்லையே என்றும், மேலாட்சியினரின் நோக்கம் என்ன என்றே அறியக் கூட முடியவில்லையே என்றும் கூறுவது சர்வ சாதாரணமானதாகிவிட்டது. இந்நிலைக்குக் காரணம் ஆழ்ந்து சிந்திக்கும் சக்தி மேலிடத்தில் குறைந்துள்ளதே ஆகும். பொது வாழ்க்கைக்கும் இவ்வாறு சிந்திக்கும் தன்மையே மிகமிக அவசியமானது. நாம் கற்கும் கல்வியின் உயர்ந்த குறிக்கோளாக அமைய வேண்டியது, "எப்படி ஒரு சூழ்நிலையைப் பற்றி ஆழ்ந்து தெளிவாகச் சிந்திப்பது என்பதை அறிய மனதைப் பக்குவப் படுத்துதலே" ஆகும். சிந்திப்பது மட்டும் இன்றி மேலாட்சியில் உள்ளவர், மனதில் உள்ளதை மற்றவர்களுக்கு நன்கு புரியவைக்கவும், தம் கீழ் உள்ளவரின் நிலையையும் துன்பங்களையும் ஆராய்ந்து தெளிவாக அறியவும் வல்லவராய் இருத்தல் வேண்டும். அறிவிப்புத்தன்மைக் (communication) குறைவினால் நாட்டிற்கே பெருத்த நட்டமும் உண்டாக வழியுண்டு. இதற்குச் சான்றாக தொழிற் துறையிலும் மற்றத் துறைகளிலும் மேம்பாடடைந்துள்ள ஆங்கில நாட்டில் ஒரு தொழிலகத்தில் நடத்தப்பட்ட ஒரு கணக்கின் (survey) செய்தியை அந்நாட்டு மான்செஸ்டர் பல்கலைக்

கழகப்பேராசிரியர் திரு R. W. ரெவின்ஸ் (R. W. Revans) கூறியிருப்பதைக் காணலாம்.

ஒரு தொழிலகத்தில் உள்ளவர் அனைவரும் நான்கு தரங்களில் பொருத்தப் பட்டுள்ளனர். அதாவது உயர் மேலாட்சியாளர் — மேலாட்சியினர் — மேஸ்திரிகள்— தொழிலாளர்கள். இவர்களைப் பேட்டி கண்டு இவர்களின் எண்ணங்களை ஆராய்ந்து பார்த்தபோது தனித்தனிப் பிரிவுகளில் வேலை செய்யும் தொழிலாளர்களில் நூற்றுக்கு இருபத்தெட்டுப் பேர் மட்டுமே தங்கள் குறைகளைத் தங்களுக்கு மேல் உள்ள மேஸ்திரிகள் அறிவாளர்கள் என நம்பினார்கள்.

மேஸ்திரிகளை நேரில் கண்டு முடிவை ஆய்ந்த போது இவர்களில் நூற்றுக்கு எண்பத்தெட்டு பேர் தாங்கள் தங்களுக்குக் கீழே வேலை செய்யும் தொழிலாளர்கள் அனைவரின் துன்பங்களையும் குறைகளையும் தாங்கள் நன்கு அறிந்திருப்பதாகத் தெரிந்தது.

ஆனால் இதே மேஸ்திரிகளில் நூற்றுக்கு நாற்பத்து மூன்று பேர்கள்தாம் அவர்களின் துன்பங்களையும் குறைபாடுகளையும் தங்களுக்கு மேல் உள்ள மேலாட்சியினர் அறிவார்கள் என நம்பினார்கள்.

அம் மேலாட்சியினர் வகையை நேரில் கண்டு முடிவை ஆராய்ந்த போது இவர்களில் தொண்ணூற்று நான்கு பேர்கள் தங்கள் கீழ் உள்ள மேஸ்திரிகளுக்குத் தேவையானவற்றைத் தாம் முழுதும் அறிவதாகத் தெரிவித்தார்கள்

ஆனால், இம் மேலாட்சியினரிலேயே நூற்றுக்கு ஐம்பத்தொன்பது பேர்கள்தாம் தங்கள் குறைகளைத் தங்களுக்குமேல் உள்ள உயர்மேலாட்சியினர் அறிய வகையுண்டு என்று கருதினர்.

ஆக, படிப்படியாக பார்க்கும் போதுதான் எவ்வளவு தூரம் ஒவ்வொரு பகுதியில் வேலை செய்யும் தொழிலாளர்களின் குறைகள் உயர் மேலாட்சிக்கும், உயர் மேலாட்சியின் கருத்துக்களும் குறிக்கோள்களும் எந்த அளவுக்குத் தொழிலாளர்களுக்கும் தெரிகிறதென்பதும் நன்கு புலனாகின்றன. மேம்பாடு அடைந்த நாடுகளிலேயே இந்த இருபதாம் நூற்றாண்டில் இப்படி இருந்தால், நம் நாட்டில், உயர் மேலாட்சிக்கும் தொழிலாளருக்கும் இடையே உணர்த்தும் நிலை உணரும் நிலை இவை பற்றி நாம் எண்ணிப் பார்க்கக்கூட முடியாதுதான்.

இவைபோன்ற நிலைமை இருந்து வருவதற்குக் காரணங்கள் இரண்டு. ஒன்று, தொழிலகத்தில் உள்ள ஒவ்வொரு தொழிலாளியும் அனைவருடன் இருந்து சமத்துவமாக உழைப்பைக் கொடுத்துத் தொழிற்சாலையின் வெற்றிக்குப் பாடுபட்டு வரும் பங்காளிகள் என்பதை ஏற்றுக் கொள்ளாதது. இரண்டாவது, உயர் மேலாட்சியில் இருப்பவர் தம்கீழ் உள்ள மேலாட்சியினர் தொழிலாளர்களின் குறைகளையும் அவர்களின் நலன் மற்றும் இதர பிரச்சனைகளையும் கவனித்து, அவர்கள் தாம் நினைக்கின்றபடி செயலாற்றுவர் என்று எண்ணி அதிகக் கவனம் செலுத்தாமல் விட்டுவிடுவது.

கடந்த சில ஆண்டுகளாகத்தான் எல்லோரும் உற்பத்தித் திறன், வாழ்க்கைத் தரம் இவைகளைப் பற்றி அக்கறை கொண்டுள்ளதுபோல் விஞ்ஞான ரீதியான மேலாட்சியைப் பற்றியும் சிந்தித்து ஆராய்ந்தறியத் தலைப்பட்டுள்ளனர். இதன் அவசியத்தை உணர நான்கு முக்கிய காரணங்கள் உள்ளன எனக் காட்டலாம். முதற் காரணம் எல்லா விஞ்ஞானங்களைப் போல் உளவியல் (Psychology) மனித வாழ்க்கையில் முக்கியத்துவம் பெற ஆரம்பித்துள்ளதும், அதனால் மனித உறவு வளர்ந்து வருவதும் ஆகும். இரண்டாவதாக இந்த உளவியல் என்னும் விஞ்ஞானத்தை, பெரும் அளவில் தொழிலாளர்கள் வேலை செய்யும் தொழிற்சாலைகளில் புகுத்துவதாகும். மூன்றாவதாக, இந்த இரண்டு உலகப் போர்களுக்குப் பிறகு இயந்திரங்களை விட மனிதர்களுக்குப் பெருத்த அளவில் முக்கியத்துவம் கொடுக்க ஆரம்பிக்கப்பட்டு இருப்பது. இவையெல்லாவற்றையும்விட, மிக முக்கியமானது "மேலாட்சியினர் தொழிலாளர் உறவை" என்றென்றும் பயன் அளிக்கவல்ல நல்லுறவாகப் பிணைக்கவும், தொழிலாளர்களுக்கு எல்லாவகையிலும் சமத்துவமும் வசதிகளும் பெறவும் அமைந்த ஒழுங்கான தொழிற் சங்கங்களின் (Trade union) முன்னேற்றமும், குறிக்கோள்களுமாகும். இதை யாரும் மறுக்க முடியாது. மேற்கூறிய இக் காரணங்களால் மேலாட்சியானது மிகவும் உயர்ந்த முறையிலும் விஞ்ஞான வழியிலும் செயல்படாவிடில் பலவித இன்னல்கள் உண்டாகும் என்பது சொல்லாமலே விளங்குகிறது. உளவியல் எனும் விஞ்ஞானத்துக்கு முக்கியத்துவம் ஏற்பட்டுள்ளது என்பது உண்மையென்றாலும் மற்ற எல்லா விஞ்ஞானங்களிலும் நாம் முன்னேறி உள்ள

அளவிற்கு இதில் நாம் முன்னேறவில்லை என்பதை யாரும் மறுக்க முடியாது. மனித தத்துவத்தையும் மனிதன் எவ்வாறு ஒவ்வொரு சூழ்நிலைக்கும் மாறி நடப்பான் (React) என்று உறுதியாக மற்ற விஞ்ஞானங்களைப் போல் கணக்கிட்டுச் சொல்லவே முடியாது. உண்மையில் மற்ற விஞ்ஞானங்களில் முன்னேற்றம் அடைந்து சந்திர மண்டலத்துக்குச் செல்வது இன்றோ நாளையோ என்று இருக்கும்போது இந்த ஒரு விஞ்ஞானத்தில் நாம் இப்போது அடைந்திருக்கும் நிலைமை பல்லாயிரக் கணக்கான ஆண்டுகள் பின் தங்கியது என்று கூறுவதில் தவறேதும் இல்லை. மனிதனைப் பற்றி மனிதன் அறியும் நிலைமை இப்படி இருக்க எவரும் இந்தந்த நிலைகளில் இவ்வாறுதான் முடிவு எடுக்க வேண்டும் என்று கணக்கிட்டுக் கூற முடியாது. இவைகளைப் பற்றிச் சொல்லவும்கூட அனுபவமும், ஆற்றலும் தேவையான அளவு வளரவில்லை இதனாலேயே மேலைநாடுகளில் தொழிற்கூடங்களில் பல்வகைப்பட்ட ஆய்வுகளைப் பல உளவியல் நிபுணர்கள் தீவிரமாய் ஆராய்ந்து வருகிறார்கள். உயர் மேலாட்சியினர், தம்கீழ் உள்ள நிர்வாகிகளுக்கு எவ்வித அதிகாரமும் ஆட்சியும் கொடுத்தாலும், மனித உறவு பற்றிய நிலைகளை அவர்களிடம் விடாமல் தாங்களே முழு அளவில் கையாள வேண்டும் என்று மேலை நாட்டுப் பெரிய தொழிலதிபர் சர். பிரடெரிக் கூப்பர் (Sir Fredrick Cooper) என்பவர் கூறியுள்ளார். மேலும் அவர் மேலாட்சியினரின் குறிக்கோள்களும், செயல்களும் எவ்வாறு நாட்டின் முன்னேற்றத்துக்காக அமையவேண்டும் என்று விளக்கும் இடத்தில் கூறியிருப்பதாவது:—

தான், " மக்கள் முழு நிறைவேடு கூடிய வாழ்க்கையை அவர்கள் இரண்டே இரண்டு நிலைகளில்தான் வாழ்ந்து அனுபவிக்க முடியும் என்று நம்புவதாகவும், அதில் முதலாவது நாட்டில் உள்ள மக்கள் பெரும்பாலோர் படியாத மூடர்களாகவும் அப்பாவிகளாகவும் இருந்து, நல்ல கல்வியறிவும்,நேர்மையும், தியாக உணர்வும், நாட்டுப்பற்றும், ஆழ்ந்த சிந்தனையுள்ளமும், திறம்படத் தலைமை தாங்கும் திறமையும் இன்னபல அரிய ஆற்றல்களைப் பெற்ற சிறுபான்மையோரால் வழிகாட்டப்படுவதும் ஆகும். இரண்டாவது நாட்டில் உள்ள அனைவரும் பெரும் மேதைகளாக இருந்து கல்வி, ஞானம், நேர்மை எல்லாம் பெற்று வாழ்க்கையை எவ்வாறு தாங்கள் தனித்தனியே வாழ்ந்து அனுபவிப்பது என்பதை முற்றும் கற்றறிந்து நடந்து கொள்ளும் நிலை "—என்றும் கூறியுள்ளார். ஆனால், இப்போது நாம் வாழ்ந்து வருவது மேற்கூறிய அந்த இரண்டும் அல்லாமல் இரண்டுக்கும் இடையே இருந்து அவதியடைந்து வருவதாகும். இந்த நிலையில் இருந்து மீள வேண்டுமாயின் நாட்டின் முதுகெலும்பு என்று சொல்வதும், நாட்டின் பெரும்பான்மையான மக்கள் உழைப்பை அளித்து உற்பத்தியை ஏற்படுத்தும் இடமுமாகிய தொழிற்சாலைகளின் மேலாட்சியினரும் தொழிலாளரும் உடன் விழிப்புக்கொண்டு நாட்டின் நலம் கருதி நல்ல விஞ்ஞான முறையில் அவைகளை நடத்த உடன் சிந்தனை செய்தல் வேண்டும்

இதுவரை தொழிற்கூடத்தின நிர்வாகப் பொறுப்பை ஏற்கும் உயர் மேலாட்சியினருக்குத் தேவையான குணம், பண்பு, அறிவு முதலானவற்றைக் கண்டோம். பின்வரும் பக்கங்களில், நல்ல

அனுபவம் வாய்ந்த மேலாட்சியினர் சீரிய முறையில் பணியாளருக்கும், சமூகத்திற்கும், நாட்டுக்கும் நல்ல பலனளிக்கும் வகையில் தொழிற்கூடத்தை நடத்திச் செல்ல உதவும் பல முக்கிய துறைகளில் மிக முக்கிய மானவற்றைப் பற்றி ஒரு சிறிது விரிவாகக் காண லாம். பொதுவாக இவைகளை மேலாட்சியினரின் கருவி கள் (Management Tools) என்று கூறுவர். இத்துறை கள் எவ்வளவுக் கெவ்வளவு துரிதமாகவும், சரியாகவும் பணியாற்றுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு தொழிற் கூடம் சிறந்த முறையில் நடைபெறும்.

நமது தொழிற்சாலைகள் நல்ல முறையில் நடக்க வேண்டுமேயானால் நாம் செய்யும் பொருள்கள் எல்லாம் விற்பனை ஆக வேண்டும். பொருள்களை வாங்க வெளி யில் நுகர்வோர் (Consumers) வேண்டும். அப்படி வாங் கும் நுகர்வோர் இல்லையாயின் தொழிலகங்களை மூடுவ தன்றி வேறு வழியே இல்லை. எந்தவிதமான கட்டுப் பாட்டு நிலையையும் மேற்கொள்ள வேண்டிய அவசி யமே வராது. ஆகையால், விற்பனையே ஒரு தொழி லகத்தின் முக்கிய பகுதியாக அமைகின்றது. அதற் குப் பின்னரே மற்றத் துறைகள். உற்பத்திப் பகுதியில் உள்ளோர் எல்லோரும், தாம் செய்வதே முக்கியம் என்றே மற்றவர் கருத வேண்டும் என விரும்புகிறார்கள். அதேபோல விற்பனைத் துறையின ரும் விரும்புவது இயல்பே. அவர்களிடம் வரும் ஒரு சில நுகர்வோரை அவர்கள் விரும்பும் பொருள்கள் இல்லை எனச் சொல்லித் திருப்பி அனுப்ப விரும்புவது வழக்கம் இல்லை. எப்படியாயினும் நுகர்வோரின் திருப்தியைக் காணவே விரும்புவர். ஆனால், தொழிற் பகுதியில் உள்ளவரோ பிறருக்காகவோ அல்

லது தனிப்பட்ட நுக்ர்வோருக்காகவோ கையாண்டு வரும் உற்பத்தி முறையிலிருந்து விலகித் தனிப்பட்ட வகையில், சிலருக்காகத் தனிப்பட்ட வசதிகளை அளிக்க முடிவதில்லை. எப்பொழுதும் ஒரேமாதிரியாக எந்தவித மாறுதலுமின்றி வேலைகள் நடக்க வேண்டுமென்று விரும்புகிறுர்கள். இதற்கு அடிப்படைக் காரணம் பழக்கமான உற்பத்தி முறையைக் கையாண்டால் சிக்கல்கள் ஏதுமின்றிக்குறித்தவகையில் உற்பத்தியை முடிக்க முடியும். பொதுவாக உற்பத்தித் துறையினர் தனிப்பட்ட வகையில் ஒரு சிலருக்காக, வருந்தி வேலை செய்வதை விரும்பாமல் தவிர்ப்பது அவர்களைப் பொறுத்தமட்டில் தவறில்லை என்றே கூறலாம். அப்படித் தனிப்பட்டவர்களுக்காக ஆரம்பிக்கும்போது உற்பத்திச் செலவுகள் அதிகமாகின்றன. அதிகமாகும் செலவுகள் சுலபமாக வெளிப்படையாகப் புலப்படாது என்பதையும் இவர்கள் நன்கு அறிவார்கள். அப்படி இருக்க அவர்கள் எப்படி ஒரு சிலருக்காகத் தாம் வருந்த விரும்புவார்கள் ?

அதுமட்டுமின்றி, தயாரிப்பவருக்குத் தங்கள் பழக்கமான வழியைவிட்டு மாறிச் செய்வதனுல் உண்டாகும் செலவுகளை நுகர்வோரிடம் வாங்கினுல் உற்பத்திப் பகுதியில் உள்ளவர்கள் செய்ய மறுக்கமாட்டார்கள். அவ்வாறு செய்து தனிப்பட்ட நுக்ர்வோருக்கு அவர்கள் விரும்பும் வகையில் பொருள்களைத் தயாரித்துக் கொடுக்கையில் அவர்கள் பெருமிதத்துடன் மற்றவருக்குக் காட்டும்போது தம்முடைய தொழிற்சாலையைப் பற்றியும், பொருள்களைப் பற்றியும் விளம்பரம் செய்கிறுர்கள். இரண்டாவது அச்சிறப்பு அம்சங்களைப் பொறுத்தித் தருவதனுல் மற்றத் தயாரிப்பாளர்கள்

இவ்வகையில் நம்முடன் போட்டியிடுவதும் குறை கிறது. இதனால் இந்தத் தொழிற்சாலைக்கு மொத்தத் தில் இலாபமும் அனுகூலமும் உண்டாவதற்கே வழி யுண்டாகிறது என்றும் கருதலாம். மேலும் பொருள்களை விற்கும் கடை முதலாளிகள் யாவரும் மற்ற விற்பனை யாளரைவிடத் தாம் நுகர்வோர்க்கு அளிக்க நிறையப் பலவகையான-விதவிதமான-பொருள்களைத் தயாராக வைத்திருக்க வேண்டுமென்றே விரும்புகின்றனர்.

உற்பத்தி செய்வோர் விற்பனையாளர் இவர்கள் நிலைமைகள் இப்படி இருக்க, நுகர்வோர் எந்தவிதத்தில் பொருள்களை விரும்புகிறார்கள்? ஒரு குறிப்பிட்ட தொழிற்கூடத்தில் உற்பத்தியானதையோ, ஒரு குறிப் பிட்ட அமைப்பில் அமைந்ததையோ ஏன் தேடி வாங்க ஆசைப்படுகின்றனர்? இதையும் நாம் சிறிது ஆராய்ந்து பார்ப்பது மிக அவசியமாகப்படுகின்றது. இவ்வகையில், நுகர்வோர் ஒரு பொருளை வாங்குவது என முடிவு செய்யக் காரணமாக அமையும் அடிப்படை கள் (Factors) இரண்டு தலைப்புக்களில் பிரிக்கப்படலாம். அவை 1. உணர்வின் வகை (Emotional) 2. பயன் வகை (Rational) ஆவன. முதல் தலைப்பான உணர்வின் வகையின் காரணங்கள் கீழ் வருவன :—

1. தன்னையறியாமல் உண்டாகும் ஏக்கத்தை விருப்பத்தைத் தணிப்பது.
2. வீட்டில் அப் பொருள் இருந்தால்தான் வசதி உண்டாகும் என்ற நிலைமை.
3. அப் பொருளினால் தனக்குத் தொல்லை குறைந்து வசதி பெருகுவது.

4. பெற்றோர் என்ற முறையில் குழந்தைகளைத் திருப்திப்படுத்தும் வகையில் வாங்குவது.

5. தன் உடல் நலம் நன்றாக அமைவது.

6. அப் பொருள் நன்றாக இருந்து மனத்துக்குப் பிடிப்பது.

7. அப் பொருள் இருந்தால் கொடுமைகள் தவிர்க்கப்பட்டுப் பாதுகாப்பாக இருக்குமென்பது.

8. அப் பொருளினால் கடினமான வேலைகளைச் சுலபமாய்ச் செய்ய முடிவது.

9. ஓய்வு நேரம் அதிகமாய்க் கிடைப்பது.

10. பொழுதுபோக்குக்கான நிலை உண்டாவது.

11. பிறர் கவனத்தைக் கவர்வது.

12. அப் பொருளினால் தன் நிலைமை உயர்வது போன்ற மகிழ்ச்சி.

13. சமூகத்தில் புகழ் அடைவது.

14. தன்னுடைய விருப்ப எண்ணங்களை வெளிப்படுத்திக் கொள்வது.

15. பக்கத்தில் உள்ளவர் வைத்திருப்பதால் அவருக்குப் போட்டியாகத் தானும் அதை வைத்துக் கொள்ள விரும்புவது.

16. மற்றவரின் சிறந்த சடங்குகளின் போது அவருக்குப் பிடித்தமான பொருளைப் பரிசாக வழங்குவது போன்றவைகளாகும்.

இரண்டாவது தலைப்பின் கீழ் வருவன :—

1. நம்பிக்கையுடன் உழைப்பது

2. நல்ல தரம் வாய்ந்தது

3. உபயோகிக்க மிகவும் வசதியாகவும் எளிமையாகவும் இருப்பது.

4. திறமையுடன் உபயோகத்தில் உழைப்பது (Efficient).

5. நல்ல வலுவுடன் உழைப்பது.

6. உபயோகத்தின் போது சிக்கனமாக இயங்குவது.

7. விலை குறைவாக இருப்பது.

8. தேய்மானம் ஏற்படும்போது தேய்ந்த பகுதிகள் உடனடியாய்க் கிடைப்பது.

9. வருவாய் அதன் மூலம் அதிகமாவது.

10. நஷ்டங்கள் ஏதும் ஏற்படாத வகையில் தவிர்ப்பது.

இவை போன்ற பல காரணங்களை மனதில் வைத்து நுகர்வோர் பொருள்களை வாங்குகின்றனர். பொருள்களை உண்டாக்குவோர், மற்றவருடன் போட்டியிட்டுத் தம் பொருள்களை விற்பனை செய்ய வேண்டுமாயின் நுகர்வோரின் விருப்பங்களுக்கு ஓர் அளவு திருப்தி செய்யுமாறு அவைகள் அமைய வேண்டும். இதை நமது தினசரி வாழ்க்கையில், தினச் செய்தித் தாள்கள், சுவரொட்டிகள், திரைப்பட அரங்குகள் இன்னும் இவை போன்றவற்றால் பொதுமக்களின் கவனத்தைக் கவர்ந்து அவர்களை வாங்கத் தூண்டும்படி செய்ய உற்பத்தியாளர்கள் செய்யும் விளம்பரங்களே நன்கு எடுத்துச் சொல்லுகின்றன.

மேலே கூறப்பட்ட இருவகை அடிப்படைகளில் முதல் தலைப்பில் கண்ட காரணங்கள், அன்றாட வாழ்க்கைக்குப் பயன்படும் விலை மலிவாக இருக்கும் பொருள்களை வாங்கும் பொழுதுதான் அமைகின்றன. ஆனால், விலை அதிகமுள்ள இயந்திரங்கள், கருவிகள் போன்றவைகள் வாங்கும்போது, வாங்குபவர்களின் முடிவை உறுதி செய்ய உபயோகப்படுவன, இரண்டாவது தலைப்பில் வருவனவும், மூன்றாவதாகப் பின் விளைவு அடிப்படைகள் (Patronage motives) என்ற தலைப்பின் கீழ் வருவனவும் ஆகும்.

மூன்றாவது தலைப்பின் கீழ் வருவன :—

1. வாங்கிய பின் அப் பொருள்களை நன்றாகத் திறம்பட உழைக்க வைக்க உற்பத்தியாளர் அல்லது விற்றவர் உதவி செய்வது.
2. அப்பொருளை உற்பத்தி செய்து விற்பவர்களின் மீது உள்ள நம்பிக்கை, நற்பெயர் முதலியன.
3. உறுதி கூறியபடி தாமதமின்றிப் பொருள்களை உற்பத்தி செய்து கொடுத்தல்.
4. தங்களுக்கு வேண்டிய வகையில், வசதிகளுடன் பொருள்களைத் தயாரித்தோ அல்லது மாற்றி அமைத்தோ கொடுப்பது.
5. பழுதுபடும்போது தாமதமின்றி, உடன் சரி செய்து, விரயத்தைக் குறைக்க வகையுள்ளது.
6. பல வகைகள், ரகங்கள், அளவுகள் இருப்பதால் தமக்கு உகந்தவகை, ரக, அளவில் பொறுக்கி எடுக்கும் வாய்ப்பு இருப்பது.
7. எந்த இடத்திலும் பொருத்த எளிதாக அமைவது.
8. தவணை முறைக் கடன் வசதிகள் வழியாகப் பொருள்களை அடைவது.

9. நம்பிக்கையான உத்திரவாதங்கள்.
10. வாங்குபவருக்கென சிறப்புச் சலுகைகள் அளிப்பது.

இவைகள் யாவும் பெரிதும், வாங்குவோரின் எண்ணங்களைக் கவர்ந்து வாங்க முடிவு செய்ய உதவுகின்றன.

விற்பனை நிலைமை இவ்வாறு இருக்க அந்தத் துறையிலுள்ளவர்களை முன்னதாகவே வருங்காலத்திற்கு விற்பனை செய்ய வேண்டிய பொருள்களின் தரம், வகை, எண்ணிக்கை முதலானவைகளை முடிவு செய்து சொல்ல வேண்டும் என்று சொல்லும்பொழுது அவர்கள் சிறிது தயங்கவே செய்வார்கள் — செய்கிறார்கள். தாங்கள் எப்படி மற்றவர் உள்ளத்தைக் காண முடியும்? யார் யார், என்ன என்ன, எப்பொழுது, எப்படி வாங்குவார்கள் என் யார் கூற முடியும் என்றே நினைக்கின்றனர். உண்மையிலேயே இது பற்றி முடிவு செய்வது கடினமான வேலையே என்பதை எவரும் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். எனினும் பழைய விற்பனையை ஆழ்ந்து ஆராய்ந்தால் ஓர் அளவுக்கு விற்பனையைத் திட்டமிட வழியுண்டு. முழு அளவில் நிர்ணயிக்க முடியாவிடினும் ஓர் அளவு நிர்ணயிப்பது பல வழிகளில் இலாபகரமானதாக அமையும். எதிர்பாராத விதத்தில் தேவை ஏற்படும் பொருள்களை உற்பத்திப் பகுதிகளில் உடன் எடுத்துச் செய்து கொடுக்கச் சொல்வதால் பலவிதக் கஷ்டங்களும் நஷ்டங்களுமே உண்டாகும். உதாரணமாக, வேண்டிய மூலப் பொருள்கள் இல்லாமல் இருக்கலாம். அவைகளை உடனடியாய் வாங்குவதனுல் கூடுதலான செலவுகள் ஆகும். செய்து கொண்டிருக்கும் பொருள்களை அந்தந்த நிலையிலேயே விட்டுவைக்க வேண்டி வரும். அவ்வாறு செய்யும்

போது, முன்னமேயே செலவு செய்துள்ள முதலீடு தொழிற்சாலைகளிலேயே முடங்கிவிடுகிறது. அதற்கு வட்டியும் அவைகளை வைத்திருக்கும் இடம், செய்து வைத்த அளவிற்கான செலவுகள் யாவும் அப்போதைக் குப் பயனற்றதாகி விடுகின்றன. செய்முறைகளில் நிறைய மாறுதல்கள் ஏற்பட்டு, திட்டங்களில் குழப் பம், தாமதம் இவைகளினால் உற்பத்திச் செலவு அதிக மாகவே இத்தகைய இம்மாதிரி செலவு வகைகள் அதிகமாவதைப் புன்மடங்கு குறைக்க ஒரே வழி, கூடு மானவரை சென்ற கால விற்பனையை யொட்டியும் சந் தர்ப்பச் சூழ்நிலைகளை யொட்டியும் ஓர் அளவிற்கு எதிர் கால விற்பனை அளவை நிர்ணயித்துக் கொண்டு அதற்குத் தகுந்தபடி உற்பத்தித் திட்டங்களை வகுத் துத் தொழிற்கூடத்தை நன்கு நடத்துவதே யாகும். இவ்வாறு பல செலவுகளைத் தவிர்த்து நிலையான சூழ் நிலையை ஏற்படுத்த ஒரு முன்னெச்சரிக்கையாக நிர்ண யிக்க முடியவில்லையெனில் அதற்குச் சில காரணங்கள் உள்ளன. அவைகளில் முக்கியமானவைகள் (1) விற் பனைத் துறையில் உள்ளவரின் சக்திகளையும் திறனை யும் திட்டமிட்டு நிறைவேற்றாமை. (2) நல்ல விற்பனைக் காக நேரமே செலவு செய்யாமல் இருப்பது. (3) நல்ல விற்பனை முறைகள் இல்லாமை. (4) விற்பனை செய்யும் பொருள்களைப் பற்றி நன்கு அறியாமை என்பவை களாம். இந்தச் சிறு தவறுகளைத் திருத்த முயன்றால் விற்பனைத் துறையின் திறன் நிச்சயம் உயரும் என் பதில் சிறிதும் ஐயமில்லை. தொழிற்கூடங்களில் உள் ளவர் என்றும் நுகர்வோர் விரும்புவதைத் தயார் செய் யவே இருக்க வேண்டும். விற்பனை அதிகமாக அதிக மாக உற்பத்திச் செலவுகள் அவ்வளவுக்கவ்வளவு குறைய வழியுண்டு.

உற்பத்தி பற்றி எண்ணும் போது அதற்குரிய திட்டமும் கட்டுப்பாடும் எண்ணியே தொழிற்பட முயலவேண்டும். இம் முயற்சி இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப் படுகின்றது. முதல் பாகம் விற்பனைத் தேவைகளை உற்பத்தித் திட்டங்களாக மாற்றி அமைக்கிறது. இரண்டாவது அத்திட்டங்களை ஒவ்வொரு நிலையிலும், திட்டமிட்டபடியே விரயங்கள் அதிகமாகாமல் காத்துச் செயல்பட உதவுகிறது. இந்தக் கட்டுப்பாட்டுப் பகுதியே (Control function) ஒரு தொழிலகத்தை நல்ல முறையில் நடத்தி வைக்க மிகவும் உதவியாய் அமைகிறது. பெரும்பாலான நிர்வாகத்தினர், இந்தப் பகுதி ஒரு தொழிற்கூடத்தில் இருப்பது வீண் செலவே என்க் கருதுகின்றனர். முறைப்படி இப்பகுதி செயல்படுமானல் பலவகை விரயங்களைக் குறைக்கவும் திட்டப்படி காரியங்களைச் செயல்படுத்தவும் இயலும். இந்தப் பகுதியினால்தான் உற்பத்தியை ஆரம்பிக்கும் முன்னமேயே மேலாட்சினருக்கு விற்பனைத் தேவைகளைப் பூர்த்தி செய்ய, வேண்டிய தொழிலாளர்கள், அவர்களின் தரம், இயந்திர வசதிகள், மற்றப் பொருள்கள் இன்ன பிற வசதிகள் எந்தெந்த அளவில் எவ்வெப் பொழுது தேவை என்பதை நன்கு கணக்கிட்டுத் தெரியப் படுத்த முடிகிறது. இந்தத் தேவைகளையும் தம் நிறுவனத்தில் உள்ள வசதிகளையும் ஒப்பிட்டு விற்பனைப் பகுதியினர் நுகர்வோருக்கு வாக்களித்த நேரத்தில் பொருள்களை உற்பத்தி செய்து அவர்களைத் திருப்தி செய்யமுடியுமா அல்லது முடியாதா எனத் திட்டவட்டமாக அறிய முடிகிறது. ஒப்பிட்டதன் பலனாக உடனடியாகப் பற்றுக் குறைகளை ஈடுபடுத்தித் தங்கள் திட்டங்களை நிறைவேற்ற வழி அமைக்க முடிகிறது. அன்றி இருக்

கும் வசதிகள் தேவையான வசதிகளை விட எந்த அளவு அதிகம் எனத் தெரிந்தால் அந்த அளவிற்கு மேலும் மற்றப் பொருள்களை உற்பத்தி செய்யத் திட்டமிட வாய்ப்பு ஏற்படுகின்றது. இதன் பலன் அதிகப்படியான வசதிகள் வீணுகாமல் தடுத்து உற்பத்தித்திறனை அதிகமாக்குவதே ஆகும். மேலும் பொருள் உற்பத்தியைத் திட்டமிடும் பொழுது இயந்திர அமைப்புகள் நடுவில் கெட்டுப் போவது, ஆட்கள் எதிர்பாராத விதமாக நின்று போவது போன்றவைகளையும் கவனித்து அதற்குத் தகுந்த அளவில் வசதிகளைப் பெருக்க வேண்டிவரும். நிற்க, இந்தப் பகுதியில் தயாரிக்கும் திட்டங்களில் இருந்தே என்னென்ன பொருள்கள் எந்தெந்தக் காலங்களில் தேவைப்படும் என்றும், என்னென்ன அளவில் அவைகள் வாங்கப் பெறவேண்டும் என்றும் நன்கு தெரியும். ஒவ்வொரு பகுதி வேலையையும் எவ்வெப்பொழுது ஆரம்பிக்க வேண்டுமென்பதும் எப்பொழுது முடிக்கவேண்டுமென்பதும் இதிலிருந்து நன்கு புலப்படும். அவ்வப்பொழுது திட்டத்தையும், செயல்பட்டுவரும் உற்பத்தியையும் ஒப்பிட்டுப் பார்த்து இரண்டுக்கும் உள்ள வேறுபாடுகள் எவை என்றும், அவ்வாறு ஏற்படக் காரணங்கள் என்ன என்றும் உடனடியாய்க் கண்டு வேண்டுவதைச் செய்வதால் திட்டங்கள் எதிர் பார்த்த முறையில் நிறைவேறுவதும்; எதிர்பாராத விரயங்கள் ஏற்படுவதைத் தடுப்பதும் சாத்தியமாகிறது. இத்திட்டங்கள் இல்லாமல் ஒரு நிறுவனத்தில் பொருள் உற்பத்தியைச் செய்ய முடியாதா என்ற கேள்வி எழுவதும் இயல்பே. அவ்வாறு திட்டங்கள் இல்லை என்றால் எந்தெந்த வழிகளில் விரயங்கள் ஏற்பட வகையுண்டு எனச் சிந்திப்பதும் நல்லதே.

உற்பத்திக்குத் தேவையான பொருள்கள் சரியான அளவில் இல்லாமல் போனால், உற்பத்தி தடைபட்டுப் போகும். இயந்திர வசதிகள், ஆட்கள் வசதி முதலியவைகள் நல்ல முறையில் முழு அளவிற்கு உபயோகிக்கப்பட முடியாது போய் விடுகின்றது. ஆகையால் செலவுக்குத் தகுந்த உற்பத்தி இல்லாமல், குறைந்து, உற்பத்திச் செலவு அதிகமாகிறது. இதன் பலன் இரண்டு முக்கிய நட்டங்களை ஏற்படுத்தக் காரணமாக அமைகிறது. ஒன்று உற்பத்தியில் தாமதம் ஏற்படுவதால் வாக்களித்த நேரத்தில் நுகர்வோருக்கு வேண்டிய பொருள்களைக் கொடுக்க முடியாது போய், அவர்கள் நம் பொருள்களை விட்டு வேறு ஒருவரின் பொருள்களை வாங்க வேண்டி வருகிறது. இரண்டாவது, நிறுவனத்தின் வருமானம் நிறைவு இல்லாமல் போவதால் தொழிலாளர்களின் முயற்சிக்குத் தகுந்த விதத்தில் ஊதியம் அளிக்க முடியாது நின்று, அவர்களின் வெறுப்புக்கு இடமாகிறது. மற்றும் வேண்டிய மூலப் பொருள்களை எந்த அளவில் எவ்வெப்பொழுது வாங்குவது என்று முன்கூட்டியே திட்டமிடாது போவதால் தேவைக்கும் அதிகமான பொருள்களை முன்கூட்டியே வாங்கிவிட நேருகிறது. அப்படி நேரிடும் நிறுவனத்தின் மூலதனம் இம்மூலப் பொருள்களில் முடங்கிப் போவதல்லாமல், அதற்கு வட்டி போன்ற மற்றச் சில செலவுகளும் ஏற்பட்டு உற்பத்திச் செலவு அதிகரிக்க ஏதுவாகிறது. ஆகவே விற்பனை முன் அறிவிப்பைப் போன்றே உற்பத்தித் திட்டமும் உற்பத்திக் கட்டுப்பாடும் மிகமிக முக்கியமானதாகும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

ஒரு தொழிற் கூடம் எல்லா விதத்திலும் நல்ல முறையில் நடக்க உபயோகமாகும் கருவிகளில் மூன்றுவதாக முக்கியமானது (cost and budgetary control) என்பதாகும். இது ஒவ்வொரு தொழிலகத்திலும் உற்பத்தி செய்யும் செலவினங்களைக் கட்டுப்படுத்துவதற்காகவும் (cost control) ஒரு குறிப்பிட்ட கால அளவில் நிறைவேற வேண்டியவைகளுக்காக எவ்வளவு மூல தனம் ஒதுக்கப்பட வேண்டும், எவ்வெவ்வழிகளில் எந்த அளவு செலவு ஏற்படும் என்பதை முன் கூட்டியே திட்ட மிட்டு (budget) அந்தக் கால அளவு முடிந்ததும் நடந்ததையும், திட்ட மிட்ட பட்டியலையும் (budget) ஒப்பிட்டுப் பார்த்துத் தொழிற்கூடம் எவவகையில் நடந்தேறி வந்துள்ளது என்பதைத் தெரிந்து கொள்ளவும் மிகவும் பயன்படுகிறது.

பட்ஜெட் என்பது அந்தந்த வியாபாரத்தின் குறிக்கோள்களை விவரமாய்ப் பகுதி பகுதியாகப் பிரித்து அந்தக் கூடத்தின் நடவடிக்கைகளை தனது திட்டத்திற்குத் தகுந்தவாறு செயல்படுத்துவதே ஆகும். இந்தப் பட்ஜெட்டில் மூன்று வகைகள் பொதுவாகக் காணப்படும். 1. வியாபாரத்தின் முழு பட்ஜெட் 2. இம் முழு பட்ஜெட் அவ் வியாபாரத்தின் ஒவ்வொரு பகுதிக்கும் உண்டான பெரும் பகுதி பட்ஜெட்டுகளால் ஆக்கப்படுகின்றது. 3. மேலும் இந்த ஒவ்வொரு பெரும் பகுதி பட்ஜெட்டும், அந்தந்தப் பகுதிகளில் செயல் படுத்தப்படும் எல்லாச் செயல்களுக்கும் விரிவான சிறுபகுதி பட்ஜெட்டுகளால் ஆக்கப்படுகின்றன.

இவ்வாறு மூன்றுபட்ஜெட்டுகள் ஒரு தொழிற் கூடத்தில் ஏற்படுத்திக் கொண்டு செயல் படுத்துவதால் உண்டாகும் நன்மைகள் :—

1. அத் தொழிற்கூடத்தில் முதலீடு செய்தவர்கரும் உயர் மேலாட்சியில் உள்ளவர்களும் எதிர்பார்க்கும் பலன்களை நல்ல முறையில் விளங்கும்படியான வரையறுக்கப்பட்ட திட்டங்களாகவும், குறிப்பிட்ட குறிக்கோள்களாகவும் அந் நிர்வாகத்தில் பங்கு கொள்பவர்களுக்கும், செயலாற்றுபவருக்கும் தெள்ளத் தெளிய எடுத்துக் காட்டுகின்றது.

2. அந்தந்தத் தொழிற்கூடத்தின் பல பகுதிகளும் ஒரே பொதுவான குறிக்கோளுக்காக ஒரு சேர அனுசரித்துச் செயல்பட ஏதுவாகிறது.

3. அந்தந்தப் பகுதியும் திறம்படச் செயல்பட்டு இருக்கின்றனவா எனப் பட்ஜெட்டை யும், செயல்பட்டதின் விளைவாக ஏற்பட்ட பலனை யும் ஒப்பிட்டுப் பார்த்து, கட்டுப்படுத்திக் கொள்ள முடிகிறது.

4. இந்தப் பட்ஜெட் திட்டங்கள் போடுவதால்வருமானத்தையும் செலவையும் கூடுமானவரை சரியாக முன் கூட்டியே திட்டவட்டமாகக் கூற முடிகிறது.

5. அதுமட்டும் இன்றிப் பணம் எந்தெந்த அளவில் எந்தெந்தக் கால அளவில் எந்தெந்தச் செலவினங்களுக்காகத் தேவைப்படும் என்று அறிய முடிவதால் செயல்படும் காரியங்கள்

நிறைவரன முறையில் நடைபெற வகை ஏற்படுகின்றது.

6. அந்தந்தப் பகுதியில் உள்ளவர்கள் மேலே கூறிய பலன்களால் உடனுக்குடன் தெளிவாக எண்ணிப் பார்க்கவும் குறிக்கோள்களை அடைவதற்காகச் செயல்பாட்டு முறையை வேண்டிய வகையில் தன்னம்பிக்கையுடன் மாற்றி அமைக்கவும் முடிகின்றது.

இவையெல்லாவற்றாலும், வருங்காலத் திட்டங்களை, ஐயமின்றியும், கால தாமதம் இன்றியும், தவறுகள் இன்றியும், செயல்படக் கூடிய திட்டங்களாக அமைக்க வேண்டிய அனுபவத்தை உண்டாக்குகின்றது.

பொதுவாக, பட்ஜெட்டுகளின் காலவரம்பு ஓர் ஆண்டாக இருக்கும். ஒரு சில தொழிற்கூடங்களில் வரப் போகும் ஆண்டுக்கு பட்ஜெட் தயாரித்து மாதாமாதமோ அல்லது ஆண்டு இறுதியிலோ செயல்பட்டதற்கும், பட்ஜெட்டுக்கும் உள்ள வித்தியாசங்களைக் கண்டு வேண்டிய நடவடிக்கை எடுக்கப்படுகின்றது. வேறு சில தொழிற்கூடங்களில் ஓர் ஆண்டுக்கென பட்ஜெட் தயாரித்து மூன்று மாதத்துக்கொருமுறை பரிசிலனை செய்து திருத்தத்துடன் அந்நாளில் இருந்து ஓர் ஆண்டு பட்ஜெட் தயாரிக்கப்படுகின்றது. இப்படியே ஒவ்வொரு கால் ஆண்டு இறுதியிலும் பரிசீலனையும் ஆண்டு பட்ஜெட்டும் தயாரிப்பு ஆகின்றது. கடந்த கால அநுபவத்தையொட்டிப் பார்த்தால், இம்மாதிரியான பட்ஜெட் திட்டங்களை முறையாகக் கையாண்டு வந்த தொழிற்கூடங்கள் எல்லாம் குறுகிய கால அள

வில் பலவகைகளில் முன்னேற்றம் அடைந்திருப்பதையும் பட்ஜெட் முறைகளைக் கடைப்பிடிக்காத தொழிற்கூடங்களில் பெரும்பாலனவை பெருவாரியான நஷ்டங்கள் ஏற்பட்டு நசிந்து போயிருப்பதையும் காணலாம். முன்னதில் அத் தொழிற்கூடங்கள் உழைப்போரின் வருங்காலம் சிறந்து விளங்க, பின்னதில் குறித்த தொழிற்கூடங்களில் செயலாற்றுவோரின் வாழ்க்கைத் தரம் முதலியன திருப்திகரமாக அமைய முடியாமல் போவதும் இயல்பே. இதற்கு முக்கிய காரணமாக இருப்பவர்கள் செயல்படுத்தும் அலுவலகத்தவரோ அல்லது தொழிலாளிகளோ அல்லர். ஆனால், தொழிற்கூடத்தை மேல் இருந்து குறிகோள்களை உண்டாக்கி நிர்வகிக்கும் உயர் மேலாட்சியினரே ஆவர் 'என்பதை நாம் மறக்கவே கூடாது.

முழு பட்ஜெட் பின்பு பெரும்பகுதி பட்ஜெட்டுகளாகவும் அவை, மறுபடியும் சிறுசிறு பகுதி பட்ஜெட்களாகவும் பிரிக்கப்படுகின்றன எனக் கண்டோம். இப் பெரும்பகுதி பட்ஜெட்கள் எந்தெந்தப் பகுதிகளாக அமையும் என்பதைக் காட்ட சில பகுதிகளைக் காண்பது நல்லது. ஒரு தொழிலகத்தில் முதலீடு, தொழிலாளரின் எண்ணிக்கை, உற்பத்தி செய்யப்படும் பொருள்கள் இன்னும் பல்வேறு இனங்களைப் பொறுத்து பல அலுவலகப் பகுதிகள் ஏற்படுத்த வேண்டி இருக்கும். அவ்வாறு உண்டாகும் பகுதிகளுக்கெனத் தனித்தனி பட்ஜெட்டுகள் தயாரிக்க வேண்டியது அவசியமாக அமைகின்றது. அவ்வாறு உண்டாக்கப்படும் பெரும்பகுதி பட்ஜெட்டுகளில் முக்கியமான சில:—விற்பனை பட்ஜெட், உற்பத்தி பட்ஜெட், செலவினங்கள் பட்ஜெட், இயந்திர

பராமரிப்பு பட்ஜெட், தொழிலாளர் நல பட்ஜெட், இயந்திர வசதிகள் பட்ஜெட் முதலியன்வாகும்.

பட்ஜெட் திட்டங்கள் இப்படி இருக்க நாம் உற்பத்திச் செலவுக் கட்டுப்பாட்டைப் பற்றியும் சிறிது அறிந்து கொள்வது அவசியம். இந்த முறை இல்லாமல் போனல் பட்ஜெட் திட்டங்கள் ஏதும் வெற்றிகரமாக நடத்தப்பட முடியாது. கடந்த ஆண்டுகளில் ஏற்பட்ட வரவு, செலவு மற்றும் இதர செயல்களின் புள்ளிகளின் விவரங்களில் இருந்தே வரும் ஆண்டு அதே இனங்களில் எந்தெந்த வகையில் மாறுதல்கள் ஏற்படும் என்று முன்கூட்டியே பட்ஜெட் திட்டங்கள் வகுக்க முடிகின்றது. இப் புள்ளி விவரங்களைச் சரியாகக் கணக்குப்படி எல்லா நிலைகளிலும் எழுத்து மூலமாய்க் கொண்டு வராவிடில் தொழிற்கூடத்தின் பல்வேறு பகுதிகளிலும் பல துறைகளும் எவ்வாறு செயல்படுகின்றன என உயர் மேலாட்சியினர் அலசிப் பார்க்க முடியாது போய்விடும். இப்புள்ளி விவரங்களில் இருந்தே எந்தத் துறை எந்தப் பகுதி எக் காரணத்தினல் நல்ல திருப்திகரமான முறையில் செயல்படவில்லை என உடனே அறிய முடிகிறது. இதை அக்காலத்துக்குரிய பட்ஜெட்டுடன் ஒப்பிட்டுப்பார்க்கையில் காரணமும் எளிதில் விளங்கும். இந்த உற்பத்திச் செலவுக் கட்டுப்பாடு பலவகைகளிலும், முறைகளிலும் தொழிற்கூடங்களில் செயல்பட்டு வருகின்றன. இதற்கெனத் தனித் தொழிற் படிப்புக்களும் வகுப்புக்களும் பல்கலைக் கழக நிலையில் நடத்தப்பட்டு வருகின்றன. இந்த இருபதாம் நூற்றுண்டிலும் பல தொழிலதிபர்கள் இந்த பட்ஜெட், உற்பத்திச் செலவு; கட்டுப்பாடு இவைகளைக் கையாளுவதில் ஒரு பலனும் இல்லை, செலவி

ணத்தையே அதிகப்படுத்தும் என்ற நம்பிக்கை கொண்டுள்ளது மிகவும் வருத்தப்பட வேண்டிய செய்தி ஆகும். இப் பகுதிக்காக எவ்வளவு செலவானாலும், இப் பகுதி மேலாட்சியினருக்கு எங்கெங்கே குறைபாடுகள் உள்ளன எனத் தெள்ளத் தெளிய எடுத்துக் காட்டி அதன் பலனாக விரயங்களைக் குறைத்துச் செலவைக் கட்டுப்படுத்தி இலாபத்தைப் பலபங்கு அதிகரிப்பதைக் காணும்போது இப் பகுதியும், அதற்காக அமைக்கப்படும் அலுவலகத்தாரின் முக்கிய நிலையும் நன்கு விளங்கும். இப் பகுதியில் பணியாற்றும் அதிகாரிகள் (Cost Accountants) உயர் மேலாட்சியினருக்கு மட்டும் இன்றித் தொழிற்கூடத்தில் படிப்படியாக உள்ள அதிகாரிகள், அலுவலகத்தவர்கள், மேற்பார்வையாளர்கள், தொழிலாளர்கள் போன்ற எல்லா நிலையினருக்கும், அவரவர்களுக்கு வேண்டிய அளவிலும் வகையிலும் அன்றாடச் செயல்பாட்டுத் திறனை விளங்கவைக்கச் செய்திகள் கொடுக்க முடியும். இவ்விதச் செய்திகள் கிடைக்கும் பொழுது, நிர்வாகத்தில் உள்ள ஒவ்வொருவரும் தம் தம் நிலையில், தங்கள் பொறுப்புக்கும் ஆதிக்கத்துக்கும் உட்பட்ட எல்லையில் என்ன நடந்துள்ளது என அறிய முடிகிறது. உடன் அவற்றிற்குக் காரணம் கண்டு உயர் மேலாட்சியினர் அதிகார பூர்வமாய் நடவடிக்கை எடுக்கும் முன்பே அவர்களின் ஆணைகளுக்குக் காத்திருந்து காலத்தை வீணாக்காமல் ஆவன செய்து நிலைமையை முன்னேற்றமுள்ளதாகச் செய்ய இப் பகுதி பெரும் அளவில் துணையாக அமைகின்றது. இவ்வித நடவடிக்கைகள் எடுக்கப்படுமாயின் அந்தத் தொழிற்கூடத்தில் எவ்விதக் குறையும் இல்லாமல் எல்லாரும் மனநிறைவோடு நிர்வாகத்தில் முழு அளவில் பங்கு கொண்டு சமூகத்திற்கும், நாட்டிற்கும்

தகுந்த முறையில் பணியாற்றுவார்கள் என்பது உறுதி.

இது வரை தொழிற்கூடத்தை நன்கு நடத்த மேலாட்சியினருக்கு உதவும் முக்கிய மூன்று பகுதிகளைப் பார்த்தோம். அவை எவ்வளவு முக்கிய மெனக் கண்டோமோ அவ்வளவு முக்கியமானது பணியாளர் பற்றிய பகுதி. தொழிலாளர் இல்லாமல் நாம் எவ்வளவுதான் பொருளீடும் மற்ற வசதிகளும் செய்தாலும் அவை பயனளிக்க முடியாது. ஆகவே எல்லாவற்றினும் முக்கியமான தெனவே இப்பகுதியைக் கருதலாம். மேலாட்சியினருக்கும் தொழிலாளருக்கும் நடுவில் நல்லுறவை ஏற்படுத்தித் தொழிற் கூடம் நன்கு செயலாற்ற வகை செய்வது இந்தப் பகுதிதான். முன்பு கூறியது போல் உயர் மேலாட்சியினர் நல்ல மனித உறவைக் கடைப்பிடிக்க வகை செய்ய இப்பகுதியிலுள்ளோரையே எதிர் பார்க்க வேண்டும். தொழிலாளர்கள் எல்லோரும் தாம் உழைக்கும் அந்தத் தொழிற் கூடம் தங்களுடையது போலவே கருதி விரயங்களைக் குறைத்து, லாபம் அதிகம் பெறச்செய்ய வகை செய்வது இந்தப் பகுதிதான். ஆகவே இந்தப் பகுதி எங்தெந்த வகையில் எவ்வாறு செயலாற்றுகிறது என்று சுருங்கக் காணலாம்.

இவ்வரிசையில் முதலில் நிற்பது, தகுதியான தொழிலாளர்களைத் தேர்ந்தெடுப்பது. இது மிகச் சிக்கலான முக்கியமான வேலை. வேலைகளின் தகுதிக்கு ஏற்றாற்போல், தகுந்த அறிவு, பண்பு, திறமை, அனுபவம் முதலிய இருக்கின்றனவா? தொழிற் கூடத்தில் உள்ள மற்றவருடன் கூட்டாக ஒன்று சேர்ந்து

நல்லுறவுடன் அன்றாட வேலைகளைக் கவனித்துச் செவ்வனே நடத்திச் செல்லும் ஆற்றல் படைத்தவனு என்றெல்லாம் கண்டுபிடித்துத் தேர்ந்தெடுக்க வேண்டும். அவர்களிடம் இருந்து வாங்கும் விண்ணப்பம் மூலமும், நேரில் வரச் சொல்லி அவருடன் சில நேரம் பேசுவதன் மூலமும் அவரைப் பற்றி நன்கு அறிய வகை செய்ய வேண்டும். இவ்வாறு அறிந்து அவர்களைத் தேர்ந்தெடுத்த பின் வேலைக்குத் தகுந்தாற் போல் அவர்களுக்கு நல்ல பயிற்சியும் அளிக்க வேண்டும். இவற்றிற் கெல்லாம் நல்ல அனுபவம் வாய்ந்த அலுவலர்கள் இப்பகுதியில் இருக்க வேண்டும். மேலை நாடுகளில் உலகப்போர்களின் போது நிறையத் தொழிலாளர்கள் வேண்டி யிருந்தபோது முன் அனுபவம் இல்லாத தொழிலாளர்களைத் தேர்ந்தெடுத்து அவரவர் தொழிற் கூடத்திலேயே வேலை நேரம் தவிர மற்ற நேரங்களில் வேண்டிய பயிற்சியை முறையே கற்றுக் கொடுத்தனர். இதனுல் பலவித நன்மைகளும் முன்னேற்றமும் அவர்கள் அடைந்ததைக் கண்டு நாட்டிலும் அதேபோன்று தொழிலாளர்களுக்கான பயிற்சியைத் தொழிற் கூடங்களிலேயே கொடுக்க நம் அரசாங்கத்தினரும், உற்பத்தித் திறனில் அக்கறை கொண்டவரும் தீவிர நடவடிக்கை எடுத்துக் கொண்டு வருகின்றனர். இதை ஆங்கிலத்தில் Training within the Industry என்று அழைக்கிருர்கள்.

ஒவ்வொரு தொழிலாளியையும் பயிற்சி பெற்ற பின் அவரவர்க்குத் தகுந்த வேலையில் அமர்த்த வேண்டும். இவ்வாறு செய்வதற்கு முன் அந்தத் தொழிற்கூடத்தில் உள்ள எல்லா வகை வேலைகளை யும் பல தரங்களாகப் பிரித்து அமைக்க வேண்டும்

இதை Job evaluation என ஆங்கிலத்தில் கூறுவர். இவ்வாறு தரம் பிரிக்கப் பலவித அடிப்படைகளைக் (factors) கணக்கிலெடுத்துக் கொண்டு ஒவ்வொரு வேலைக்கும் இந்த ஒவ்வொரு அடிப்படையையும் (factor) எந்த அளவு வேண்டும் என நிதானித்துப் பின் அந்த வேலையின் மதிப்பைக் கணக்கிட்டு அதனுடைய தரத்தை நிர்ணயிக்க வேண்டும். சுருக்கமாக, கல்வி அறிவு, அனுபவம், உடல் வலிவு, வேலை செய்யப்படும் இடத்தின் நிலைமை, வசதி முதலியன இந்த அடிப்படைகளில் சேர்த்துக் கொள்ளப்படும். தனி ஒருவரே இவ்வேலையைச் செய்வதில்லை. பொதுவாக மேலாட்சியினரால் இதற்கென ஒரு குழு அமைக்கப்பட்டு அக்குழுவே இதை நிர்ணயிக்கிறது. அக்குழுவில் ஐந்து பேர் அளவில் இருப்பார்கள். இதில் செயலாளராகப் பணியாளர் பற்றிய பகுதி அலுவலரும் (Personnel officer) அத்தொழிலை மேற்பார்வை இடுபவர், பொறியியல் கலை கற்ற ஒருவர், தொழிலாளர் சங்கப் பிரதிநிதி, மேலாட்சியினர் சார்பில் ஒருவர், போன்றவர்கள் பங்கு கொண்டு ஒவ்வொருவரும் தனித்தனியே ஒவ்வொரு வேலையையும் மதிப்பிட்டுப் பின் ஒப்பிட்டுப் பார்த்து ஒரு முடிவிற்கு வருவார்கள். அவ்வாறு முடிவுக்கு வந்த பின் அந்தத் தொழிற் கூடம், தொழிற் கூடம் அமைந்துள்ள இடம், மற்றும் இதர சூழ்நிலைகள் இவைகளைப் பொறுத்து இவர்கள் முடிவு செய்த வேலைகளுக்கு ஈடான விலையைக் கணக்கிட்டு அதிக விலை மதிப்புள்ள வேலையை மேலும் அதற்குக் கீழ் அதற்கடுத்த விலை மதிப்புள்ளதும் இப்படிப் பலப்பல மதிப்புள்ள வேலைகளை ஒரு பட்டியலாகத் தயாரிப்பார்கள். இந்த வேலைப் பட்டியல் தயாரானதும் தேர்ந்தெடுக்கப் பட்டுப் பயிற்சியளிக்கப் பட்ட தொழிலாளிகளின் கல்வி

யறிவு, அனுபவம், உடல் வலிவு இவைகளைப் பட்டிய லுக்குத் தகுந்தவாறு பிரித்துப் பொருத்துவார்கள். அப்படிப் பொருத்தப்பட்டவருக்கு அந்த வேலையின் மதிப்பான விலையை அவருக்கு ஊதியமாக அமைப் பார்கள். இவ்வாறு அமைத்துப் பின் அதிக மதிப்புள்ள வேலை ஒன்றிற்கு ஆள் தேவைப்படும்போது, கீழே உள்ளவர்களுக்கு உயர்வு கொடுக்க வகை உண்டா கிறது. ஒவ்வொரு தொழிற் கூடத்திலும் இந்த முறை யைக் கையாண்டால் அநேக சிக்கல்கள் தாமாகவே தீர்ந்துவிடும். ஆனால் இம் முறை புதியதாக ஆரம்பிக் கப்படும் தொழிற் கூடங்களில் மட்டும் தான் சிரமம் இன்றி உடனடியாக அமுல் படுத்த முடியும். ஏற்க னவே நடந்து வரும் தொழிற் கூடங்களில் இம் முறை புகுத்தப் பட வேண்டுமென்றால் பலவித எதிர் பாராத இன்னல்கள் இருக்கத்தான் செய்யும். ஓர் அள விற்கு விதியை விட்டு இடத்திற்குத் தகுந்தாற்போல் வேலைகளின் தரங்களை மாற்றி அமைத்துக் கூடுமான வரை ஒழுங்கு செய்யத்தான் வேண்டி இருக்கும்.

அடுத்ததாக, வேலைகளின்மதிப்பைக்கணக்கெடுத் துத் தரப்படுத்தியது போன்றே, தொழிலாளர்கள் செயலாளர்களையும், ஒவ்வோர் ஆண்டும் மதிப்பிடத் தேவையாகிறது. ஒவ்வொரு வேலைக்கும் ஒரு விலையை நிர்ணயித்து அதில் ஒரு தொழிலாளியைப் போட்ட பின்பு ஆண்டு தோறும் ஊதிய உயர்வு கொடுக்கிறோம். இந்த உயர்வுக்கும் வேலையின் தரத்துக்கும் நெருங்கிய சம்பந்தம் கிடையாது. அவ்வேலையைச் செய்யும் நபரின் தன்மை, நேர்மை, ஊக்கம், பொறுப்பு போன்ற வைகளைக் கண்டு அவரவர்க்குத் தகுந்த படி முறை யாக உயர்வு கிட்ட வகை செய்வது அவசியம். இதை

ஆங்கிலத்தில் (Merit rating) என்பர். இம்மாதிரிச் செய்வதால் என்றும் நிலையான ஒரு எழுத்துப்பிரதி (record) ஏற்படுகிறது. ஒரு தொழிலாளிக்கும் மற்றத் தொழிலாளிக்கும் உள்ள வித்தியாசம் தெளிவாக எல்லோருக்கும் தெரிகிறது. உயர்வு கிடைக்காதவர்கள் தங்களுக்கு ஏன் கிடைக்கவில்லை எனக் கண்டு அறிந்து மறு ஆண்டு வேண்டிய பண்புகளை அடைந்து தங்களைத் திருத்தி அமைத்துக் கொள்ள முடிகிறது. தொழிலாளிகளுக்கு மேல் உள்ள மேற்பார்வை யாளர்கள், மற்றும் இதர மேலாட்சியினர் தங்கள் விருப்பப்படி விருப்பு வெறுப்புக்கு இடம் கொடுத்து, தவருன முறையில் உயர்வைத் தொழிலாளர்களுக்குள் மனக்கசப்பையும் வித்தியாசத்தையும் உண்டு பண்ணும் வழியில் கொடுத்து தொழிற் கூடத்தின் ஒழுங்குக் கட்டுப்பாட்டையும், நல்லுறவையும் கெடாதபடி தடுக்க மிகவும் உதவுகிறது. இதனுல் நிர்வாகத்தில் உள்ள பல் வேறு நிலையில் இருக்கும் மேலாட்சியினர் அலுவலர், மேற்பார்வையாளர்கள், தொழிலாளிகள் எல்லோரும் தாம் தாம் எந்தத் தகுதி பெற்றுள்ளார்கள் என நன்கு அறிந்து, பழகும் முறை, உறவு இவைகளில் மென்மேலும் நல்ல முறையில் பின்னிப்பிணைந்து தொழிற்கூடத்தின் விரயங்களைக் குறைக்க வழி செய்து திறத்தை அதிகரிக்கின்றது.

இப்பகுதி செயலாற்றும் முறையில் அடுத்த முக்கிய செயல்—ஊதியம் அளிக்கும் முறையும் ஊக்குவிக்கும் கருவிகளும் (Incentives) ஆகும். நமக்குத் தெரிந்த அளவில், அநேகமாய் எல்லாத் தொழிற்கூடங்களிலும் ஊதியம் மாதம் ஒருமுறை கொடுப்பதும், ஆண்டுக்கு ஒருமுறை ஊதிய உயர்வு பெறுவதும் சாதாரணமாக

நடந்து வருகிறது. ஆனால், மேலைநாடுகளில் இதைத் தவிர வேறு முறைகளையும் கையாண்டு வருகின்றனர். போனஸ் முறை என்பது ஒருவகை. உருப்படி விலை அல்லது உருப்படி மதிப்புக்கணக்கு (Piece rate) என்பது இரண்டாவது வகை. இந்த ஒவ்வொரு வகையிலும் அந்தந்த சூழ்நிலைக்குத் தகுந்த அளவில் வேண்டிய அளவு மாற்றங்கள் செய்து பழக்கத்தில் கையாளுகிறார்கள்.

ஒரு மனிதன் ஏன் ஒரு தொழிலுக்குப் போக வேண்டும் என்ற கேள்வியைக் கேட்கும்போது உடனே நமது நினைவிற்கு வருவது "வயிற்றுப் பிழைப்புக்கு" என்பதுதான். இது முற்றிலும் உண்மை. இதைச் சிறிது ஆராய்ந்தால், நாம் முன்பு கூறியபடி மனிதனுக்கு உயிர் வாழ வேண்டியவை அடிப்படைத் தேவைகள் உணவு, உடை, இடம். வாழ்க்கைத்தரம் என்பன ஒவ்வொருவனும் தனக்கு வேண்டிய விரும்பிய வசதிகளைச் செய்து கொள்ளும் திறமை எனவும் கண்டோம். இவைகளை அடைய வழி கையில் பணம் வைத்திருப்பது. ஆகவே, எவன் ஒருவனிடம் பணம் இருக்கின்றதோ அவன் தனக்கும் தன் குடும்பத்தினருக்கும் தன்னிடம் உள்ள பணத்தையொட்டி முடிந்த வசதிகளைச் செய்து கொள்ள முடியும். இதைக் கொண்டு எல்லாத் தொழிலாளிகளும் பணம் ஒன்றே என்றகருத்தில் வேலை தேடி வருவதாய்க் கொள்ளவும் முடியாது. செய்யும் வேலை, வேலை முறை, பக்கத்தில் உடன் உழைப்பவர், தங்களை மேற்பார்வை செய்யும் மேற்பார்வையாளர் மற்றவர், இவர்களுடன் ஏற்படும் தொடர்பு, உறவு மனப்பான்மை; மேலாட்சியினரின் குறிக்கோள்கள் மலாட்சியினர் தங்களை நடத்தும் முறை, வேலை

செய்யும் தொழிற்கூடம், வேலை செய்யும் நேரம், நடைமுறையில் இருக்கும் விதிகள், அங்கு வேலை செய்வதால் உண்டாகும் மன நிறைவு, போன்றவைகள் எல்லாவற்றையும் தனக்குப் பிடித்தவாறு அமைந்துள்ளனவா என அறிந்தே அந்த வேலையில் தொடர்ந்து இருக்க விரும்புகிறான். இவை எல்லாவற்றையும்விட அவன் பெரிதும் விரும்புவது, தன்னை வெறும் ஊதியத்திற்காக உழைக்கும் உழைப்பாளி என்று மட்டும் மற்றவர் கருதாமல், தொழிற்கூடத்தின் வளர்ச்சிக்காகவும், மேம்பாட்டுக்காகவும் பலவிதங்களில் பங்கு கொள்ளும் பலருள் தானும் ஒருவன் எனக் கருத வேண்டும் என்பதேதான். இதன் பின்னரே அவன் வாழ்க்கைத் தரத்திற்கு முக்கியமாய் வேண்டிய பணத்தை நாடுகிறான். மற்றவை ஏதும் இல்லாமல் எவனும் பணம் கிட்டுவதால் நீடித்து நின்று நிலையாக இருக்கவே மாட்டான். அவன் நீடித்திருக்கிறான் என்றால் கூடுமானவரை மேற்சொன்னவைகளில் அவன் முழுதும் இல்லாவிடினும் ஓரளவேனும் நிறைவு காணுகிறான் என்றே கருத வேண்டும். அப்போதுதான் பணத்தைப் பற்றி முழு அளவில் நினைக்க அவனுக்கு இடமுண்டு.

வேறு ஓர் இடத்தில், சிறு தொழிற்சாலைகளில் ஓரிருவர் உள்ள இடத்தில் வேலை நடப்பதுபோல, பலபேர்கள் வேலை செய்யும் தொழிற்கூடத்தில் வேலை நடப்பதில்லை எனக் கண்டோம். இதற்குக் காரணம் முதலாளிக்கும் தொழிலாளிக்கும் உள்ள இடைவெளி, உறவு முறை என்றும் கண்டோம். அவ்வாறு நல்ல முறையில் தொழில் நடக்க வேண்டுமாயின் ஒவ்வொரு தொழிலாளியும் தாங்கள் வேலை செய்யும் தொழிற்கூடம் மற்றவர்களுடையது என்று எண்ணாமல், அது

தங்களுடையதே என் எண்ணும் நிலை வரவேண்டும். இந்நிலை வர வேண்டுமாயின் அவன் மனம் பெரும் அளவில் திருப்தி அடைந்து ஆக வேண்டும். அதற்கு அவன் வேலை செய்யும் இடம், அதைவிட்டு வீடு சென்ருல் வீடு இங்கெல்லாம் அவன் மகிழ்ச்சியாக இருக்கத் தொழிற்கூடத்தை நடத்தும் மேலாட்சியினர்தான் காரணம் என்ற சந்தேகமற்ற தூய எண்ணம் அவன் மனதில் பதிய வேண்டும். இவ்வாறு உண்டாக்கி வைப்பது இந்தப் பணியாளர் பற்றிய பகுதியே ஆகும்.

இதற்காக இப்பகுதி மேலாட்சியினருக்கு அத் தொழிற்கூடத்தில் உள்ள அனைவருக்கும் மாத ஊதியத்தை வாரி வாரி அள்ளிக் கொடுக்க வேண்டும் என்று சொல்லிவிட முடியாது. அப்படித்தான் கொடுத்தாலும் இந்த மன நிறைவும், ஊக்குவிக்கும் சக்தியும் இம்மாதிரி நிறைய ஊதியம் வாங்கும் ஆரம்பகாலத்தில்சில நாடகள் தான் தொழிலாளர்கள் மனத்தில் இருக்கும். சிறிது காலம் சென்றபின் வழக்கப்படி இந்த அதிக ஊதியம் தனது தேவைகளுக்குப் பற்ருத அளவிற்கு வந்து விட்டதை அவன் அறிகிருன். இந்த நிலையில் ஊதியம் அதிகம் பெற்றும், தன்னுடைய அடிப்படைத் தேவைகளுக்கு மேல் அத்தியாவசியமான (Luxurious) தேவைகளை அதிகமாக்கிக் கொள்வதனுல்தான் பணம் பற்றவில்லை என்பதை மறந்து, மேலாட்சியினர் கொடுப்பது பற்றவில்லை என நினைக்க ஆரம்பிக்கிருன். ஊதியம் அதிகம் பெற ஆரம்பித்த நாளில் இருந்து, இந்த எண்ணம் உண்டாகும் நாள்வரை அவன் தனது வேலையில் ஊக்கமுடன் மனப்பூர்வமாக வேலை செய்ய எண்ணுகிருன். இந்த நாட்களுக்குப் பின் அந்த ஊக்கம் குறைய ஆரம்பித்துவிடுகிறது. இதை மேலே

காட்டினர் மனோதத்துவ வழியில் பல ஆராய்ச்சிகளைச் செய்து இதை ஊர்ஜிதம் செய்துள்ளனர். மேலாட்சியினர் எந்த அடிப்படையில் ஊதியம் கொடுக்கிறார்களோ அந்த அடிப்படைப் பலன் வெகுநாள் கிட்டுவதில்லை. இது மனிதர்களாகிய நம் எல்லோரிடத்தும் உள்ள குறைபாடு. இதனால் பழையமாதிரி ஊக்கம் குன்றி, தொழிற்கூடத்திற்கு இயந்திரம் போன்று மணிக்கணக்குக்காகச் சென்று ஓர் அளவு செய்ய வேண்டிய வேலையைச் செய்து (இந்த அளவு வேலை அதிக ஊதியம் பெற ஆரம்பித்த புதியதில் முழு ஊக்கத்துடன் செய்த வேலையைவிட மிகக் குறைவானது) திரும்புகின்றனர். மாதச் சம்பளம் வாங்கும் அநேகமான தொழிற்சாலைகளிலும், அலுவலகங்களிலும் நடக்கும் சர்வ சாதாரண காட்சி இது. ஊதிய உயர்வு கிடைக்கும் மாதத்திற்கு முன்னும் பின்னும் அனைவரும் மிக ஆர்வத்துடன் வேலை செய்வதும், அதற்குப் பின் நாட்கள் ஆக ஆக இந்த ஆர்வம் குன்றிக் குறைவதையும் நாம் கண்கூடாகக் காண்கிறோம்.

இப்படியாக இந்த ஆர்வம் குன்றாமல இருக்கவும் மேலாட்சியில் உள்ளவர்களுக்குக் கொடுக்க மனம் வருவதில்லை என்ற குறைகூவல்களைக் குறைப்பதற்காகவுமே முன்னோர் இடத்தில் கூறிய போனஸ் முறையையும், உருப்படி வீத மதிப்பு முறையையும் கடைப் பிடிக்கின்றனர். இதனால் என்ன பயன் எனக் கீழே காண்போம். போனஸ் முறையில் குறிப்பிட்ட நேரத்தில் அதாவது தினம் 8 மணி நேர உழைப்பில் இத்தனை அளவு வேலைகள் செய்ய வேண்டும் என்று இருந்தால் மாதச் சம்பளம் இவ்வளவு என்று வாங்கிக் கொள்கிறார்கள். அதற்குமேல் ஊதியம் வேண்டுமாயின்

குறைந்தபட்ச அளவுக்குமேல் வேலை செய்தால், அப்படிச் செய்யப்பட்ட வேலைகளை எல்லாம் சேர்த்து வாரக் கணக்கிலோ மாதக் கணக்கிலோ இவ்வளவு அதிக ஊதியம் என நிர்ணயித்துக் கொள்வது, இந்த ஊதியம் வாங்கும் ஊதிய அளவில் அதே வீதமாகவும் அல்லது அதைவிட அதிகமாகவோ அல்லது குறைந்தோ இருக்கும். அந்தந்த மேலாட்சி தொழிற்கூடம் இவைகளைப் பொறுத்து இருக்கும். மற்றதில் மாத ஊதியமே வேறு வகையில் கணக்கிடப்படுகிறது. ஒவ்வொரு நாளும் செய்யும் உருப்படிகள், அவரவர் கணக்குக்குக்கொண்டு வரப்படுகின்றன. ஒவ்வோர் உருப்படிக்கும் இவ்வளவு விலை என நிர்ணயித்து அந்தத் தொழிலாளி செய்த எல்லா உருப்படிகளுக்கும் உண்டான மதிப்பையும் விலையையும் அவ்வார அல்லது மாதக் கடைசியில் கணக்கிட்டு ஊதியமாய்க் கொடுப்பார்கள். ஆனால், ஒரே ஒரு நிபந்தனை. அந்தந்த வேலையின் தரத்தையொட்டி எந்த ஒரு தொழிலாளியும் குறைந்தபட்ச அளவு ஒரு தொகையை அவனுக்குக் கிடைக்க வேண்டும் என்ற ஒரு சட்டத்தை மேலாட்சியினரோ அல்லது தொழிலாளியோ மறந்துவிடக்கூடாது. இந்தக் குறைந்த பட்சத் தொகைக்குமேல் வருமானம் வரச்செய்யவே இந்தப் போனஸ் திட்டமும் உருப்படி வீத மதிப்புத் திட்டமும் கையாளப்படுகின்றன. இவற்றில் அந்தந்தத் தொழிலாளியும் அவரவர் திறமையைப் பொறுத்தும் ஊக்கத்தைப் பொறுத்தும் எந்த அளவிற்கு அதிக உழைப்புக் கொடுத்து அதிக உருப்படிகளைச் செய்கின்றனோ அவனுக்கு அடிப்படைச் சம்பளத்தைவிடத் திருப்திகரமான முறையில் அதிகத் தொகை கிடைக்க வழி உண்டாகிறது. ஊக்கமுடன் வேலை செய்ய முடியாதவர்கள் அடிப்படைச் சம்பளத்துடன் மன நிறைவு

அடைய வேண்டியதுதான். பொதுவாகப் பார்க்கும் போது எந்தத் தொழிலாளியும் அடிப்படைச் சம்பளத் தோடு திருப்தி அடைவதில்லை. எந்த வகையிலும் தன்னுடைய நேரத்தை வீணாக்காமல் கூடுமானவரை அதிகம் செய்து அதிகப் பணம் பெற்றுத் தன்னுடைய தன் குடும்பத்தினுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த் திக் கொள்ளவே முயல்கிறான். இதைப் பெரும்பாலான தொழிலாளர்கள் வரவேற்கிறார்கள். அவர்களின் மனத் தில் உண்டாகும் ஊக்கம் என்றும் குன்றாமல் இருக்க இது சிறந்த முறையாக அமைகிறது.

ஆனால், சில இடங்களில் சிறு மனப்பான்மை கொண்ட ஒரு சில மேலாட்சியினர் இந்தத் திட்டத் தைத் தங்களுக்குச் சாதகமாகவும் தொழிலாளர் களுக்குப் பாதகமாகவும் உபயோகிக்கின்றனர். அதே சமயம் பொறுப்பும், நேர்மையும் அற்ற சில தொழி லாளிகள் அதிகக் கஷ்டப்படாமலேயே கொடுக்கும் அடிப்படைச் சம்பளத்துக்குக் கூடியமட்டும் குறை வான வேலையை மேலாட்சியினர் நிர்ணயிக்கட்டும் என எண்ணி, வேண்டுமென்றே குறைத்துச் செய்து பின் தங்களுக்குச் சாதகமாகச் சிரமம் அற்ற அளவில் வேலை செய்து நிறையப் பணம் சம்பாதிக்கத் திட்டமிடுகின் றனர். நல்ல மேலாட்சியாய் இருந்தால், இவ்விரண்டு நிலைகளையும் தவிர்த்து நல்ல உறவு முறையில், முறை யான அளவில் செய்ய வேண்டிய வேலை, அவ் வேலைக் குத்தகுந்த ஊதியம் அமைக்க வகை செய்வர். இவ் வகையில் பணியாளர் பகுதிக்கு உகந்தவகையில் உதவி செய்யத் தொழில் ஆராய்ச்சிப் (Work study) பகுதி பெரிதும் உதவி செய்ய இடமுண்டு.

மேற்கூறிய இவைமட்டும் இன்றி நல்லுறவை வளர்க்கச் செய்ய வேண்டியவைகள், தொழிலாளர்கள்

த்தங்கள் குறைகளை மேலிடத்துக்கு எந்தவிதத் தடங்கலும் இன்றித் தெரிவிக்க வசதியும், குறைகளை நடுநிலைமையில் இருந்து கேட்டறிந்து தக்க நடவடிக்கை எடுக்க வகை செய்து, கூடுமானவரை மேலிடத்துக் குறிக்கோள்களை நன்கு அவர்களுக்கு எடுத்துச் சொல்லவும், நிர்வாகத்தில் அவர்களுக்குப் பங்கு கொள்ளவும், பொழுதுபோக்கு, அபாயத் தடுப்பு முறைகள் (Safety measures), தொழிலாளர் நல வகைகள் (Welfare measures) போன்ற எல்லா வகையிலும் கண்ணுங் கருத்துமாக இருப்பது இப்பகுதியில் இருக்கும் அலுவலரின் கடமையாகும்.

மேலாட்சியினருக்கு முன்னொரு இடத்தில் கண்டவாறு தொழிற்கூடம் நல்ல முறையில் நடத்த உதவும் பல பகுதிகளில் ஒரு சில முக்கியப் பகுதிகளைமட்டும் இங்கே சுருக்கமாகக் கண்டோம். மற்றப் பகுதிகளைப் பற்றி இங்குக் குறிப்பிடாததால் அவைகள் முக்கியம் இல்லை என்றோ, தொழிற்கூட வளர்ச்சிக்கு அவசியம் இல்லை என்றோ கொள்ளக்கூடாது. எப்படிப் பல துறைகளில் இருப்போர் உயர் மேலாட்சிக்கும் தொழிலாளருக்கும் இடையே இயங்க வேண்டும், மேலாட்சியின் குறிக்கோள்களைச் செயல்படுத்தப் பணிபுரிய வேண்டும் என்பதைக் காணவே இவை காட்டப்பெற்றன.

இவை எல்லாம் சரிவர இயங்குதற்கு முக்கியமாய் ஊக்கம் ஊட்ட வேண்டியது மேலிடத்திலிருந்துதான் வர வேண்டும். தொழிலாளி, அலுவலர், தொழிற்கூடம், சமூகம், நுகர்வோர், நாடு இவை எல்லாம் வளம்பெற்று முன்னேற்றம் அடைய, மேலாட்சியில் உள்ளோர் பெரிதும் பொறுப்பேற்று மற்ற எல்லோரையும் விட நிறைய ஊக்கத்துடனும், நிதானத்துடனும் இயங்க வேண்டும்.

## 7. வளர்ச்சிக்குரிய அடிப்படைகள்

இருபதாம் நூற்றாண்டிற்கிடையில் உலகில் பல நாடுகள் அடிமைத்தளையிலிருந்து விடுதலை பெற்று விட்டன. இரண்டாம் உலக யுத்தத்திற்குப் பிறகே உலகெங்கணும் பல துறைகளில் முன்னேற்றங் காணப்படுவதாக அறிகிறோம். அவற்றுள் தொழிலியல் முன்னேற்றமும் ஒன்று. இத் தொழில் முன்னேற்றத்தில் சில நாடுகள் விரைந்து முன்னேறுவதையும் சில மெல்லச் செல்வதையும் அறிகிறோம். முன்னேற்றத்தில் வேகங் காணும் நாடுகளில் இந்தியாவும் ஒன்றே. உரிமை பெற்றிருந்த மேலைநாடுகளும் பிறவும் இயல்பாகவே பெற்றிருந்த முன்னேற்றத்தோடு, இரண்டாவது உலகப் போருக்குப் பின் பெரு முன்னேற்றங் கண்டுள்ளன. ஆனால், அடிமை வாழ்வில் உழன்று போருக்குப் பின் வெற்றி கண்ட நாடுகளில் இந்தியா தான் தொழிலியலில் விரைந்த முன்னேற்றம் காணும் நாடு என்பது ஆய்வாளர் கருத்து. இந்த விரைவான முன்னேற்றத்திற்குரிய காரணங்கள் யாவை ?

நாட்டில் உள்ள இயற்கை அமைப்பும், அதன் சூழலில் அமையும் பல மூலப் பொருள்களும் தொழில் வளர்ச்சிக்கு அடிப்படைக் காரணங்களாக அமைகின்றன. பரந்த பாரதநாடு பல்வேறுவகைத் தட்ப வெப்ப நிலைகளை உடையது. என்றும் மறையாத வெள்ளிய பனிச் சிகரங்களை உடைய இமயமும் கொடிய நெருப்பை அள்ளி வீசும் கோடையை அனுபவிக்கும் தென்னாடும் இவற்றுக்கிடையில் மிக்க குளிரிலும் மிகுதியான வெப்பத்திலும் தொல்லையுட்படும் மத்திய நிலப் பகுதியும் இந்நாட்டில் உள்ளன. இந்நாட்டில் வற்றாது பெருக்கெடுத்தோடும் பேராறுகளும் ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும் ஆறுகளும் உள்ளன. பொன்சுரங்கங்களும், இரும்புக்கனிகளும், எண்ணெய்க் கிணறுகளும் நிலக்கரிச் சுரங்கங்களும், பிற உலோகச் சுரங்கங்களும் நாட்டில் பல பகுதிகளிலும் உள்ளன. இவற்றின் அடிப்படையே நாட்டின் தொழில்வளத்தின் அடிப்படைகளாக அமைகின்றன. இவை அனைத்தும் இருந்தும் மக்களோ அவர்தம் அரசாட்சியோ இவை பற்றிக் கவலைப்படாமல் இருந்தால் தொழில் முன்னேற்றம் காண்ப தெங்கே?

எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே" (புறம்:187)

என்று இரண்டாயிரமாண்டுகளுக்கு முன்னமேயே தமிழ்நாட்டுப் புலவர் ஒருவர் நாட்டுவளத்துக்கு மக்கள் தாம் காரணம் என்பதைச் சுட்டிக் காட்டிச் சென்றுள்ளார். வற்றாத வளம்பெற்ற நாடாக இருந்தாலும் அந்நாட்டு மக்கள் சோம்பித்திரிபவர்களாக இருப்பார்களாயின் அந்த நாடு எந்தத் துறையிலும் முன்னேற முடியாது. வளங்கள் குறைந்திருக்கும் நிலையிலும்

பல்வேறு தொழில்துறைகளில் சிறந்த முன்னேற்றம் கண்டிருக்கும் நாடுகளை இன்றும் நாம் உலகில் கண்டு போற்றுகிறோம். அவற்றின் வளர்ச்சிக்குக் காரணம் மக்கள் உழைப்பும் உறுதியுமேயாம். ஆசிய நாட்டின் கீழ்க் கோடியிலுள்ள சிறு ஜப்பான் தீவும் இரு போர்களால் இல்லையோ என்னுமாறு அழிவுற்ற ஜெர்மனி நாடும் எப்படித் தொழில் வளத்தில் முன்னேறின என்பதை நினைக்க நமக்குப் பெருவியப்பாக இல்லையா? நாட்டு எல்லை சிறியதாயினும் மூலப் பொருள்கள் அரியதாயினும் அந்நாட்டு மக்களது மூளையும் உடலும் ஒருசேரத் தொழில்படத் தொடங்கின் அந் நாட்டின் உயர்வை யாராலே கணக்கிட முடியும்? இதைத்தான் இரண்டாயிரமாண்டுகளுக்கு முன்னரே தமிழ்ப் புலவர் விளக்கிச் சொல்லிவிட்டுச் சென்றார். நாட்டு மக்கள் எந்தவகையில் செயல் திறனும் உள உரமும் பெற்றவர்களாக உள்ளார்களோ அவ்வழியிலேயே அந்த நாடு பெயர் பெற்று ஓங்கும் என்பதே அவர்தம் அடிகளின் பொருள். இதில் 'ஆடவர்' என்று ஆணினத்தைமட்டும் குறித்தாலும் பெண்டிரையும் அந்த எல்லையில் அமைத்தே அவ்வாறு சொல்லியுள்ளார். தமிழில் அவ்வாறு சொல்லுவதற்கு 'ஒரு மொழி ஒழி தன்இனம் கொளற்கு உரித்தே' என்ற இலக்கணம் இருக்கின்றதல்லவா!

தொழில் வளத்துக்கு நாட்டு மக்களே அடிப்படைக் காரணமாவார்கள் என்று கண்டோம். இன்று இந்தியாவில் மக்கள், உணர்ச்சி பெற்றுள்ளார்கள். அதற்கேற்ப மக்களாலே அமைக்கப் பெற்ற அரசாங்கமே இன்று நாட்டில் தொழிற் படுகின்றது. தனியாட்சியோ அல்லது அடிமை வாழ்வோ இன்று நாட்டிலில்லை. முடி

சார்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரும் முடிவிலொரு அடிவிட்டு ஒதுங்கி விட்டனர். எனவே பாரதி கண்ட 'எல்லாரும் இந் நாட்டு மன்னர்' என்ற கனவு அவன் செத்துக் கால் நூற்றாண்டுக்குப் பின்னே பலித்தது. அவன் இட்ட விதையில் தோன்றிய மரத்தின் கனிகளை நாம் நுகர்கின்றோம். நம் நாட்டில் மக்கள் ஆட்சி மலர்ந்தால் எந்தெந்த வகையில் தொழில் வளம் பெறும் என அவன் எக்காளமிட்டுப் பாடுகின்றான்.

'குடைகள் செய்வோம்—உழு—படைகள்—செய்வோம்
கோணிகள் செய்வோம்—இருப்—பாணிகள் செய்வோம்
நடையும் பரப்புமுணர் வண்டிகள் செய்வோம்
ஞாலம் நடுங்க வரும் கப்பல்கள் செய்வோம்'

என்றும் இன்னும் பலவாறாகவும் அவன் கண்ட கனவே பிரம்பூர் ரெயில் பெட்டித் தொழிற்சாலையாய், விசாகை கப்பற் கட்டும் தளமாய், பெங்களூர் விமானத் தொழிற் சாலையாய், பிலாய் உருக்காலையாய், சித்தரஞ்சன் எஞ்சின் தொழிற்சாலையாய், நெய்வேலி கரிச்சுரங்கமாய், ஆவடி ஆணித் தொழிற் சாலையாய் இன்னும் பல்வேறு வகையாய் உருப்பெற்று இன்று நனவாக நமக்குக் காட்சி தருகின்றன.

ஒரு நாடு நலல் தொழில் வளம் பெற்றதாக விளங்க வேண்டுமானால் அதற்கு அந்நாட்டு ஆட்சியே மூலகாரணமாக – அடிப்படையாக—அமைகின்றது. பரந்த பாரத நாட்டிலும் நம் தமிழ் நாட்டிலும் நாமே நம்மை ஆண்டு கொள்ளும் மக்களாட்சி மலர்ந்துள்ள காரணத்தால் எல்லா மக்களும் தொழில் வளர்ச்சிக்குக் காரணமாக அமைந்துள்ளார்கள். விடுதலை பெற்ற சில ஆண்டுகளுக்குள்ளாக ஐந்தாண்டுத் திட்டங்களை அரசாங்கம் தீட்டிற்று. இவ்வாறு ஏழாண்டுத் திட்ட

மியற்றிச் செயல் புரிந்து முன்னேற்றம் கண்டுவரும் ரஷ்யா போன்ற நாடுகள் இன்று உலக அரசுகளில் சிறந்த வல்லரசுகளாக விளங்குவதைக் காண்கின்றோம். எனவே எல்லாவற்றிற்கும் திட்டங்கள் தேவை. வீட்டி லிருந்து நாட்டு ஆட்சி வரை திட்டங்களே செம்மை யாகத் தொழில்பட உதவுவன. 'எண்ணித் துணிக கருமம்' என்று வள்ளுவர் எதையும் எண்ணி உணர்ந்து திட்டமிட்டே செயலாற்ற வேண்டுமென வற் புறுத்துகின்றார். எனவே எல்லாச் சிறப்புகளுக்கும் திட்டம் அடிப்படை. தமிழ் நாட்டில் - இந்திய நாட்டில் தொழில் வளத்துக்கு அடிப்படைக் காரணம் திட்டங் களேயாம். இத் திட்டங்களின் அடிப்படைகளைப் பற்றி வாய்ப்பு உளதேல் வேறு தனியாகக் காணலாம்.

திட்டங்கள் தொழிலியல் அடிப்படையாயினும் இத்திட்டங்களை உருவாக்கவும், தொழிற்படுத்தவும் அரசாங்க ஆக்கமே முதல் அடிப்படையாகும். பரந்த பாரதத்திற்கு இணைந்த திட்டங்களே தீட்டப் பெறு கின்றன. இமயந் தொடங்கிக் குமரிவரையி லிருக்கும் பல்வேறு மாநில மக்களின் மன நிறைவுக்கு ஏற்ற வகையில் திட்டம் தீட்டப் பெறுதல் வேண்டும். திட்டக் குழுவினரிடம் இந்த ஆராய்ச்சிகளை யெல்லாம் ஒப்படைத்துள்ளார்கள். அவர்களும் பல்வகைகளில் ஆராய்ச்சி செய்து திட்டங்களைத் தயாரிக்கின்றனர். இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் முடிந்து மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் நாம் நிற்கின்றோம். இவ்வாறு திட்டங்கள் தீட்டப் பெறும்போது எல்லா மாநிலங்களுக்கும் ஏற்ற வகையிலோ அன்றி மன நிறைவு கொள்ளும் வகையினுலோ திட்டம் தீட்டமுடிவ தில்லை. எனவே நாட்டில் சில பாகங்களில் திட்டங்களைப்

பற்றிய வெறுப்புணர்ச்சியும் மாறுபட்ட கருத்துக்களும் உண்டாகின்றன.

தமிழ் நாட்டைப் பொறுத்தவரையில் கடந்த இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் தமிழ் மக்கள் பலவற்றை எதிர்பார்த்தனர். விழுப்புரம் வரையில் மின்சார ரெயில் வசதி, சேலம் இரும்புத் தொழிற்சாலை, தூத்துக்குடி ஆழ்கடல் துறைமுகம், சேது சமுத்திரத் திட்டம், சில சிறு துறை முகங்களின் விஸ்தரிப்பு, சில புதிய தொழில்களுக்கு வாய்ப்பு, காவிரிநாட்டு எண்ணெய் வள ஆய்வு போன்ற பலபெரும் வளர்ச்சிகளை மக்கள் எதிர்பார்த்தனர். ஆனால் அவை ஒவ்வொரு திட்டத்திலும் எடுக்கப் பெற்றதாகச் சொல்லப் பெறுகின்றனவே ஒழியச் செயல்பட வில்லை. இவற்றுள் ஒரு சில இந்த மூன்ருவது திட்ட காலத்தில் கட்டாயம் நிறைவேற்றப் பெறும் என்று இன்றைய ஆட்சியாளர் உறுதி கூறுகின்றனர். திட்ட அடிப்படையில் பெருகி வளரும் ஒரு காட்சியை நெய்வேலியிலேயே காண்கின்றோம். சேலம் இரும்பு உருக்கு ஆலை தொழிற் படத்தக்க நம்பிக்கை உண்டு என்பதை இன்றையப் பெருந்தொழில் அமைச்சர் திரு. சுப்பிரமணியம் அவர்தம் அறிக்கையில் அறிகிறோம். எனவே நாட்டில் எத்தனை இயற்கை வளமிருந்தாலும் அரசாங்கத் திட்டமே முதல் அடிப்படையாக அமைகின்றது என்பதை நாம் உணர்தல் வேண்டும். இன்றைய அரசாங்கம் மக்கள் அரசாங்கமாக இருப்பதால் மக்கள் மனமறிந்து தமிழ் நாட்டுக்குத் தேவையான பெருந்தொழில், சிறு தொழில்களை வளர்க்கும் பணியில் ஆட்சியாளர்கள் பின்னடைவார்களானால் அடுத்த தேர்தலில் மக்கள் மனம் மாறும் என உணர்ந்து தக்க வகையில் அவர்கள் செயலாற்றுவார்களென எதிர்பார்க்கலாம். எனவே

வரும் சில ஆண்டுகளில் தமிழ் நாட்டில் எதிர் பாராத அளவுக்குச் சில பெருந்தொழில் சிறு தொழில்கள் இடம் பெற்று நாட்டுத் தொழில் வளத்தைச் சிறக்க வைக்கும் என்ற நம்பிக்கை உண்டாகிறது.

தொழில் வளர்ச்சிக்குரிய மூலப்பொருள்களை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டு செல்லத் தக்க போக்கு வரவு வசதிகள் ஓரளவு உள்ளன என்றாலும், அவை தொழில் வளர்ச்சியின் அடிப்படையை நிறைவேற்றும் அந்தப் பெருமளவில் வளரவில்லை. மற்றும் அதனால் மூலப் பொருள்களின் விலையும் (போக்கு வரத்துச் செலவினால்) அதிகரிக்க உற்பத்திப் பொருள்களின் விலையையும் உடன் கூட்ட வேண்டியுள்ளது. இன்றைய உலகச் சந்தையில் உள்ள போட்டி மனப்பான்மையில் நல்ல உழைக்கத் தக்க பொருள்களைக் குறைந்த விலைக்குக் கொடுத்தால் தான் வாணிபம் பெருகி அதன்வழி நாட்டின் கைத்தொழிலும் நலம் பெற்றோங்கும். எனவே மூலப் பொருள்கள் கிடைக்கும் அந்தந்த இடங்களுக்கருகே அவ்வவற்றின் தன்மைக்கும் தகுதிக்கும் ஏற்ற தொழில்களைத் தொடங்குதல் நலம் பயப்பதாகும். இந்த நிலையில் நெய்வேலியின் நிலக்கரியைத் தமிழ் நாடு எதிர் நோக்கியுள்ளது. அதுவும் பயன்தரத் தொடங்கியுள்ளது என அறிகின்றோம்.

தமிழ் நாட்டில் தொழில் வளர்ச்சிக்குரிய மூலப் பொருள்கள் அதிகம் இல்லை. என்றாலும் ஓரளவு நாம் இன்றும் வளர்ச்சியடையக் கூடிய பொருள்கள் இல்லை என்றும் சொல்ல முடியாது. தமிழ் நாட்டுக் காட்டு வளம் விரிந்த அளவில் இல்லை. ஒருவருக்கு 16 ஏக்கர் வீதமே தமிழ் நாட்டில் காடுகள் உள்ளன. ஆனால்

பரந்த இந்தியா முழுவதுக்கும் 35 ஏக்கராவாகக் கணக் கிடப் பெற்றுள்ளது. அக்குறைந்த காட்டுவளத்திலும் மூங்கில், வாட்டல் போன்ற தொழில் வளர்ச்சிக்கு ஏற்ற மரங்களும் பிறவளங்களும் குறைவாக உள்ளன. எனவே காட்டுவளம் கொண்டு பெருக்கும் சில தொழில் கள்- காகிதம் செய்தல் போன்ற தொழில்கள் — தமிழ் நாட்டில் அதிக இடம் பெற வாய்ப்பு இல்லை.

கனிப் பொருள்களிலும் தமிழ்நாட்டு வளம் பெரு மளவில் இல்லை எனலாம். இந்திய நாட்டில் பிற பகுதி களில் காணப்பெறும் இரும்புக் கனிப் பொருள் போன்ற சிறந்த மூலப் பொருள் தமிழ் நாட்டில் கிடைக்கவில்லை. இத்துடன் கரியைக் கொண்டுவரும் பெருஞ் செலவும் பிறவும் இரும்பு உருக்காலையை இங்கே வளர்க்கும் வாய்ப்பைத் தள்ளிக்கொண்டே செல்லுகின்றன. எனி னும், சேலத்து இரும்புக் கனியும் நெய்வேலி நிலக் கரியும் பெறுகின்ற காரணத்தால் இந்த மூன்றும் திட்ட காலத்திலேயே சேலத்திலோ அன்றி நெய்வேலி யிலோ 'இரும்பு ஆலை' தொழிற்படத் தொடங்கலாம்! அல்லது அதற்குரிய வேலைகளாவது முடிக்கப் பெற லாம். ஆயினும், அத்துறையில் வல்லவர்கள் இந்திய நாட்டின் பிற பகுதிகள் வளரும் அத்துணை அளவில் இங்கே இரும்பு உருக்காலை வளராது என்று கூறுகின் றார்கள். ஒரு சில ஆண்டுகள் கழித்தே அந்த முடிவு சரிதானா என்று நாம் ஆராய வேண்டும். அலுமியத் தொழிலுக்கும் போதிய வாய்ப்பு இல்லை. இன்று சேலத்தில் அலுமினியத் தொழிற்சாலை அமைந்துள் ளது. எனினும், தமிழ் நாட்டில் 20,000 டன் அளவில் தான் அதன் மூலப் பொருளும் உள்ளது எனக் கணக் கிட்டுள்ளனர். இவை அனைத்தும் நெய்வேலி நிலக்கரி வளத்தை அடுத்தே வளர வேண்டியுள்ளன.

இவை தவிர சிமிட்டி உற்பத்திக்குத் தேவையான சுண்ணும்புக் கல்லும் பிறவும் (Magnesite & Fireclay) கண்ணுடிக்கு வேண்டிய மூலமும், பாண்டங்கள் செய்யும் களி மண்ணும், வீடமைக்கும் செங்கல் மண்ணும் தமிழ் நாட்டில் உள்ள சிறந்த மூலப் பொருள்களாகும். கடல் வழிப்பெறும் பொருள்களின் மூலம் இராசயனத் தொழில்கள் வளர வாய்ப்பு உண்டு.

இந்த மூலப் பொருள்களைத் தவிரத் தொழில் வளர்ச்சிக்கு அடிப்படையான மக்கள் உழைப்பு தமிழ் நாட்டில் அதிகமாக உண்டு. பரந்த பாரத நாட்டிலும் அண்டை நாடுகளாகிய ஆந்திரம், கேரளம், கன்னட நாடுகளிலும் உள்ள பெருந்தொழில் நிலையங்களிலெல்லாம் பெரும்பாலான தமிழ் மக்கள் தொழிலாற்றுவதை நாடே அறியும், உயர்ந்த பொறியியல் வல்லுநர் தொடங்கிச் சாதாரண ஏழைத் தொழிலாளி வரை எண்ணற்ற வகையில் தமிழ் நாட்டு மக்கள் தொழிற்சாலைகளிலும் தொழிற் பேட்டைகளிலும் நாடெங்கும் பணியாற்றுகின்றனர். இலங்கை, பர்மா, மலேயா, தென் ஆப்பிரிக்கா முதலிய இடங்களிலிருந்து இன்று தமிழ் மக்கள் விரட்டப்படினும் அந்நாடுகளையெல்லாம் 'காடு கொன்று நாடாக்கி' வளம்படுத்திய பெருமை தமிழருக்கு உண்டு என்பதை யாரே மறுக்கவல்லார்? அப்படியே 'எங்கெங்குத் தொழில் உண்டோ அங்கங்கு அயராது அலுக்காது உழைப்போம்' என்று உறுதிகொண்டு உழைக்கும் தமிழ் மக்கள் தம் சொந்த நாட்டிலே சோம்பி இருப்பார்களென்று எண்ண முடியுமா? மேல் வாரியாக நோக்கும்போது இன்றைய நிலையில் சோம்பித்திரியும் தமிழ் மக்களின் எண்ணிக்கை சற்றே அதிகமாகத் தெரிந்தாலும் வாய்ப்பும் வசதியும் இல்லாத காரணமே அவர்களை இந்த நிலைக்குக் கொண்டு

வந்துள்ளது என்பதை நாடு உணர வேண்டும். எனவே, அரசாங்கத்தார் இயற்கை மூலப் பொருள்களை இல்லை என்று குறைப்பட்டுப் பல்வேறு தொழில்களை நிறுத்தாது மக்கள் தொழில் மூலத்தை அடிப்படையாகக் கொண்டு பல்வேறு தொழில்களை ஆரம்பிக்க வாய்ப்பு இருக்கின்றது. மூலப் பொருள்களைக் கொண்டு வரும் செலவு அதிகமாகி அதனால் உற்பத்திப் பொருள்கள் விலை ஏறிவிடும் எனவும் அஞ்ச வேண்டியதில்லை. இந்தியா முழுவதிலும் தமிழ் நாட்டில்தான் மக்கள் தங்கள் தொழிலுக்காகப் பெறும் ஊதியம் மிகக் குறைந்த அளவில் உள்ளதை யாவரும் அறிவர். அந்த அடிப்படையில் அனைத்திந்திய ரெயில்வேயில் அமைந்துள்ள சம்பள ஏற்றத்தாழ்வு இன்றும் நம் நாட்டில் உள்ளதை யாவரும் அறிவர். எனவே, இவர்தம் உழைப்பு முதலீடு பொருள் வருத்தும் முதலீட்டைச் சரி செய்வதோடு இவர்தம் முயற்சி பொருள்களைப் பெருமளவில் உற்பத்தி செய்யவும் உதவும்.

தொழில் வளர்ச்சிக்கு மற்றொரு இன்றியமையாத அடிப்படை பொருள். அரசாங்கம் மக்கள் அடிப்படையிலோ மூலப் பொருள் அடிப்படையிலோ அன்றி வேறு அடிப்படைகளிலோ இந்த நாட்டுத் தொழில்களையும் அவற்றின் ஆக்க வளர்ச்சிகளையும் பிறவற்றையும் உறுப்பு நாடுகளுக்கிடையில் பகிர்ந்து கொடுக்கின்றது. அந்த அளவைப் பெருக்க வேண்டுமென ஒவ்வொரு திட்டக் காலத்திலும் தமிழ்நாட்டு அரசாங்கம் மத்திய அரசாங்கத்தை மன்றாடிக் கேட்டுக் கொண்டபோதிலும், இந்த அரசாங்கம் கேட்ட அளவில் என்றும் மத்திய அரசாங்கம் பொருளை ஒதுக்கவில்லை என்பதை நேரில் கண்டுவருகிறோம்.

எனவே, தமிழ்நாட்டு அரசாங்கத்துக்குத் தேவையான தொழிலுக்கு வேண்டிய அடிப்படை மூலதனம் கிடைக்க வில்லை. என்றாலும் தமிழ்நாட்டுச் செல்வர்கள் தேவைக் குமேலாக முன்னின்று பொருளைத் தொழில் துறை யில் செலுத்தத் தயங்குவதில்லை. அனைத்திந்தியத் தொழில் வளர்ச்சி அடிப்படையில் பதினைந்தாண்டு களுக்குச் (1956—71) சுமார் 2,000 கோடி ரூபாய் தமிழ் நாட்டுத் தொழில் வளர்ச்சிக்குத் தேவை என்று கணக் கிட்டுள்ளார்கள்.

| | |
|---|---|
| அடிப்படை (பொதுவான 1 : 1 முறையில்) | 200 கோடி |
| தொழில் (பெருந் தொழில்கள்) | 500 ,, |
| போக்குவரவு (சாலை, கப்பல், துறைமுகம் முதலியன) | 350 ,, |
| மின்சாரம் (அனல், நீர்) | 150 ,, |
| பிற (வீடு, கல்வி, நலத்துறை முதலியன) | 800 ,, |
| | 2000 கோடி |

கடைசியில் உள்ள பகுதியில் தொழில் வளத்துக்குரிய எல்லாத் தேவைகளும் அடக்கப் பெற்றுள்ளன. இந்திய அரசாங்கம் இரண்டாம் மூன்றும் ஐந்தாண்டுத் திட்டங் களில் ஒதுக்கியுள்ள தொகையும் இனி இந்த அடிப் படையில் நான்காம் ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒதுக் கப் பெறும் தொகையும் இந்த அளவுக்குச் சரி செய்யுமா என எண்ணிப் பார்த்தால் முடியாது என்றே தோன் றும். ஆயினும், இதற்கு மேலாகத் தமிழ்நாட்டுச் செல்வர்கள் தத்தம் பொருளை நாட்டுத் தொழில் வளம் பெருகும் வகையில் பயன்படுத்துகிறார்கள் என்பதைக் காண மகிழ்ச்சி பிறக்கிறது. பல்வேறு அரசாங்கக் கட்டுப்பாடுகளும் அரசியல் கட்சிகளின் இடையீடும் தொழில் சிக்கல்களும் தொழிலாளி முதலாளி வேறு

பாட்டுணர்வு போன்றவையும் நாட்டில் இருந்த போதி லும் தமிழ்நாட்டுப் பெருஞ் செல்வர்கள் அக் குறைபாடு களெல்லாம் மெல்ல மெல்ல நாட்டிலிருந்து மறையும் வகையில் திறம்படத் தொழில் நடத்தும் வகையில் தங்கள்பொருளைத் தொழில்வளர்ச்சியில் செலவிட்டுச் சிறந்த முறையில் நாட்டுக்கு உதவித் தாங்களும் சிறப் பெய்துகிறார்கள். இந்தியாவிலேயே தனியார் தொழில் துறைக்குச் செலவிடும் பகுதி தமிழ்நாடே என்று கணக்குச் சொல்லுகின்றது. அரசாங்கத்தாரே கடந்த இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் தனியார் துறைத் தொழிலே அதிகமாக வளர்ந்துள்ளது எனக் காட்டுவர். எனவே, பொருள், உழைப்பு, ஊக்கம் அனைத்தும் பிணைந்த காரணத்தால் ஒரு சில மூலப் பொருள் கிடைக்கவில்லை என்ற குறை மறைக்கப் பெற்று நல்ல தொழில் வளர நாட்டில் வாய்ப்பு இருக்கின்றது என்று நம்பலாம். அடுத்த பத்து ஆண்டுகளில் தமிழ்நாட்டில் தமிழ் நாட்டு அரசாங்கத்தாரும் செல்வரும் உழைப்பாளி களும் சேர்ந்து தமிழ்நாட்டைப் பன்மடங்கு வளரச் செய்வார்கள் என்ற நம்பிக்கையில் மேலே செல்லலாம்.

தொழில் வளத்துக்கு மற்றொரு அடிப்படை கல்வி யாகும். கல்வி என்றபோது திருவள்ளுவர் காட்டும் கல்வியே எனக்கு நினைவிற்கு வருகின்றது. மேலும் பெறும் அறிவை வளர்ப்பதே கல்வி. 'கற்றனைத் தூறும் அறிவு.' என்பது குறள். ஆனால், அந்த அறி வும் கல்வியும் ஆக்கத்துறைக்கு வழிகோலுவதாகவும் உலகம் வாழ வழி கோலுவதாகவும் இருக்க வேண்டும் என்பதே வள்ளுவர் போன்ற நல்ல சான்றோர்தம் குறிக்கோள்.

*" தாம் இன்புறுவது உலகு இன்புறக் கண்டு*
*காமுறுவர் கற்றறிந் தார்"*

என்று கல்வியும்

"அறிவினால் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
தன்நோய் போல் போற்றாக் கடை"

என்று அறிவும் வள்ளுவரால் விளக்கப் பெறுகின்றன. எனவே, மற்றவர் இன்பத்தை வளர்க்கவும் மற்றவர் துன்பத்தைப் போக்கவுமே கல்வி அறிவு என்ற இரண்டும் பயன் பெறவேண்டும். இந்த நிலையில் இன்று நாட்டில் கல்வி இல்லை என்றாலும் உண்மையில் கல்வி இந்த அடிப்படையில்தான் அமைதல் வேண்டும். மற்றும் உலகம் செல்லும் போக்கினை அறிந்து அதன் வழியே தன் நாட்டையும் நாட்டு வளத்தையும் பிற நல்லியல்புகளையும் வளர்க்க வேண்டுவதே கல்வியா லும் அதன் வழி உண்டாகும் அறிவாலும் பெறும் பயனாகும். இதைத் திருவள்ளுவனார்,

"எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு
அவ்வ துறைவது அறிவு"

என்றும்,

"உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்"

என்றும் காட்டுவர். எனவே, இந்த வகையில் தமிழ் நாட்டு மக்கள்—சிறப்பாகச் செல்வரும் பாட்டாளிகளும் உலகின் பிற நாடுகளைப் போன்று பாரத நாட்டின் பிற பகுதிகளைப் போன்று வளர்ச்சி அடைய வேண்டும் என்ற நோக்கோடு அரும்பாடுபடுகின்றார்கள்.

மற்றும், நான் இங்கே கல்வி என்ற குறிப்பில் பொதுக் கல்வியோடு தொழில் வளர்ச்சிக்கு ஏற்றதான தொழிற்கல்வியையும் சேர்த்தே கூறினேன். தமிழ் நாட்டில் இன்று தொழிற் கல்வியை அரசாங்கத்தாரும் தனியாரும் பலவகையில் வளர்க்கப் போட்டியிட்டு முன் வந்துள்ளனர். ஒரு பொறியியற் கல்லூரி இருந்த இடத்தே ஆறு கல்லூரிகள். மாவட்டத்திற்கு ஒன்றுக்கு

மேற்பட்ட பல் தொழிற் பள்ளிகள். அண்மையில் பெண்களுக்காகவும் தொழில் பள்ளிகள் அமையப் பெறுகின்றன என அறிகின்றோம். மற்றும் பெருந் தொழிற்சாலைகளில் அவ்வத் தொழில்களை அறிந்து கொள்ள மாணவர்களைச் சேர்த்து அவர்களுக்கு உபகாரச் சம்பளம் தரும் நிலையையும் காண்கின்றோம். பல்கலைக் கழக அடிப்படையில் இத்தகைய நாட்டுத் தொழில்களும் அத்தொழில் வளர்ச்சிக்குரிய ஆராய்ச்சி அமைப்புகளும் நிறுவப் பலவகையில் நாட்டில் தொழில் கல்வி வளருகின்றது. இவை பற்றிப் பின் தனியாகவே காண்போம்.

தொழில்வளர்ச்சிக்கு மற்றொரு முக்கியமான பொருள் மின்சாரமாகும். இன்று நாட்டில் மின்சாரம் நீர் வழியும் அனல் வழியும் உண்டாக்கப் பெறுகின்றது. மின்சார வளர்ச்சியில் நாடு உரிமை பெறுவதன் முன்பிருந்தே தமிழ்நாடு ஓரளவு சிறந்து வந்துள்ளது. இன்று தமிழ் நாட்டில் ஐந்து நீர் மின்சார நிலையங்களும், இரு அனல் மின்சார நிலையங்களும் இயங்கி வருகின்றன. இவற்றின் உற்பத்தி நாட்டின் தேவையை இன்று ஓரளவே நிறைவு செய்கின்றது. எனினும், தமிழ்நாட்டு அரசாங்கம் தாராளமாக ஆந்திரம் போன்ற அண்டை நாடுகளுக்கும் மின்சாரம் வழங்கும் அளவுக்கு வளர்ந்துள்ளது. அண்மையில் தொழிற்பட இருக்கும் (இந்நூல் வருவதற்குள் தொழிற்படும்) நெய்வேலி அனல் மின்சார நிலையம் நாட்டின் தேவையை அதிகமாக நிறைவேற்றிவைக்கும். இன்னும் இத்துறையை வளர்க்க வேண்டிய தேவையுள்ளது. இம் மின்சாரம் பற்றியும் தனியாகப் பின்னுக ஆராயலாம் என்ற காரணத்தால் இத்துடன் அமைகின்றேன்.

தொழில் வளர்ச்சியில் போக்குவரத்தும் முக்கிய இடம் பெறுகின்றது. அதற்குமுன் மருத்துவம், நலத் துறை போன்ற ஒரு சிலவற்றைக் காண்போம். நாட்டின் பொதுவான நல்ல முறையில் நலத்துறை கவனிக்கப் பெறுதல் வேண்டும். அதற்கேற்ப மருத்துவத் துறை செம்மை அடைய வேண்டியுள்ளது. தமிழ்நாட்டு அரசாங்கத்தார் இத்துறையில் நன்கு முயன்று வந்துள்ளனர். இத்துறையில், வந்தபின் காப்பதினும் வருமுன் காப்பதே சிறந்த செயல் என உணர்தல் வேண்டும்; உணர்ந்து நாட்டில் பலவகைகளில் செயலாற்றுகின்றனர். இங்கே சிறப்பாகத் தொழில் சம்பந்தப்பட்ட மட்டில் காணலாம். தொழிற்சாலைகளில் பணியாற்றுகின்ற மக்களின் நலன் காக்கப் பல திட்டங்கள் உள்ளன. அவற்றுள் ஒன்று 'தொழிலாளர் இன்சூரன்ஸ் திட்டம்'. இதற்கெனத் தமிழ்நாட்டு அரசாங்கத்தார் ஆண்டொன்றுக்குச் சுமார் முப்பது லட்ச ரூபாய் செலவிடுகிறார்கள். சுமார் இரண்டு லட்சம் தொழிலாளர் இதனால் பயன் பெறுகிறார்கள் எனக் கணக்கெடுத்துள்ளனர். சென்னை, கோவை, மதுரை போன்ற தொழில்வளம் பெருகி வருகின்ற நகரங்களில் தொழிலாளர் நலனைப் பாதுகாக்க நல்ல முயற்சிகளை மேற்கொண்டு வருகின்றனர். தனியார் நிறுவியுள்ள தொழிற்சாலைகளில் தத்தம் தொழிலாளர்களுக்கென நலத்துறை, பொழுதுபோக்கு ஆகிய வகைகளில் எத்தனையோ தேவைகளை அறிந்து ஆவன செய்து வருகின்றார்கள். பல தொழிலாளர்களுக்குக் குறைந்த வாடகைகளில் பெரு வீடுகள் கட்டித் தருகிறார்கள். அதனால் தொழிலாளர்களும் மன நிறைவு பெற்றவராகித் தத்தம் தொழிலைத் திறம்படச் செய்து உற்பத்தியைப் பெருக்குகின்றார்கள். எனவே, முதலாளி தொழிலாளி என்ற

இருவரும் ஒருவரை ஒருவர் உள்ளத்தால் புரிந்து கொண்டு, ஒருவர் மற்றவருக்கு உதவி, அதனால் தத்தம் வருவாயினையும் வளத்தையும் பெருக்கிக் கொள்வதோடு நாட்டுப் பெருளாதார வளத்தையும் வளர்த்து வாழவைக்கின்றனர். அதனாலேயே சில ஆண்டுகளுக்கு முன் நாட்டில் அதிகமாக இருந்த வேலை நிறுத்தம் போன்ற தொல்லைகள் தமிழ்நாட்டில் குறைந்து வருகின்றன. இன்னும் இத்தொழில் அடிப்படையினையும், அவற்றில் பொருள் உழைப்பு இவற்றின் இணைப்பினையும், தனி மனிதரை மறந்து தொழில் துறையில் உள்ள அனைவரும் சமுதாயம் அல்லது நாடு அல்லது உலகம் என்ற ஒன்றிய உணர்வில் செயலாற்ற வேண்டிய நிலையினையும் விளக்கத்தக்க வகையில் நல்ல கல்வியினை நாடி அவர்களுக்குக் கொடுத்தால்—தொழில் முறை வளர்ச்சிக்குரியவற்றைக் கற்பித்தால்—தமிழ்நாட்டில் இன்னும் தொழில் துறை சிறந்து விளங்கும் என்பது உறுதி.

இனிப் போக்கு வரவு பற்றிக் காணலாம். தமிழ் நாட்டின் உயிர் நாடியாகிய உழவுத்தொழிலுக்கும் சரி, பிற சிறுதொழில் பெருந்தொழில்களுக்கும் சரி, போக்கு வரவுச் சாதனங்களே முக்கிய இடம் பெறுகின்றன. மக்கள் தத்தம் தொழில் கருதிப் பல விடங்களுக்குச் செல்லுவதற்கும் தாங்கள் பொருள் விளைப்பதற்கேற்ற மூலப்பொருள்களையும் பிறவற்றையும் வெளியிடங்களிலிருந்து பெறுவதற்கும் விளைந்த அல்லது உற்பத்தி செய்த பொருள்களைச் சந்தைகளுக்குக் கொண்டு சேர்ப்பதற்கும் நல்ல சாலைகளும் பிற போக்கு வரத்துச் சாதனைகளும் தேவையாக உள்ளன. நல்ல சாலைகள், இரெயில்பாதைகள், கப்பல் துறைமுகங்கள் போன்ற

பல தேவைகள் தமிழ் நாட்டில் உடனடியாகக் கவனிக்கப் பெறல் வேண்டும்.

போருக்கு முன்னால் இருந்து எடுக்கப் பெற்ற சில இரெயில் பாதைகள் இன்றளவும் திரும்பி அமைக்கப் படவில்லை. இந்திய அரசாங்கக் கணக்கில் ஒவ்வொரு திட்ட காலத்திலும் பல மைல்கள் புதுப் பாதைகள் போடுவதாகக் கணக்குக் காட்டப் பெறினும் தமிழ்நாட்டில் இன்றுவரை யாதொரு புதுப்பாதையும் போடப் பெறவில்லை. மேலே குறித்தபடி இரண்டாம் திட்ட காலத்தில் முடிந்திருக்க வேண்டிய தாம்பரம் விழுப்புரம் மின்சாரப் பாதை இன்னும் பேச்சளவிலேயே உள்ளது. தொழில் வளர வளர அவற்றின் பொருள்களை நெடுந்தொலைவிலிருந்து கொண்டு வரவும் எடுத்துச் செல்லவும் இருப்புப் பாதைகளே பயன்படுகின்றன. அவை வளர்ச்சி யடையாத நிலை தொழில் வளர்ச்சிக்கு முட்டுக்கட்டையே யாகும். இத்தேவையைத் தமிழ் நாட்டு அரசாங்கமும் தமிழ் மக்களும் அடிக்கடி வற்புறுத்தி வந்தும் கூட மத்திய அரசாங்கம் ஒன்றும் செய்யாதிருப்பது வருந்தத் தக்கதே யாகும். நெய்வேலி வளர்ந்து வரும் நிலையில் அதை நாட்டொடு இணைக்கும் பல புதிய ரயில் பாதைகள் இட்டாக வேண்டும். சேலம் பெங்களூர், மானமதுரை விருதுநகர் போன்ற இணைப்பு இருப்புப் பாதைகள் எப்போதோ வந்திருக்க வேண்டியவை. இப்படியே தமிழ் நாட்டில் பல வகையில் முன்னேற்றம் அடைய வேண்டிய இருப்புப் பாதை வளர்ச்சி அடையாத ஒன்றாக அமைந்து கிடக்கின்றது. நல்ல வேளையாக அந்த உணர்ந்த தமிழ் நாட்டு அரசாங்கத்தார் சாலைப் போக்கு வரத்தை நல்ல முறையில் வளர்த்து வருகின்

றனர். தனியார் துறையிலும் அரசாங்கத் துறையிலும் உந்துவண்டிகள் (Bus) இல்லாத பகுதியில்லை. நெடுந் தொலைவிற்கு விரைவு வண்டிகளும் விடப்பெறுகின் றன. இன்றைய நிலையில் மக்கள் மிக நெடுந் தொலைவு தவிரப் பெரும்பாலும் ரெயிலைவிட உந்துவண்டிகளையே பயன்படுத்துகின்றனர். அப்படியே சாமான்கள் ஏற்றிச் செல்லும் 'லாரிகளுக்கும்' தமிழ் நாட்டு அர சாங்கத்தார் அதிகமாகப் 'பர்மிட்டுகள்' வழங்குகின்ற னர். இன்னும் அதிகமாக வழங்கின் நலம் உண்டாகும். மற்றும் உந்து வண்டிகளைச் செலுத்துவது போன்று அரசாங்கமே முன்வந்து சாமான்களை நெடுந்தொலைவு ஏற்றிச் செல்லும் 'லாரி'களைச் செலுத்தினுல் தொழில் துறையில் உள்ள பல சிக்கல்கள் நீங்கிவிடும் என்பது உறுதி. பத்து அல்லது பதினைந்து டன்கள் சாமான் கள் ஏற்றக் கூடிய பெரு வண்டிகளை (Truck) முக்கியத் தொழில் நகரங்களுக்கு இடையே செலுத்தத் தமிழ் நாட்டு அரசாங்கம் முயலுமானுல் நாட்டுத் தொழில் வளம்பெற நல்ல வாய்ப்பு உண்டாகும்.

ஆனுல் இந்த வண்டிகள் செல்வதற்குச் சாலைகள் செம்மை வாய்ந்தவைகளாக இருக்க வேண்டும். கிராமச் சாலைகள் இன்னும் நல்ல நிலைக்கு வர நெடுங்காலமாகும் என்பதைப் பின் 'உழவுத் தொழிலில்' காண்போம். மற்றச் சாலைகள் அவ்வளவு தாழ்ந்த நிலையில் இல்லை. ஒவ்வொரு திட்டக் காலத்திலும் பல மண் சாலைகள் கற் சாலைகளாகின்றன. கடந்த பத்து ஆண்டுகளில் சில முன்னேற்றங்களைச் சாலை அமைப்பில் கண்டிருந்தா லும் அவ்வளர்ச்சி, மக்கள் போக்கு வரத்து, தொழில் வளர்ச்சி இவைகளோடு ஒப்பு நோக்கும் போது மிகக் குறைவாகவே உள்ளது. இதனுலேயே பல சாலைகள்

அடிக்கடி கெட்டுப் பழுது பார்க்கத் தக்க நிலையை அடைந்துவிடுகின்றன. இச்சாலை அமைப்புக்களில் மற்றொரு புதுக்கருத்திருத்தவும் தேவையுள்ளது. இன்று அமைக்கும் சாலைகளும் புதுப்பிக்கும் சாலைகளும் மிக விரிந்த அளவில் அகலமாக அமைக்கப் பெறுதல் வேண்டும். இன்றைய நிலையில் அடுத்த இருபது ஆண்டுகளில் சாலைப்போக்கு வரத்து எந்த அளவில் வளம் பெறும் என்று சொல்ல முடியாது. கடந்த இருபது அல்லது முப்பது ஆண்டுகளுக்கு முன் அமைத்த சாலைகள் இன்று போக்குவரத்துக்கே போதாதனவாக உள்ளதைக் காண்கின்றோம். அப்படியே நகர அமைப்புக்களை அமைக்கும் பெருநகர அமைப்பாளர்களும் இந்த அடிப்படையை மனதில் வைத்தே சாலை அமைத்தல் முதலியன காணல் வேண்டும். தமிழ்நாட்டில் 'மாநில வீட்டு வசதி போர்டு' தற்போது தொழிற்படத் தொடங்கியுள்ளது. தமிழ் நாட்டின் நகர்களெங்கும் அது அமைக்கும் திட்டத்திலேயே புதுக் குடியிருப்புக்களும் அவற்றிற் கேற்ற பிற அமைப்புக்களும் உண்டாக்கப் பெறும் என அறிகின்றோம். எனவே நாடு நகர் அமைப்பிலும் அவற்றை இணைக்கும் நெடுஞ்சாலை குறுஞ்சாலைகள் அமைப்பிலும் நல்ல முன்னேற்றம் காணமுடியும் என்ற நம்பிக்கை பிறக்கிறது.

தொழில் துறைக்கு மற்றொன்று —முக்கியமானது- துறைமுகங்களும், கப்பல் போக்குவரத்தும். ஆங்கிலேயர் விட்டுச் சென்ற பல நல்ல அம்சங்களில் சென்னைத் துறைமுகம் ஒன்றாகும். இந்தியநாட்டுப் பெருந்துறைமுகங்கள் மூன்றில் இதுவும் ஒன்று. மற்ற இரண்டும் இயற்கையிலே அமைய, இதைப் பெருஞ்செலவு கொண்டு செயற்கைத் துறைமுகமாகச் செய்தார்கள்

உண்மையிலேயே சென்னை, பெருந்துறைமுகமாக அமையாதிருந்தால் தமிழ்நாடு தொழில் வாணிபத் துறையில் இத்தனை தூரம் வளர்ச்சி பெற்றிருக்குமா என்பது ஐயத்துக்கு இடமாகவே இருக்கும். தமிழ்நாடு பண்டைக் காலத்தில் பாரதி காட்டியபடி,

*'சிங்களம் புட்பகம் சாவகம் ஆதிய*
*தீவு பலவினும் சென்றேறி—அங்கு*
*தங்கள் புலிக்கொடி மீன் கொடியும் நின்று*
*சால்புறக் கண்டவர் தாய்நாடு'*

என்ற பழம்பெருமை கொண்ட ஒன்றாக இருந்தாலும் சென்னைத் துறைமுகம் உருவாகாதிருந்தால் தமிழ் நாடு தொழில் துறையிலும், வாணிபத்திலும் பின் தங்கிய நாடாகவே இருந்திருக்கும். அதற்கென நாம் ஆங்கிலேயர்களைப் போற்றத்தான் வேண்டும். இன்று இச் சென்னைத் துறைமுகம் பல வகையில் வளர்ச்சி யடைந்து வருகின்றது என்றாலும் இன்றைய தேவையை நிறைவேற்ற முடியாத நிலையிலேயே இது தொழில் படுகின்றது. எனவேதான் தமிழ்நாட்டு அரசாங்கம் நாட்டின் தென்கோடியிலுள்ள தூத்துக் குடியை ஆழ்கடல் துறைமுகமாக்க வேண்டுமென்று மத்திய அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டே இருக்கிறது. அந்த இடத்தின் சரித்திரச் சிறப்பை அறிந்தவர்கள் தமிழ்நாட்டு விழைவு இன்னும் நிறைவேற்றப் படாதிருப்பதைக் கண்டு உண்மையிலேயே வருந்துவர். ஆங்கிலேயருடன் நடைபெற்ற விடுதலைப் போராட்டத்தில் தமிழ் நாட்டுத் தனிப்பெருந்தலைவரான வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்கள் அங்கே தான் தனியாகக் கப்பல் வாங்கி ஆங்கிலேயருக்கு எதிராகச் செலுத்தி அவர்களை நடுங்கச் செய்தார். அதனால் அவர் பெற்ற இன்னல்கள் பல. ஆனால் இன்றும் அவர் விரும்பிய அர

சியல் சுதந்திரம் வந்து விட்டது. தூத்துக்குடி ஆழ் கடல் துறைமுகமானால் மறைந்த அவர்மனம் அமைதி யுறுவதோடு, உண்மையாக நாட்டுத் தொண்டர் களுக்கு நன்றி காட்டிய மனநிறைவும் அதன் வழி நாட்டுத் தேவையை நிறைவேற்றிய செம்மை உணர் வும் நாமும் பெற்றவராவோம். மூன்றும் திட்டத்தில் இது நிறைவேற்றப்படலாம் என்ற நம்பிக்கை இருக் கிறது. இத்துடன் இணைந்த சேதுசமுத்திரத்திட்ட மும் உடன் நிறைவேற்றப்பட்டால்தான் அதன் இன் றியமையாமையை விளக்கும். இலங்கையைச் சுற்றி வரும் கப்பல்களெல்லாம் இவற்றால் அத்தொல்லை நீங்கி நேராகவே செல்லலாம்.

இந்த இரு துறைமுகங்களுக்கிடையில் எத்தனையோ சிறு சிறு துறைமுகங்கள் உள்ளன. புதுச்சேரி, கடலூர், பரங்கிப்பேட்டை, நாகப்பட்டணம் போன்ற சிறு சிறு துறைமுகங்கள் தத்தம்மாலியன்ற அளவு நாட்டுத் தொழில் வளர்ச்சிக்கு வேண்டிய ஆக்கப் பணிகளைச் செய்கின்றன. நெய்வேலியின் தொழில் வளர்ச்சியில் கடலூருக்கு ஒரு நிலைத்த இடத்தை உண் டாக்க வாய்ப்பு உண்டு. கடலூருக்கும் நெய்வேலிக்கும் இடையில் உள்ள தூரம் மிகக் குறைவே. இரண்டுக்கும் இடையில் சிறு சிறு கப்பல்கள் செல்லும் வகையில் பெருவாய்க்கால் தோண்ட அதை நிலைபெற்ற நீர் ஓட்ட நிலையமாகச் செய்வார்களானால் பல்வேறு தொழில் சாலைகளுக்கு வேண்டிய இறக்குமதிப்பொருள் களும் முடிந்த ஏற்றுமதிப் பொருள்களும் தங்கு தடை யின்றிச் செல்ல வாய்ப்பு உண்டாகும். அதற்குப் பெருந்தொகை செலவாகும் என்பது உண்மைதான். *10,000* கோடி திட்டங்களைத் தீட்டும் நம்முடைய நாட்டுக்கு அது ஒன்றும் உண்மையில் பெருந்தொகை

யாகாது. சென்னை போன்ற நகரங்களிலுள்ள பெருந் தொழில்களுக்கெல்லாம் கூடக் கடல் வழியே நிலக் கரியை ஏற்றி வருதல் இனிதாக முடியும். இன்றும் கல்கத்தாவிலிருந்து கப்பல் வழிதான் பெரும் பகுதி நிலக்கரி வருகின்றது. எனவே இதுபற்றித் தமிழ்நாட்டு அரசாங்கம் மத்திய அரசாங்கத்தை வற்புறுத்தி அடுத்த திட்டத்திலாவது இதைச் சேர்க்கவேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இன்னும் அஞ்சல், தந்தி, தொலைபேசி போன்ற பல துறைகளும் தொழில் வளர்ச்சிக்குப் பெரிதும் பயன்படுகின்றன. அவற்றை அரசாங்கம் ஓரளவில் வளர்த்து வருகின்றது என்பது உண்மையே. அவற் றிற்கான பெரும் பொருள்கள் நம் நாட்டிலேயே செய் யத்தக்க வகையில் தொழில் வளம் பெற்றுள்ளதும் பெருமைக் குரியதாகும். மேலே கண்ட பல்வேறு போக்குவரத்துக்குரிய நெறிகளும் அவற்றை ஆக்கும் பல உறுப்புப் பொருள்களும் இன்று இந்தியப் நாட்டிலேயே பெரும்பாலும் செய்யப்பெறுகின்றன. எனினும் இயந்திர அமைப்புக்குரிய பல பொருள்கள் வெளி நாடுகளிலிருந்தே வருகின்றன. தொழில் வளர வளர இந்தக் குறைபாடுகளும் மெல்ல நீங்கிவிடும்.

இவ்வாறு தொழில் வளர அடிப்படைத் தேவை களான இவைகளெல்லாம் நன்கு அமைந்து நாட்டில் தொழிற் கல்வியும் வளர்ச்சியுறின் தமிழ் நாடு தொழில் வளம் பெற்று எந்நாட்டுக்கும் முன்னுடான நன்னுடாக விளங்கும் என்பது உறுதி.

# 8. உழவுத் தொழில்

'உழவு வேறு ; தொழிலுக்கும் அதற்கும் தொடர் பில்லை' எனச் சிலர் எண்ணுகின்றனர். 'உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்' எனப் பாரதியார் பாடிவிட்டார்; எனவே இரண்டும் வேறே எனவாதிப்பர் சிலர். தொழில் பலவகையாகக் கணக்கிடப்பட்டு வளர்ந்து வருகிறதல்லவா! அந்த நிலையில் உழவும் ஒரு தொழிலாகக் கணக்கிடப் பட வேண்டும் என்பர் சிலர். ஆயினும் எண்ணிப்பார்த்தால் எல்லாத் தொழில் களுக்கு முன்னமே தோன்றியதாய், பல தொழில்கள் தோன்றுவதற்கு ஆதாரமாய் நின்றது இந்த உழவுத் தொழிலேயாகும். அதனாலேயே ஆசிரியர் திருவள்ளு வனார் 'உழவு' என்ற ஓர் அதிகாரத்தைமட்டும் சொல்லி, அதன் வழியே எல்லா உலகத்தொழில்களும் அமை கின்றன என்பதைக் குறிப்பாகக் காட்டி, மற்றவை பற்றி ஒன்றும் கூறாதுவிட்டார். உழவு தலையாய சிறந்த தொழில் என்பது உறுதி.

தமிழ் நாட்டைப் பொறுத்தமட்டில் உழவு சிறந்து போற்றப்படுகின்றது ; போற்றப்பட வேண்டிய

ஒன்று. தமிழ்நாட்டு மக்களுள் பெரும்பாலோர் உழவை நம்பியே வாழ்கிறார்கள். தமிழ்நாட்டில் மக்களுள் முக்கால் பகுதியினர் கிராமங்களில் வாழ்கின்றார்கள் எனக் கணக்கிட்டுள்ளனர். அத்துணைப் பெரும்பகுதி யான மக்கள் உழவுத்தொழில் செய்பவர்களே. எனவே தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் உழவுத் தொழில் வளர்ந்தால்தான் பிறதொழில்களும் வளர்ந்து நாடு நலமுற்று ஓங்கும். தமிழ்நாட்டை விவசாய நாடு என்றே கூறுவர். எனவே உழவுத் தொழிலே நம்நாட்டைப் பொறுத்தமட்டில் முக்கியமாக வளர்ச்சி பெறவேண்டும். உழவு வளர வேண்டுமாயின் அதை வளர்க்கும் கிராமங்கள் வளர்ச்சியுறவேண்டும். இவ்வுண்மையை உணர்ந்த அரசாங்கத்தார் கிராம வளர்ச்சியில் கருத்திருத்துகின்றார்கள். என்றாலும் நம் நாட்டில் நகரங்கள் வளர்கின்ற அந்த அளவில் கிரா மங்கள் வளர்ச்சி அடையவில்லை. இன்னும் எத்தனையோ கிராமங்கள் எந்தவித வளர்ச்சியுமின்றி உள் ளதை நாமறிவோம். செல்லும் நல்ல சாலையற்று—போக்குவரத்துக்கு வழியற்று—மின்சார ஒளியற்று—பள்ளிக்கூடமோ மருந்தகமோ இல்லாத நிலையில் பல ஊர்கள் உள்ளன. நாட்டுக் கிராமங்கள் உயர்ந் தால்தான் நாட்டுச் செல்வவளன் உயரும். இந்த உண்மையை உணர்ந்தே அண்ணல் காந்தி அடிகளார் கிராமங்களை வளர்க்க அரும்பாடுபட்டுத் தாமும் கிராம வாழ்வை மேற்கொண்டார். அரசாங்கத்தையும் அத்துறையில் செயலாற்ற வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். தமிழ்நாட்டுப் பழங்கால அரசாங்கங் களும் கிராமங்களின் வளர்ச்சிக்கும் உழவுத் தொழில் வளர்ச்சிக்கும் முதலிடம் கொடுத்துப் போற்றின. உழ வர்களுக்கு அக்கால அரசாங்கங்கள் முதலிடம்

கொடுத்த சிறப்பை, வேளாண்குடியில் அரசர்கள் பெண் கொண்டமையினுலும், வேளாளர்களே அரசர்களுக்கு முடிபுனைய உரிமை பெற்றவர்களாகச் சிறந்தமையாலும் நன்கு உணரலாம். அமைச்சர்களோ அன்றிச் சேனைத் தலைவர்களோ பிற அலுவலர்களோ அந்த உரிமையைப் பெற்றதாக எங்கும் பழங்கால வரலாற்றிலும் காணமுடியாது. இத்தமிழ் நாட்டுச் சிறந்த வழக்கத்தினையே வடநாட்டு வரலாற்றைப் பாடவந்த கம்பர் தனது இராமாயணத்தில்,

'வெண்ணையூர்ச் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான் மௌலி'

எனப் பாராட்டுகின்றுர். தமிழ்நாட்டில் உள்ள ஒரு சார் வேளாளருக்குக் 'கொண்டைகட்டி வேளாளர்' என்ற பெயர் உண்டு. அவர்கள் அரசர்களுக்குக் கொண்டை கட்டி முடி புனைவித்ததாலேயே அப்பெயர் பெற்றதாகக் கூறிக்கொள்வர். எனவே தமிழ்நாட்டு வரலாற்றில் என்றும் உழவுத் தொழிலும் அதைச் செய்த வேளாளர் மரபும் சிறந்து போற்றப்பட்டன எனக் காண்கிறேம்.

கடைச் சங்க காலத்தில் வாழ்ந்த சோழன் கரிகாற் பெருவளத்தான் போன்ற பெருமன்னரும் இடைக் காலத்தில் வாழ்ந்த இராசராசனும் அவன் பரம்பரையினரும் காஞ்சியில் ஆண்ட பல்லவரும் உழவுத் தொழிலைக் கண்ணெனப் போற்றி வாழ்ந்தனர். இன்றைக்குச் சுமார் ஆயிரத்து முன்னூறு ஆண்டுகளுக்கு முன்னர் பல்லவர் அமைத்த 'திரையனேரி' 'பல்லவனேரி' போன்ற பேரேரிகள் மருஉப் பெயர்களுடன் இன்

றளவும் சிறந்த பாசன வசதி அளிக்கும் ஏரிகளாக விளங்குவதைக் காண்கின்றோம். கரிகாற் பெருவளத்தானே வரலாற்று எல்லையில் காவிரிக்குக் கரை கட்டிய மன்னனாகக் காணப் பெறுகின்றான். அவன் காவிரிக்குக் கரை அமைக்குங்கால் இந்திய நாட்டின் பிற பகுதியிலிருந்தும், இலங்கையிலிருந்தும் அவனது ஆணையின்கீழ் பலர் வந்து பணியாற்றினர் என வரலாறு காட்டுகின்றது. பிற்காலச் சோழர் காலத்தில் கட்டிய பல ஏரிகளும், வாய்க்கால்களும் அவர் தம் விருதுப் பெயர்களை நமக்கு நினைவூட்டிக்கொண்டு இன்றும் வாழ்கின்றனவே. அவற்றைப்பற்றி யெல்லாம் விளக்கிக்கொண்டே செல்லின் எல்லையற்று விரியும்.

உழவுத் தொழிலுக்குரிய பாசனவசதிகள் மட்டுமின்றி நில அளவை முதலியவற்றையும் செப்பம் செய்த பெருமை பிற்காலச் சோழர்களுக்கே உண்டு. அவர்கள் அளந்த முறைபற்றியும் அவர்கள் பயன் படுத்திய அளவுகோல்கள் பற்றியும் கல்வெட்டுகள் நன்கு விளக்குகின்றன. 'நிலமளந்தான்' என்றே அளந்து சிறப்புப் பெயர்பெற்ற பெருவேந்தர் தமிழ் நாட்டில் இடைக்காலத்தில் வாழ்ந்துள்ளார்கள்.

இனிக் கிராமங்களை வளர்த்த பெருமையும் அவர்களையே சாரும். இன்று நாடெங்கும் வளர்ந்து வரும் பஞ்சாயத்து ஆட்சிமுறை சோழர்களுடையதே. ஊர் தோறும் பஞ்சாயத்துச் சபைகளை அமைத்து அச் சபைக்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் விதத்தினை வரையறுத்து, உறுப்பினராகத் தகுதியுள்ளார் யார் யார் எனக்காட்டி குடவோலை முறையில் தேர்வு நடத்திய வரலாறெல்லாம் நல்ல வேளை பொய்யாய்ப் பழங்கதையாய்ப் போகாது கல்வெட்டுக்களால் சாகா

வரம்பெற்று விட்டன. முப்பது வயதுக்கு மேற்பட்டும் எழுபது வயதுக்கு மேற்படாமலும் உறுப்பினர் இருக்கவேண்டும் என உறுப்பினர்களுக்கு வயதையும் பிறவற்றையும் இயல்புகளையும் வரையறைசெய்து குடவோலை முறையில் அவர்களைத் தேர்ந்தெடுத்த நிலையினை எண்ணின் நாம் இன்று அத்துணைத் திட்டமாக ஐம்பெருங் குழுவாகிய பஞ்சாயத்தை 'ஆக்குகிறோமா?' என்ற ஐயம் பிறக்கும். பஞ்சாயத்தாரை ஏற்படுத்தி அவர்கள் வழியே கிராமங்களின் முழுப் பொறுப்பையும் ஒப்படைத்து மேல் உள்ள அரசாங்கத்தார் தலையீட்டை எவ்வளவுக்கெவ்வளவு குறைத்துக்கொள்ள முடியுமோ அவ்வளவுக்கவ்வளவு குறைத்துக்கொண்டு கிராம வாழ்வையும் உழவுத் தொழிலையும் வரலாறு அறிந்த நாள் தொட்டு நேற்று வரையில் தமிழ்நாட்டை ஆண்டவர்கள் போற்றி வந்துள்ளனர். எனவே இன்று ஆளுகின்றவர்களும் அதே போல் கருத்திருத்தத் தொடங்கியுள்ளமை நல்ல அறிகுறியேயாகும். எனினும் இன்னும் சிறந்த அளவில் கிராமங்களும் அவற்றின் உயிர் நாடியாகிய உழவுத் தொழிலும் அண்ணல் காந்தியார் காட்டியபடி சிறக்க வளர்க்கப்பெறல் வேண்டும்.

நாட்டில் ஐந்தாண்டுத் திட்டங்கள் தீட்டப் பெறுகின்றன. அவை மேலிருந்து கீழே இறங்கிவரும் வகையில் பகுக்கப்பெறுகின்றன. அத்துறையில் வல்ல பல அறிஞர்கள் அத்திட்டங்களை வகுக்கவும் திட்டங்கள் செயல்படவும் பல வகையில் உதவுகின்றார்கள். எனவே அவர்தம் திட்டங்களில் குறை காண முடியாது என்றாலும் அவர்தம் திட்டங்கள் கீழிருந்து மேலே சென்றால் சிறந்த பயன் உண்டாகும் என்பது என் கருத்து. கீழே

உள்ள அடிப்படையைக் கவனிக்காது மேலே எவ்வளவு அழகு செலுத்தினாலும் பயன் விளையாதே! அப்படியே தான் தமிழ் நாட்டின்—பரந்த பாரதத்தின்—அடிப்படையாகிய கிராமங்களுக்கும் அவற்றின் தொழிலாகிய உழவுக்கும் முதலிடம் தந்து திட்டங்கள் தீட்டப் பெறல் வேண்டும். வரவரப் பல்வேறு திட்டங்கள் கிராமங்களுக்கு ஏற்றவகையில் அமைகின்றன எனக் காண்கின்றோம். சமுதாய நலத்திட்டமும் தேசிய வளர்ச்சித்திட்டமும் இவைபோன்ற பிறவும் இன்றைய பஞ்சாயத்து ஆட்சி அமைப்பும் ஓரளவு கிராம வளத்துக்கும் உழவுத் தொழில் நலத்துக்கும் உதவுகின்றன என்றாலும் நகரங்களும் அவற்றின் சூழல்களும் பயன் பெறுகின்ற அளவுக்குக் கிராமங்கள் பயன் பெறுவதில்லை. அதனாலேயே இன்னும் ஆசிரியர்களும், மருத்துவர்களும், சமூக நலத்தொண்டர்களும் பிற அரசாங்க அலுவலர்களும் கிராமங்களுக்குச் செல்ல அஞ்சுகின்றனர். பழங்கால இலக்கியங்களில் 'பதியெழு வறியாப் பழங்குடி' என்ற ஒரு தொடர் பல இடங்களில் வருவதைக் காண்கின்றோம். அதன் பொருளை உணர்ந்து கொண்டால் ஊர்கள் தம் நிறைவு பெற்றிருந்த தன்மையை நன்கு உணர்ந்து கொள்ளலாம். ஓர் ஊரில் உள்ள மக்கள் தமக்குத் தம் ஊரில் 'இவை இல்லையே' என்று எண்ணி ஏங்கி ஊரை விட்டுச் செல்லுவது கிடையாதாம். அவர்கள் அக் கிராமங்களில் வாழ்வின் தேவைகள் அத்தனையும் பெற்று நெடுங்காலம் வேற்றூர் புகுந்து வாழ வேண்டாது தம்பதியை விட்டு எழாத பழங்குடிகளாக வாழ்ந்தார்கள் எனக் காண்கிறோம். இந்த அடிப்படை சரியானதா அல்லவா என்ற ஆராய்ச்சி இங்கே நமக்கு வேண்டாம். ஆனால் அந்தச் சமூக அடிப்படை—ஒவ்வொரு கிராம

மும் தன் தேவைக்கு ஏற்ற தன்னிறைவு உள்ளதாக அமைந்த அடிப்படை – சிறந்த ஒன்றல்லவா? இதையே தான் நாட்டின் மேல்வைத்து ஒவ்வொரு நாடும் தன்னிறைவுடையதாய் எப்பொருளுக்கும் பிற நாட்டார் கையை எதிர் நோக்காததாக இருக்க வேண்டுமெனவும் அவ்வாறு இருப்பதே நாடு என்னும் பெயருக்குத் தகுதி வாய்ந்ததெனவும் வள்ளுவர் விளக்குவர்.

> " நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
> நாட வளந் தரும் நாடு "

என்பது அவர் வாக்கு. இந்த நிலையில் இன்று உலகில் எந்த நாடும் இல்லை என்றாலும் பல நாடுகள் பல வகைகளில் தன்னிறைவு கொண்டுள்ளதைக்காண்கின்றோம். பரந்த பாரதநாடும் அதன் அங்கநாடாக உள்ள தமிழ் நாடும் அந்த அளவில் பிறர் கையை நோக்காத பேராண்மைத்திறம் வாய்ந்தனவாக விளங்க வழித்துறை ஆய்ந்து வளர்க்க வேண்டுமென்பதே என் ஆசை. எண்ணற்ற வழித்துறைகளை நாம் எடுத்துக்காட்டலாம்; ஆயினும் அத்துறையில் வல்ல பல அறிஞர்கள் நாட்டில் செயலாற்றும்போது நான் அதில் தலையிடல் பொருந்துமா என்ற உணர்வால் அமைகின்றேன். எனினும் ஒன்றுமட்டும் உறுதி. நாட்டில் உள்ள கிராமங்கள் அத்தனையும் தன்னிறைவு உள்ளனவாகி தத்தமது தொழிலாகிய உழவினைப் பெருக்கி 'நாடெங்கும் வாழக் கேடொன்றுமில்லை' என்ற அடிப்படையின் பண்பட்ட நெறியில்-கிராம மக்கள் வாழ்கின்ற வகையில்-வளருமானால் நாடு முழுதும் விரைவில் முன்னேறி வளம் பெற்றுச் சிறக்கும் என்பதில் ஐயமில்லை.

உழவுத்தொழில் வளர்வதற்குச் செய்ய வேண்டிய ஆக்கப்பணிகள் பல. அவற்றுள் சிலவற்றை இந்திய

அரசாங்கமும், தமிழ் நாட்டு அரசாங்கமும் ஓரளவு செய்து வருகின்றார்கள். அவற்றை ஓரளவு கண்டு மேலே செல்லலாம். கீழிருந்து மேலே சென்றால்தான் திட்டங்கள் சிறக்கும் எனக் கண்டோம். எனவே கிராமங்களை எடுத்துக் கொள்ளுமுன் ஒவ்வொரு வீடும் திட்டமாக அமையத் தக்க முயற்சியை மேற்கொள்ள வேண்டும். இம்முயற்சி அரசாங்கத்தால் மட்டுமோ அன்றித் தனி மனிதனால் மட்டுமோ இயல்வதன்று. நாட்டில் உள்ள எல்லா மக்களும் - கிராமத்தில் உள்ள ஒவ்வொருவரும் - இத்துறையில் பங்கு கொண்டு உழைத்தால்தான் பலன் காணமுடியும். எனவே நாட்டில் உள்ளார் அனைவரும் 'பசியும் பிணியும் பகையும் நீங்கி' வாழ வேண்டிய வகையில் 'எல்லாரும் எல்லாச் செல்வமும் பெற' வேண்டிய வகையில் திட்டங்கள் அமையவேண்டும். 'வீடு திருந்தினால் நாடு திருந்தும்' என்பது பழமொழி. எனவே ஊர்தோறும் உள்ள வீடுகள் திருந்த வேண்டும். ஒவ்வொரு வீட்டிற்கும் திட்டம் வேண்டும். ஒவ்வொரு வீட்டிலும் வாழ்கின்ற மக்களின் எண்ணிக்கை—அவர்தம் உறவுமுறை—அவர்தம் வாழ்க்கை வகை—அவர்தம் தொழில்நிலை— அவர்தம் பொருளாதாரம் முதலியவை பற்றிய அடிப்படைத் திட்டமே முதலில் தீட்டப்பட வேண்டியுள்ளது. எவ்வளவுதான் முயன்று சமதர்மச் சமுதாயத்துக்கு அரசாங்கம் வழிகோலினாலும் எல்லா ஏற்றத் தாழ்வுகளும் இன்னும் வளர்ந்து கொண்டேதான் போகின்றன. இந்த ஏற்றத்தாழ்வுகள் நாட்டிலிருந்து – சிறப்பாக உழவுத் தொழிலில் இருந்து-நீங்க வேண்டும். எல்லாத் தொழில்களும் நடைபெறுவன போன்றே உழவுத் தொழிலும் மக்கள் கூட்டு முயற்சியிலேயே நடைபெற வேண்டும். விதை தெளிப்பது தொடங்கி, சந்தையில்

பெற்ற பொருளை விற்கும் வரையில் தனக்கு உதவுப் வரைக் கணக்கிட்டு விவசாயி எண்ணினால் நிச்சயம் மலைத்து விடுவான். அதுமட்டுமின்றி ஊரின் பொது விவசாயத்துக்கே பலர் துணை தேவை. இந்த அடிப் படையை மறந்த காரணத்தாலேயே நாட்டில் பயிரிடத் தக்க நிலங்களிலேயே மூன்றில் ஒரு பங்கு தரிசாகக் கிடக்கின்றது எனக் கணக்கெடுத்துக் காண்கின்றோம். இந்த நிலைமாற வேண்டும்.

உழவுத்தொழிலை வளர்க்க இன்று நாட்டில் எத் தனையோ திட்டங்கள் உள்ளன. ஒரு சில காண்போம். உழவுத் தொழிலுக்கு முக்கியமானது நீர்ப்பாசனம். இத் துறையில் தமிழ் நாட்டு அரசாங்கம் நல்ல கருத் திருத்தி வருகின்றது. உழவுத்தொழில் வளரவேண்டு மானால் உழவர்களுக்கு முதலில் நல்ல கால்நடைகள் தேவை. பெரு இயந்திரங்களைக் கொண்டு பயிர்த் தொழில் நடத்தும் அளவுக்கு இன்னும் நாடு முன்னேற வில்லை. மக்களுள் ஒவ்வொருவரும் தத்தமக்குரிய சிறு சிறு நிலங்களை விட்டுவிட விரும்பாதவர்களே உள்ள னர். எனவே சிறிதளவே நிலமுள்ளவர்களே நாட்டில் பெரும்பான்மையராக உள்ளனர். எனவே அவர்களுக்கு மாடுகளைத் தவிர வேறு துணையில்லை. பழங்காலத் திலும் நாட்டில் 'மாடே' செல்வமாக இருந்தது. திருவள்ளுவர் செல்வம் என்ற பொருளில் 'மாடு' என்ற சொல்லையே வழங்கியுள்ளார்.

கோடில் விழுச் செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை'

என்பது குறள். எனவே பயிர்த்தொழில் சிறக்க வேண்டு மானால் தமிழ் நாட்டைப் பொறுத்தமட்டில் முதலில்

மாட்டுவளம் செழிக்கவேண்டும். ஊர்தோறும் உழவுக் காலத்தில் மக்கள் மாடுகள் கிடைக்காது படும் அவதிகளை நேரே கண்டவர்தாம் உணர முடியும். அரசாங்கத்தார் அந்தத் துறையில் ஓரளவு கவனம் செலுத்துகிறார்கள், என்றாலும் அந்த அளவு போதாது என்பதே என் கருத்து. நல்ல காளைகளையும், பசுக்களையும் அப்படியே எருமைகளையும்,கிடாக்களையும் பாதுகாக்கத்தக்க வகையில் பத்து ஊருக்காவது ஒரு சாதனம் அமையவேண்டும். கால்நடை மருத்துவர் நாட்டில் குறைவு. கால்நடை நோய்களோ நாட்டில் ஏராளம். அதிலும் வறண்ட பூமியில் பசும்புல்லும் காணாது வாடும் கால்நடைகள் நாட்டில் பல. எனவே அடுத்த திட்டக் காலங்களிலாயினும் உழவுத் தொழிலில் கருத்திருத்தும் நல்லவர்கள் முதலாவதாகக் கால்நடை வளர்ச்சியில் கவனம் செலுத்த வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

கால்நடை வளர்வதால் உழவுக்குப்பல நன்மைகள் உண்டாகின்றன. வயலுக்குரிய நல்ல உரமாகிய சாணம் முதற்பயனாகும். ஆனால் நம்நாட்டில் சாணத்தைப் பலரும் எரிபொருளாகவே பயன் படுத்துகின்றனர். இது தவறு என்று கூறுவதோடு அமையாது நாட்டில் அந்த வழக்கத்தை நிறுத்தப் பாடுபட வேண்டும். சாணத்தால் ஆக்கும் வறட்டியாகிய எரிபொருளைக் காட்டிலும் எளிமையாகவும் விலை குறைந்ததாகவும் கிராமங்கள் தோறும் எரிபொருள் பெறுமாறு செய்தால் சாணமாகிய எரு நாட்டில் நல்ல விளைவை உண்டாக்கும் என்பது உறுதி. மற்றும் இன்னும் பல ஊர்களில் போக்குவரத்துக்கு மாட்டு வண்டிகளே பயன்படுகின்றன. இவ்வாறு பல வகையில் உதவும் மாடுகளை வளர்ப்பதே முதலாவதாகப் பயிர்த்தொழிலுக்குத் தீட்டும் திட்டமாக அமைதல் வேண்டும்.

அரசாங்கம் சென்ற பத்து ஆண்டுகளில் கால்நடை வளத்தைப் பெருக்கியுள்ளதாகக் கணக்குள்ளது. கால் நடை அடிப்படைக் கிராமங்கள் 234 உள்ளன வென்றும் 39 செயற்கைக் கருத்தரிப்பு நிலையங்கள் உள்ளனவென்றும் அறிகிறோம். இவற்றைத் தவிர கால் நடைகளின் வழி மக்கள் உணவுக்கு இன்றியமையாத தான பால் உற்பத்தியைப் பெருக்கும் வழிகளும் ஆராயப் பெறுகின்றன. பம்பாய் நகருக்கு உள்ளது போன்றபெரிய பால்பண்ணை நிலையம்சென்னை நகருக்கு இல்லை யென்றாலும் அந்த அடிப்படையில் அரசாங்கம் மாதவரத்தில் சிறுக அமைத்து வளர்த்து வருவது போற்றற்குரியதாகும். இன்னும் சிறு நகரங்களி லும் பேரூர்களிலும் கூட்டுறவு வகையில் பால் பண்ணை அமைத்துப் பால் வளத்தைப் பெருக்குகிறார்கள் எனினும் இத்துறைகள் இன்னும் செழிக்க வழியுண்டு. வள்ளுவர் சொன்னபடி அவற்றை உண்மைச் செல்வ மாக மதித்து வளர்த்தால் உழவும் கிராமமும் மட்டு மல்லாது நாடே நலம்பெற்றோங்கும் என்பது உறுதி.

தமிழ் நாட்டிலேயே நல்ல வகையில் உழவு நடை பெறுகின்றது எனப் புள்ளிக் கணக்குகள் காட்டுகின் றன. தமிழ் நாட்டுச் செல்வ வளத்தில் பெரும்பகுதி பயிர்த் தொழில் மூலமே வருகின்றதெனக் கணக்கிட் டுள்ளனர். ஒரு கோடியே தொண்ணூறு லட்சம் ஏக்க ரில் 300 கோடி ரூபாய் மதிப்புள்ள விளை பொருள்கள் உண்டாகின்றன எனக் கணக்கிட்டுள்ளனர். பரந்த பாரதம் ஏக்ராவுக்கு ரூ. 152 பெறுமான பொருளை உற் பத்தி செய்ய; தமிழ் நாடோ, ரூ182 பெறுமான பொருளை உற்பத்தி செய்கின்றதெனக் கணக்கிட்டுள்ளனர். இதற்கு நாட்டில் அமைந்துள்ள சிறந்த நீர்ப்பாசன

வசதியே காரணம் எனக் காட்டுவர். எப்படியாயினும் கை வருந்தி உழைக்கும் தமிழர்கள் கலம் கொடுக்கும் பூமியைப் பிசைந்து பாடுபட்டு இருகலம் விளையச் செய்கின்றனர் என்பது உண்மை.

நீர்ப்பாசனம், நன்ருகக் கவனிக்கப் பெறுதல் வேண்டும்.

> 'ஏரினும் நன்ருல் எருவிடுதல் கட்டபின்
> நீரினும் நன்றதன் காப்பு'

என்று திருவள்ளுவர் உழவுத் தொழிலுக்கு ஏரும் எருவிடுதலும் நீர்ப்பாய்ச்சுதலும் பூச்சி முதலியவற்ருலும் விலங்கு முதலியவற்ருலும் சேதம் உண்டாகாமல் காப்பாற்றுதலும் மிகவும் இன்றியமையாது வேண்டப்படுவன என்பதை ஒரே குறளில் விளக்கி விட்டார். எனவே ஏருக்கும் எருவுக்கும் பயன்படும் கால் நடைகளைக் கவனிப்பதுடன் நீர்ப்பாசனத்தை நன்கு கவனித்தல் வேண்டும். தமிழ் நாட்டு விளை நிலங்களுள் 38% நீர்ப்பாசன வசதி பெற்றுள்ளன என்று சில ஆண்டுகளுக்கு முன் எடுத்த கணக்குக் காட்டுகின்றது. தற்போது சற்று அதிகமாக இருக்கலாம். தமிழ் நாட்டுப் பேராறுகளிலிருந் தெல்லாம் தண்ணீரை வீணுக்காமல் அணைகள் கட்டி, நாட்டின் பழம்பண்பாடுக்கு ஏற்ப "குளந் தொட்டு வளம் பெருக்கி' வருகின்ருர்கள். வடக்கே ஆரணியாறு மண்அணை தொடங்கி குமரி நாட்டுச் சிறு அணை வரையில் எண்ணற்ற அணைகள் நாட்டு வளத்தை வளர்க்கின்றன. மேட்டூர், குந்தா, பாபநாசம், தேக்கடி போன்ற பேரணைகள் பாசனவசதியோடு மின்சார வசதிக்கும் வாய்ப்பளிக்கின்றன. (இவை பற்றி விரிவாகப் பின் காணலாம்). இந்த மின்

சாரப் பெருக்கத்தினுல் நாட்டில் எண்ணற்ற கிணறு களிலிருந்து நீர் இறைத்துப் பாசனங்களுக்குப் பயன் படுத்துகிருர்கள். ஏரிகளும் அவற்றின் கால்வாய்களும் செப்பம் செய்யப் பெறுகின்றன. முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் 12.34 கோடி ரூபாய் செலவு செய்து ஏழு பெருந் திட்டங்கள் தீட்டி ஒரு லட்சத்து முப்பத்தி ரண்டாயிரம் ஏக்கருக்குப் பாசனவசதி உண்டாயிற்று எனக் கணக்கிட்டுள்ளனர். இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் பதிஞேறு திட்டங்கள் முடிவுற்று அவற் ருல் இரண்டு லட்சத்துக்கு மேற்பட்ட ஏக்கர் நிலங் களுக்குப் பாசன வசதி கிடைத்ததென்பர். மூன்ருவது திட்ட ஏற்பாட்டால் இன்னும் இரண்டரை லட்சத் துக்கு மேற்பட்ட ஏக்கர் நிலங்கள் பாசன வசதி பெற வாய்ப்பு இருக்கிறது போலும்! இவ்வாறு தமிழ் நாட்டு ஆறுகளை யெல்லாம் அணைகள் கட்டிப் பாசனத்துக் குப் பயன்படுத்தி உதவி செய்துள்ளார்கள். மேலும் தேவையான பாசனத்துக்கு அண்டை அங்க நாடுகளை நாட வேண்டியுள்ளது. பல ஆண்டுகளாக நாடியும் பயன் கிட்டவில்லை. குடி தண்ணீரும் கொடுக்க மறுக்கின்ற அளவில் அண்டை நாடுகள் மறுத்து, பலகோடி மதிப்புள்ள நீரைக்கடலில் கொண்டு சேர்க்கின்றன. இந்தியா ஒன்றிய நாடு என்று உணர்த் தியும் பேசியும் வரும் தலைவர்களும் இந்திய அரசாங்க மும் இவற்றைக் கவனியாதிருந்தால் நாட்டில் வேறு பாடு வளருமென்பது திண்ணம். வீணுகப் போகும் ஆற்று நீரை வேண்டிய உழவுக்கும் குடிப்பதற்கும் கூடப் பயன் படுத்த முடியாத நிலையில் நாட்டு ஒற்று மை வெறும் கேலிக் கூத்தாகவே முடியும். எனவே இந்திய அரசாங்கத்தார் தமிழ் நாட்டு அரசாங்க வேண்டுகோளை உடனடியாகக் கவனித்துத் தனது

ஆணைவழி ஆக்கத்துக்கு வழிகோலல் வேண்டும். அன்றேல் உழவுத்தொழில் பாதிப்பது மட்டுமன்றி சென்னை, கோவை போன்ற பெருநகரங்களில் வாழும் இலட்சக் கணக்கான மக்கள் குடிநீரும் இன்றி வாடுவர். இப்பெரு நகர்களில் நீர்தரமறுக்கும் அண்டை நாட்டு நம் சகோதரர்களும் எண்ணற்றவர்களாக இருக்கிறார்கள் என்பதையும் இங்கே நினைத்துப் பார்க்க வேண்டும்.

சிறு நீர்ப்பாசனங்களைப்பற்றியும் காணல் வேண்டும். நம் நாட்டில் சுமார் 27,000 ஏரி குளங்கள் உள்ளன. இவற்றைச் சீர்செய்ய, சென்ற இரண்டு திட்ட காலங்களிலும் சுமார் எட்டு கோடி ரூபாய் செலவு செய்துள்ளனர். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டகாலத்திலும் அதே தொகை ஒதுக்கப் பட்டுள்ளது. அண்மையில் புது ஏற்பாடுஒன்று நடைபெறுவதாக அறிகிறேம்-200ஏக்கருக்குக் குறைவாகப் பாயும் ஏரிகளைப் புதிதாக அமைக்கப் பட்ட பஞ்சாயத்து ஒன்றிப்பு (union) களிடம் ஒப்படைக்கும் திட்டம் போலும். அவை இச்சிறு ஏரிகளின் பொறுப்பை ஏற்றுத் திறம்படச் செயலாற்றலாம் என எதிர்பார்க்கலாம். ஆழமற்ற சில ஏரிகளை ஆழமாக்குவதற்கும் வருத்துக் கால்வாய்களை அகலமாக்கியும் ஆழமாக்கியும் வருத்தைப் பெருக்குவதற்கும் பல திட்டங்களை அரசாங்கம் மேற்கொண்டுள்ளது. இந்தத் திட்டத்தால் இரண்டாவது ஐந்தாண்டில் சுமார் முப்பத்தாறு லட்ச ரூபாய் செலவில் 47 ஏரிகள் ஆழமாக்கப் பட்டனவாம். மூன்ருவது காலத்திற்கு எண்பது லட்சம் ஒதுக்கப் பட்டுள்ளது போலும்.

கிணற்றுப் பாசனமும் ஓரளவு வளர்ச்சி பெற்றுள்ளது. சிறு குழாய்க் கிணறுகளும், சில விடங்களில்

தொழில்படுகின்றன. வடி குழாய்க் கிணறுகளும் அர சாங்கம் அமைத்துள்ளது. இதுவரை ஐயாயிரம் வடி குழாய்க் கிணறுகள் அமைக்கப் பட்டுள்ளதென அறி கிறோம். இவ்வாறு பல்வேறு வகையில் பாசன வசதி கள் செய்த போதிலும் நாம் மேலே கண்டபடி விளையும் நிலங்களில் மூன்றி லொரு பகுதிக்கே இப்பாசன வசதிகள் கிடைத்துள்ளன. அரசாங்கம் இன்னும் முயன்றால் விளையுள் பெருகும் என்பது உறுதி.

பாசனத்தைப் பற்றிக் கூறும்போது உழவுத் தொழிலும் பிற பெருந் தொழில்களும் மின்சார வளர்ச் சியும் எப்படி இணைந்துள்ளன என நினைக்க வேண்டி யுள்ளது. கிணற்றுப் பாசனங்களுக்குப் பயன் படும் இறவை இயந்திரங்களும் அவற்றிற்குத் துணையா கிய மின் இயங்கிகளும் (Electric Motors) செய்யப்படும் தொழிற்சாலைகள் நம் கண்முன் நடமாடுகின்றன அல்லவா! கோவையில் எத்தனைத் தொழிற்சாலைகள் இறவை இயந்திரங்களைச் செய்து முன்னேறி உள்ளன. மின்சார இயங்கியைச் செய்யும் பி. எஸ். ஜி. போன்ற தொழிற்சாலைகள் சில உள்ளன. இவை யெல்லாம் உருக்குத் தொழிலுக்கும் பயிர்த்தொழிலுக்கும் உள்ள உறவை வளர்ப்பது தானே.

அப்படியே நாடெங்கும் பரவிவரும் மின்சார வளர்ச்சியும் அதன் துணையாக வளரும் பல தொழில் களும் உழவுக்கு உதவுகின்றன அன்றோ! இப்படியே இன்னும் உழவுக்கு வேண்டிய பல பொருள்களைச் செய்யும் தொழிற்சாலைகளும் உள்ளனவே. எனவே தமிழ் நாட்டில் உழவுத் தொழிலால் வளரும் தொழிற் சாலைகள் பல என்பதை நாம் இங்கு உணர்ந்து நோக்க வேண்டும்.

ப்ாசனத்துக்கு அடுத்த படியாக உழவுத்தொழில் பெற வேண்டியது நல்ல எருவாகும். இயற்கை உரமாகிய சாணம் பாழ் படுத்தப்படுவதை முன்னமே கண்டோம். நம் நாடு காட்டுவளம் குறைந்த நாடானமையால் பசுந்தழை உரமும் அதிகமாகப் பெறமுடிவதில்லை. பசுந்தாள் உரம் பயிரிடுகின்ற முயற்சி பல ஆண்டுகளாக இருப்பினும் அம்முயற்சி நன்கு வெற்றி பெற வில்லை எனவே தோன்றுகிறது. ஓர் ஆண்டில் இத்தழை வித்துக்கள் குறைந்த விலையில் விவசாயிகளுக்கு 1500 டன் வழங்கப் பட்டுள்ளது. மூன்ருவது திட்ட காலத்துக்குள் எல்லா நிலங்களுக்கும் பசுந்தழை உரம் தரமுடியும் என முயலலாம். எனினும் மக்கள் அறிந்தோ அறியாமலோ அன்றி முடியாத பல காரணங்களாலோ பசுந்தழை உரத்தில் அதிகம் கருத்திருத்த வில்லை.

செயற்கை உரத்தின் தேவை நாளுக்கு நாள் வளர்ச்சி அடைந்து வருகின்றது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் தமிழ் நாட்டில் 48,000 டன் அமோனியம் சல்பேட் வழங்கப் பெற்றதாம். 60–61ல் ஒன்றேகால் லட்சம் டன்னுக்கு மேல் வழங்கப் பெற்றிருக்கலாம். அப்படியே சூப்பர் பாஸ்பேட் அறுபதாயிரம் டன்னுக்கு மேலாக வழங்கப் பெறுகின்றது. மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்துக்குள் இரண்டும் சுமார் ஏழு லட்சம் டன் பயன்படுத்தப் பெறும் போலும். எனினும் இன்றுள்ள பயிரிடும் ஏக்கர் கணக்கில் ஆறு லட்சம் டன் அமோனியம் சல்பேட்டும் மூன்று லட்சம் டன் சூப்பர் பாஸ்பேட்டும் தேவையாகும். இன்னும் உழவு வளர்ச்சி அடைய அடைய 1971ல் $7\frac{1}{2}$ லட்சம் டன் சல்பேட்டும் $3\frac{3}{4}$ லட்சம் டன் பாஸ்பேட்டும்

தேவைப்படும் என நிபுணர்கள் கணக்கெடுத்துள்ளனர். இவ்வளவு பெருந்தேவையை நம்நாடு நிறைவேற்றுமா என எண்ண வேண்டியுள்ளது. எனினும் அதற்கென பல உரத் தொழிற்சாலைகளும் அமைக்கப்பெறுகின்றன. நெய்வேலி, கோவை, தூத்துக்குடி முதலிய இடங்களில் உரத்தொழிற்சாலைகள் விரைவில் தொழிற்படத் தக்க நிலை காண்கின்றோம். இவ்வாறு உழவுத் தொழிலுக்குத் தேவையான எரு ஓரளவு சரி செய்யப்படுகின்றது. என்றாலும், கிராம மக்கள் சாணம் தழை போன்ற பல இயற்கை எருக்களைத் தங்கள் சூழலுக்கு ஏற்பவும் எளிதாகவும் ஆக்கிக்கொள்ள முயல்வார்களானால் மிக்க பயன் பெறுவார்கள் என்பது உறுதி

இத்தனையும் இருந்தும் உழவுத் தொழிலுககு நல்ல விதைகள் இல்லையானால் என் செய்வது? மக்கள் எத்தனையோ வகையில் தங்கள் தங்கள் தேவைக்கான விதைகளைத் தாங்களே ஆண்டுதோறும் சேர்த்து வைத்துக் கொள்ளுகிறார்கள். என்றாலும் காலக் கோளாறுகளாலும் நீர்க்குறைவாலும் பிற கொடுமைகளாலும் அடிக்கடி நல்ல விதைகள் எடுக்க முடிவதில்லை. சில ஏழை உழவர்கள் ஆறு மாதத்திற்குப்பின் வேண்டிய விதையைச் சேர்த்துவைக்கும் அத்துணைப் பொருளாதார நிலை யில்லாமலும் உள்ளனர். மற்றும் புதுமுறை ஆராய்ச்சியில் மண்ணையும் விதையையும் ஆய்ந்து 'இதற்கு இது பொருந்தும்', 'கதிரொருமுழமே நீளும் கட்டுமுக் கலமே காணும்' என்று விளக்க அரசாங்க விவசாயத்துறை தொழில்படுகிறது. எனவே நல்ல விதைகளைத் தேடித்தரும் பொறுப்பு அரசாங்கத்தையே சார்கின்றது. அவர்கள் மாவட்டந்தோறும் தக்கவர்களைச் சேர்த்து நல்ல விதைகளைத் தங்கள்

மேற்பார்வையினுலேயே உண்டாக்கித்தரக் கடமைப் பட்டுள்ளார்கள். ஆம், அந்த முறையில் தற்போது உழவர்களுக்குப் பல்வேறு விதைகள் பகிர்ந்தளிக்கப் பெறுகின்றன. தற்போது நல்ல விதைக்காக 136 அரசாங்கப் பண்ணைகள் உள்ளன வென்றும் தேவை 210 என்றும் கணக்கிட்டுள்ளனர். மற்றும் இந்த விதைகளை அரசாங்கத்தார் உழவருக்குக் குறைந்த விலைக்கும் கொடுக்க ஏற்பாடு செய்துள்ளனர் போலும். மற்றும் இந்த விதைகளை நல்ல முறையில் தயார் செய்பவர்களுக்கும் மானியம் அளிக்கின்றனர். இத்தகைய முயற்சிகளின் பயனுக நாட்டில் உழவுத் தொழில் நன்கு வளர்ந்துள்ளது எனக் கணக்கிட்டுள்ளனர். 1959-60ல் ஏக்கர் ஒன்றுக்குச் சராசரி 1,332 ராத்தல் அரிசி விளைந்துள்ளதென்றும் 1965-66ல் அது 1,890 ராத்தலாகப் பெருக வேண்டுமென்றும் அரசாங்கத்தார் திட்டமிட்டுச் செயலாற்றுகின்றனர். அப்படியே புன்செய்த் தானியங்களை ஏக்கருக்கு 712 ராத்தலுக்கு உயர்த்த முயல்கின்றனர்.

மண்வளப் பாதுகாப்பே உழவுக்கு அடிப்படை. நிலத்தைப் பண்படுத்தும்முறையிலும் சில(Consolidation of holding)மாற்றங்கள் செய்ய வேண்டியுள்ளன. இன்று நாட்டில் கூட்டுறவு முறையில் பயிர்த்தொழில் நடைபெற வேண்டுமென்ற திட்டத்தை அரசாங்கத்தாரே முன்னின்று செயலாற்றத் தொடங்கியுள்ளனரென்று அறிகிருேம். சிலர். அதைக் கடுமையாக எதிர்ப்பதையும் காண்கின்ருேம். என்ருலும் இக் கூட்டுறவுத் துறைவழி அமையும் உழவுத் தொழில் வெற்றி அடையுமா என்ற கேள்விக்கு எதிர்காலம்தான் பதில் சொல்ல வேண்டும் என்ற அளவில் நாம் அமையலாம். நில உடைமைபற்றியும் பல சட்டங்கள் வந்துள்ளன.

பெரும் அளவு நிலம் வைத்திருப்பது தவறு என்ற அடிப்படையில் தமிழ்நாட்டு அரசாங்கம் சட்டமே கொண்டுவந்து முப்பது ஏக்கர் என்ற மேல் வரம்பை வகுத்துள்ளது. எனினும் அதைச் சட்டமாக்கக் காலம் தாழ்ந்த காரணத்தால் அதனுல் உண்டாக வேண்டிய முழுப் பயனும் நாட்டுக்கு உண்டாகாமல் போயிற்று என்பது தெளிவு. அப்படியே ஜமீன்தார் போன்ற இடைநிலத் தரகர்களையும் அரசாங்கம் ஒழித்தது போற்றற்குரியது. அப்படியே கீழ்வரம்பும் வகுத்தாலன்றி நாட்டில் உழவு சிறக்க வழியில்லை. பல கிராமங்களுக்கு நேராகச் சென்று பார்த்தால் இவ்வுண்மை புலனுகும். ஒரு தனிமனிதன் பயிரிடக்கூடிய அளவுக்கு உரிய நிலம் ஒருவனுக்கு ஒரே இடத்தில் இருந்தால் அவன் அதைப் போற்றிப் பாதுகாப்பான். அந்த அளவு மூன்று அல்லது ஐந்து ஏக்கராக அமையட்டும். பல கிராமங்களில், 10 செண்டு, 5 செண்டு, நிலங்களை மேலும் பாகப்பிரிவினை செய்து கொண்டு ஒரு ஏக்கரில் பத்துப் பதினைந்து உரிமையாளர் இருந்துகொண்டு ஒருவருடன் ஒருவர் ஒத்துழைக்காமல் பல ஏக்கர் நிலங்களைத் தரிசாக விட்டிருப்பதைக் காணலாம். அவற்றையெல்லாம் ஒன்ருக்கி ஒருவரிடம் ஒப்படைத்தால் நன்கு பயிரிட முடியும். தமிழ்நாட்டில் சில ஆண்டுகளுக்கு முன் உந்துவண்டி (Bus) செலுத்துவோருக்குக் குறைந்தது இத்தனை வண்டிகள் இருக்க வேண்டுமெனச் சட்டம் செய்யவில்லையா! அப்படியே இதையும் செய்யலாம். இதனுல் ஏழைகளுக்குத் தொல்லை இராது. பலவிடங்களில் சிறு சிறு துண்டு நிலங்களாக வைத்திருப்பவர்கள் தத்தமக்கு உரிய ஒருசில ஏக்கர் நிலத்தை ஒரே இடத்தில் வைத்துக் கொண்டு முயன்று பயிர் செய்யலாம். நிலத்தின் தரம் இடத்துக்கு இடம் மாறு

பட்டிருக்கலாம். கூடுமானவரை அம்மாறுபாடு களையும் பிறவேறுபாடுகளையும் கருதி இவற்றைச் செயல்படுத்த விரும்புபவர்கள் சிறந்த வழியை மேற் கொள்ள வேண்டும்.

மற்றும் மண்வளப் பாதுகாப்பும் உழவின் ஒரு முக்கிய தேவையாகும். நம் நாட்டில் 1952-ல் நில கிரியல் இத்துறையில் அரசாங்கம் தொழிற்படத் தொடங்கிற்று. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் 17,000 ஏக்கர் அதன் எல்லைக்குட்பட்டுப் பாதுகாப்பு செய்யப் பெற்று, இரண்டாவதில் 87 லட்ச ரூபாயில் 133,900 ஏக்கர்கள் பண்படுத்தப்பட்டன. மூன்றாவது திட்டத் தில் 2½ கோடி அதற்காக ஒதுக்கப்பட்டுள்ளது. அரசாங்கம் அத்துறையில் கருத்திருத்திச் செயல்படின் நாட்டின் உழவு இன்னும் நனி சிறக்கும் என்பது உறுதி. இந்த அடிப்படையில் பல மாவட்டங்களில் உண்டாகும் கரை அரித்துக்கொண்டு போதல், வெள்ளத்தால் மண் சேர்தல் முதலிய கொடுமைகளையும் நீக்க முயல வேண்டும்.

நாட்டில் நன்செய், புன்செய் என இருவகை நிலங் கள் உள்ளன. வளமும் பாசன வசதியும் பெற்றவை முன்னவை. வான் நோக்கி வளமற்று நிற்பன புன் செய். முன்னதிலும் பின்னதே நாட்டில் அதிகமாக உள்ளது. நாம் மேலே காட்டிய சிலகாரணங்கள் அந்த நிலங்களிலும் பல பாகங்கள் பயிரிட முடியாத நிலையில் உள்ளன. மக்கள் முயன்றாலும் வெற்றியடையாத நிலையில் சில பகுதிகளும், அளவின் குறைவாலும் மாறுபாடுகளாலும் பிற சூழல்களாலும் விளையாத் நிலையில் சில பகுதிகளும் உள்ளன. சிலவிடங்களில்

நன்செய் விளையுளைவிடப் புன்செய் விளையுள் அதிக வருவாய் தருவதைக் காண்கிறோம். இவை அனைத்தும் உழவு இன்று சரியாகப் போற்றப்படாத காரணத்தாலே நடைபெறுகின்றன. தமிழ்ச் சமுதாயமும் தமிழ்நாட்டு அரசாங்கமும் ஒன்றிக் கருத்திருத்தி 'சுழன்றும் ஏர்ப் பின்ன துலகம்' என்ற வள்ளுவர் குறளை உணர்ந்து அவ்வுழவை வளர்க்க முயலவேண்டும்.

இனி இவ்வுழவின் மற்றொரு பகுதியைக்காணலாம். நம் நாட்டில் பெரும்பாலும் நன்செய் நிலத்தில் நெல் பயிரிடுவதைத்தான் காண்கின்றோம். சிலவிடங்களில் எண்ணெய் வித்துக்களும் சிலவிடங்களில் கரும்பு, புகையிலை போன்றனவும் பயிராகின்றன. மலைப்பகுதிகளில் காப்பி, தேயிலை முதலியன பயிராகின்றன. வாழையும், தென்னையும் தமிழ்நாட்டு எல்லா மாவட்டங்களிலும் உள்ளன. கேழ்வரகு, கம்பு போன்ற நவதானியங்களும் சிலவிடங்களில் பயிராகின்றன. தோட்டப் பயிர்களாகிய காய்கறி வகைகள் எல்லா இடங்களிலும் பயிராகின்றன. சிலவிடங்களில் பாக்கு, பருத்தி முதலியவையும் மலர்வகைகளும், பழவகைகளும் பயிரிடப் பெறுகின்றன. எனினும் இத்தகைய பயிர்களை உண்டாக்கிப் பயன் காணுவோர் மாற்றுப் பயிர் செய்யப் பெரும்பாலும் விரும்புவதில்லை. ஒவ்வொரு பகுதியிலும் அவ்வந் நிலத்தின் தரத்துக்கும் வளத்துக்கும் ஏற்ற பயிர்களைப் பயிரிடின் நல்லபயன் காணலாம். சிலவிடங்களில் உள்ள மக்கள் தங்கள் முன்னோர் பயிரிட்ட அதே வகையான பயிர்களையே பயிரிடுவாரேயன்றி வேறு பயன்தரும் பயிர்களைப் பயிரிடமாட்டார்கள். இந்த மனநிலை மாறவேண்டும். நிலத்துக்குத் தக்க வளமும் பொருளும் தரக்கூடிய வகையில் பயிர்த்

தொழில் பெருக வேண்டும். மற்றும் நம் நாட்டில் புதுப்புது பாசன வசதிகள் உண்டாகின்றன. அவற்றின் ஆக்கச் செலவுகளோ பெருகிக்கொண்டே போகின்றன. எனவே அவற்றின் வழி நீர்ப்பாசனம் பெறும் நிலங்கள் கட்டாயமாக அதிக நீர்வரி தர வேண்டியதாயிருக்கும். நாட்டின் பல திட்டங்களை நிறைவேற்றப் பொதுவான நிலவரியும் அதிகமாகலாம். எனவே அவற்றைச் சரிசெய்யத் தக்கவகையில் பயன் தரும் பயிர்களைப் பயிரிடல் அவசியமாகும். மற்றும் பயிரிடு முறைகள் பலவகையில் மாறுகின்றன. நம் நாட்டில் நாம் மேலே கண்டபடி மாற்றத்துக்கு மக்கள் மனவிருப்பம் இல்லாதிருந்தபோதிலும் எப்படியோ அவர்கள் அறிந்தோ அறியாமலோ சிலமாற்றங்கள் வந்துகொண்டே இருக்கின்றன. அவற்றின் வழி முயன்றால் நல்ல பயனைக் காணக்கூடிய வாய்ப்புகள் உள்ளன. அவ்வாறு பயிரிடுவோமாயின் சிறந்த பயன்கள் உண்டாகும். நவதானியத்துக்கும் நெல்லுக்கும் வேறுபாடு உண்டு. ஒரு ஏக்கரில் கீழ்க்கண்டபடி பயிரிடும் பயிருக்கு ஏற்ப வருவாய் மிகும் என உணரவேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| நவதானியம் | (ஒரு ஏக்கருக்கு) | 100 | ரூபாய் |
| எண்ணெய் வித்துக்கள் | ,, | 165 | ,, |
| நெல் | ,, | 226 | ,, |
| உருளை அல்லது வெங்காயம் | ,, | 670-680 | ,, |
| கரும்பு | ,, | 1100 | ,, |

இந்த அளவில் பயிர்ப் பொருள்கள் பயனளிப்பதறிந்தும் அவற்றை அறிந்து தொழில்படுத்தாதிருப்பது வருந்தத்தக்கதன்றோ! ஒருசில இடங்களில்

எல்லாவகைப் பயிர்களையும் பயிரிட முடியாது என்பது உண்மைதான். எனினும் இயன்ற வகையில் முயன்றால் நல்ல பயன் கிடைக்கும் என்பது உறுதி. இதனால் நெல் பயிரே நாட்டில் இல்லாது உணவு முட்டுப் பாட்டை உண்டாக்க வேண்டுமென்பது எனது நோக்க மன்று ; இயன்றவரை வருவாய் தரும் பயிர்களை உண் டாக்கினால் உழவர் தரம் உயரும் என்பதே நோக்க மாகும். அதற்கேற்றபடி நம்நாட்டில் மாவட்டத்திற்கு ஒரு சர்க்கரை ஆலைத் தொழில் வளம் பெற்று வரும் வகையில் அரசாங்கத்தார் ஆவன செய்துள்ளனர். தமிழ்நாட்டுப் பக்கநாடுகளில் உயர்ந்த விலையுள்ள பொருள்களை விளைவித்துப் பொருள் வளத்தையும் வாழ்க்கைத் தரத்தையும் வளர்த்துக் கொள்வதைக் காணும் நாமும் அத்துறையில் முன்னேற்றம் காண வேண்டுவது அவசியமாகும்.

இதுவரை கண்டவை அனைத்தும் உழவுத் தொழி லுக்கு நேரடியாகச் செய்யவேண்டிய ஆக்க வேலை களாகும். இனி இத்தொழிலில் ஈடுபட்டுள்ள கிராம மக்கள் இத்தொழிலுடன் இணைந்த வேறு பிறவற்றை மேற்கொள்வது பற்றியும் இவர்தம் விளைபொருள் களுக்குத் தக்க சந்தைகள் அமைப்பது பற்றியும் வேறு பிறவற்றைப் பற்றியும் கண்டு அமைவோம். கிராமங்களில் உள்ள மக்களுக்குப் பயிர்த்தொழிலில் நிறைய ஓய்வுவேளைகள் உண்டு . மற்றும் வயலில் நேரடியாக வேலை செய்யும் சில குடும்பங்களைத் தவிர்த்து, கிராமங்களில் பல பெண்கள் வேலை யற்றே வீண்நேரம் போக்கிக்கொண்டிருப்பர். மக்கள் வீணாக்கும் ஒவ்வொரு நொடியும் வளரும் சமூகத் துக்கு (நஷ்டமே) இழப்பே என்று உணரவேண்டும். உணர்ந்து உழவுப் பணியில் ஓய்வு பெறுபவரும் மற்ற

வரும் வேறு சில தொழில்களில் ஈடுபடலாம். அவற்றால் அவர்களும் நன்மை பெற்று நாடும் நலமடையும். உதாரணமாகக் கோழிப் பண்ணை அமைத்தல்–தேனீ வளர்த்தல்—புறு முதலியவைகளை வளர்த்தல் ஆகியவற்றைக் கொள்ளலாம். வீட்டில் உள்ள பெண்கள் நூல் வேலைகள், தத்தம் ஊரில் கிடைக்கும் ஓலை இலை முதலியவைகளைக் கொண்டு அழகிய பயன்படு பொருள்களைச் செய்தல், நூல் நூற்றல் முதலியவற்றில் தம்மை ஈடுபடுத்தலாம். வாய்ப்புள்ளவர்கள் இன்னும் பல்வேறு வேலைகளை மேற்கொண்டு நல்ல பயனை அடையலாம். அவ்வாறு கிராமத்தில் உள்ளார் அனைவரும் ஓய்வு வேளைகளைப் பயன்படுத்திப் பல்வேறு பொருள்களைச் செய்வார்களாயின் அவற்றை வெளியூர்களில் விற்கத்தக்க வகையினை அரசாங்கமே ஏற்பாடு செய்துதரும் என்பது உறுதி. ஊர்தொறும் கூட்டுறவு வகையில் பல குடிசைத் தொழில்கள் தொழிற் படுகின்றன என அரசாங்கம் கூறுகின்றது. (அதன் விவரம் மற்றோரிடத்தில் இடம் பெற்றுள்ளது) எனவே ஓய்வு நேரத்தைத் தமக்கும் நாட்டுக்கும் பயன்படும் வழியில் செலவுசெய்து உழவுத் தொழிலுடன் இவற்றால் வரும் வளத்தாலும் தங்கள் வாழ்வை வளம்படுத்திக் கொள்ள வாய்ப்பு உண்டு. ஜப்பான் போன்ற நாடுகளில் பெண்கள் ஓய்வுநேரங்களில் எத்தனையோ வகையான வேலைகளைச் செய்து எண்ணற்ற பொருள்களை வெளிநாடுகளுக்கு அனுப்புகிறார்களென அறிகிறோம். ஏன் நாமும் அவ்வாறு செய்து வளம்பெறலாகாது?

இவைகளைத் தவிர மற்றொன்றும் முக்கியம். உழவுத் தொழிலுக்குப் பசும் உரம் இன்றியமையாதது எனக் கண்டோம். அதற்கேற்ற மரஞ்செடிகள் நாடு

களில் – ஊர்களில் – அருகி வருவதைக் காண்கிறோம். பணத்தைக் குறிக்கோளாகக் கொண்டு பல பெரு மரங்களெல்லாம் வெட்டப்பட்டுச் சோலைகளெல்லாம் அழிக்கப்படுவதைக் காண்கிறோம். ஆனால் அதற்குப் பதிலாக வேறு மரங்களை வைத்து வளர்ப்பவர் மிகச் சிலரே. அரசாங்கம் பல ஆண்டுகளாக 'வன மகோற்சவம்' என்னும் செடி நடு விழா நடத்தியும் நாட்டில் நட்ட மரங்கள் தழைப்பது அருமையாக உள்ளது. அரசாங்கக் கணக்கே அதை நன்கு காட்டும். இதற்குக் காரணம் எதுவாயினும் ஆகுக. கிராம மக்கள், சிறப்பாகப் பயிர்த்தொழில் செய்து வாழும் மக்கள், தங்கள் ஊர்களைச் சோலை சூழ்ந்த ஊர்களாக்க வேண்டும். அதனால் அவர்கள் எண்ணற்ற பயன்கள் பெறுவார்கள்; முன்னாளில் பெற்றார்கள். நாம் மேலே கண்ட சாணம் எரிபொருளாக்கத் தேவை இருக்காது. அவரவர் தோட்டங்களில் விழும் சுள்ளிகளும் பிறவும் எரிக்கப் பயன்படுத்தப்படின் சாணம் நல்ல எருவாகி நன்செய் நிலங்களை வளப்படுத்தும். ஆடுகள் பெருகி நல்ல வளம்தரும் எருவினை நல்கும். மற்றும் சோலை களில் பழம்தரு மரங்கள் அதிகமாக இருப்பின் அதனாலும் நல்ல வருமானத்தைப் பெற வழி உண்டாக லாம். எல்லாவற்றிற்கு மேலாக சூடு அதிகமாகக் காணும் தமிழ்நாட்டில் சூடே காணாதபடி நல்ல பொழில் சூழ்ந்த குளிர்ச்சியில் வாழ்க்கையினை அமைத் துக்கொள்ளலாம். தமிழ் நாட்டில் அத்தகைய சோலை சூழ்ந்த ஊர்கள் அக்காரணத்தாலேயே பேர்பெற்றுச் சிறக்கின்றன. 'பைம்பொழில்' என்ற பெயருடனேயே செங்கோட்டைக்கு அடுத்து ஓரூர் இன்னும் அழ குடன் பொலிகின்றது. மாலிருஞ் சோலையும், பூந் தோட்டமும் அவற்றின் சோலையாலும் தோட்டத்தா

லும் பெயர் பெற்றவை அல்லவா ! எனவே சோலையை அமைத்துக் கொள்வது உழவர்தம் முதற் கடமை யாகும். இன்றும் சோலை சூழ்ந்த கிராமங்களுக்குச் சென்ருல் அக்கிராம மக்கள் அச்சோலைகளின் பயனை நன்கு ஆரத்துய்க்கும் சிறப்பினைக் காணமுடியும். இவைகளையன்றி நான் முதலில் காட்டியபடி சோலை களிலும், சிறு தோட்டங்களிலும் உள்ள பசுந்தழை உரம் வயலுக்கு நல்ல உரமாகி உயர்ந்தோங்க வாய்ப் பளிக்கின்றன. எனவே ஒவ்வொருவரும் தத்தம் ஊரைச் சோலை நகராக்கப் பாடுபடவேண்டும். இத்துறைக்கும் அரசாங்கம் ஆவனசெய்து வருகிறது, இனியும் என்றும் செய்யும் என்றும் நம்புகிறேன்.'

கடைசியாக ஒன்றுகூறி இந்த உழவுத் தொழில் பற்றிய கட்டுரையை முடித்துக் கொள்ளலாம் என நினைக்கின்றேன். இத்துறையில் அவ்வவ்வூர்மக்கள் பொறுப்பைக் காட்டிலும் அரசாங்கப் பொறுப்பே அதிகமாகும். அதுதான் சாலை அமைத்தல். நாம் மேலே கண்டபடி எவ்வளவோ உழைத்துப் பயி ரிட்டும் கைவருந்தியும் உண்டாக்கிச்செய்த பொருள் களைப் பெருக்கினுலும் அவற்றை உரிய சந்தை களுக்குக் கொண்டு செல்லமுடியாது மக்கள் வருந்து வதைக் காண்கிறேம். தேர்தல் காலங்களில் ஐந்தாண்டு களுக்கு ஒகு முறை-தேர்தலில் நிற்கின்றவர்கள் சுற்றி வருகின்ற ஒன்றைத் தவிர, பலர் அக்கிராமங்களைப் பிறகு எட்டிப்பார்ப்பதுகூடக் கிடையாது. அதிலும் இக்காலத்தில் அப்பெரியவர்கள் தற்காலப் போர்ச் சாதனையாகிய 'ஜீப்' (Jeep) என்னும் வாகனத்தில் எளிமையாகச் சுற்றிவந்து விடுகிருர்கள். எனவே கிராம மக்கள் தாங்கள் செல்வதற்கும் தாங்கள் விளைவித்த பொருள்களைச் செலுத்துவதற்கும் முடியாதவர்களாகி

மிகவும் வருந்துகிறார்கள். செப்பம் செய்த பெருஞ் சாலைகளையும், நெடுஞ் சாலைகளையும் திரும்பத் திரும்பச் செப்பனிடும் காட்சி நாம் காண்பதாகும். அவற்றை யெல்லாம் வேண்டாமென்று யாரும் சொல்லமாட்டார்கள். சமதர்மச் சமுதாயம் இச்சாலைகளையும் பொருந்தியதாக வேண்டுமென்பதே நம் கருத்து. பல பெரிய கிராமங்கள்கூடச் சரியான போக்குவரத்துச் சாலைகள் இல்லாமல் திண்டாடுகின்ற வேளையில் அதைக் கவனிக்காது விட்டால் கிராமங்கள் வளர்வது எங்கே? உயிர் நாடியாகிய கிராமங்கள் வாடினால் நாட்டு வாழ்வு மலர்வதெங்கே? எனவே அரசாங்கத்தார் கிராமச் சாலைகளுக்கு அதிகமாகச் செலவு செய்தல் வேண்டும். நம் மாநிலத்தில் கிராம ரோடுகள் பத்து ஆண்டுகளுக்குமுன் 6800 மைல் இருந்தன என்றும் பிறகு 2,850 மைல் மண் சாலைகள் போடப்பட்டன என்றும் அரசாங்கக் கணக்கு சொல்லுகிறது. உண்மைதான்! இந்தச் சாலைகள் நாட்டுக் கிராமங்களை இணைக்கப் போதுமா? கப்பியிட்ட கிராமங்கள் வழியாகச் செல்லும் சில சாலைகளும் உள்ளன என்பது உண்மைதான். என்றாலும் அச்சாலைகளைச் சென்றடைய இணைப்புச் சாலைகளாகக் கிராமங்களைச் சேர்க்கும் சுமார் 10,000 கல் தொலைவுள்ள மண் சாலைகளை உடனடியாகச் செப்பம் செய்யவேண்டும். இன்னும் இதுபோல் இரண்டு அல்லது மூன்று மடங்கு சாலை அமைத்தால்தான் எல்லா ஊர்களும் ஓரளவு போக்குவரவு நிலையில் வளர்ச்சியடைந்ததாகக் கொள்ள முடியும். இந்த வழியில் அரசாங்கம் அதிகம் கருத்திருத்த வேண்டுமெனக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

நாட்டின் உயிர்நாடியாகிய உழவுத் தொழில் இன்றைய நிலையில் நல்ல நிலையில் வளர்ச்சி அடைந்து

வருகின்றது, என்ருலும் இன்னும் நாம் மேலே காட்டியபடி சமுதாயமும் அரசாங்கமும் சேர்ந்து பல துறையில் இத்தொழிலை முன்னுக்குக் கொண்டு வரக் கடமைப்பட்டிருக்கிருர்கள். இவை அனைத்தும் உழவுத் தொழிலுக்கு நேர்முகமாகவும் மறைமுகமாகவும் உதவக்கூடியன. இவையன்றி அக்கிராம மக்கள் வாழ்க்கைத்தரம் உயரவும் வாழ்வின் தேவைகள் நிறைவு பெறவும் செய்யவேண்டிய வேலைகள் பல. நமது அண்மையிலுள்ள, தமிழர் பெரும்பாலராக வாழ்கின்ற இலங்கை, மலேயா முதலிய நாடுகளைக் காணின், ஒவ்வொரு கிராமமும் கல்வி, நலத்துறை போன்ற எல்லாவற்றிலும் தன் நிறைவு பெற்றனவாகவே உள்ளன. நாம் மேலே கண்டபடி 'பதியெழு வறியாப் பழங்குடி' மக்களாகவே அவர்கள் வாழ்கின்ருர்கள். ஆனால் நம் நாட்டில் மட்டும் பல கிராமங்கள் நாள் தோறும் சீரழிந்து நிலைகெட்டுவர, நகரங்கள் வளர்ந்து கொண்டேயிருப்பதைக் காண்கின்ருேம். வாழ்வின் அடிப்படைத் தேவைகள் அத்தனையும் அவ்வூர்களிலிருந்தால் ஏன் சென்னைநகர் தேடிப் பல ஏழைக் கிராமமக்கள் நாள்தோறும் வந்துகொண்டே யிருக்கிருர்கள்? சில செல்வர்கள் எத்தனையோ பல காரணங்களுக்காக வரலாம். ஆனால் ஏழைகள் அடிப்படை வாழ்வுக்காக உணவு, உடை, உறையுள் இவை காரணமாகத் தானே ஊர்விட்டு ஓடி வருகிருர்கள். இந்த நிலையைத்தடுக்க வேண்டுமென அரசாங்கத்தார் அடிக்கடி கூறுகின்ருர்கள். ஆனால் அதற்கேற்ற வகையில் செயலாற்றவேண்டும். நம் தமிழ்நாட்டில் உள்ள எல்லாக் கிராமங்களும் அடிப்படைத் தேவைகளில் தன் நிறைவு கொள்ளவேண்டும். அதுவரையில் சில்காலம் நகரங்களின் வளர்ச்சி தடைபடினும் படுக

என்னும் அளவுக்குச் செயலாற்ற வேண்டும். சில ஆண்டுகளுக்குமுன் பல்கலைக் கழகங்களில் பட்டம் பெறும் மாணவர்கள் ஓராண்டு கிராமப்பணி செய்த பின்பே படிப்பு முடிவு பெற்றதாகக் கொண்டு பட்டம் வழங்கவேண்டும் என்ற உணர்வும், அதற்கேற்பத் தொழிற்படு சாத்தியக் கூறுகளும் உண்டானதறி வோம். எனினும் அது இன்று பேசப்பெறவில்லை. ஒரு வேளை செயலாற்ற வேண்டியவர்களையே அது பாதித்து விட்டதோ- என மக்கள் எண்ணுவது உண் மையோ என நினைக்கவேண்டியுள்ளது. எனவே அர சாங்கம் தன் நிலையிலிருந்து இரங்கி அவலமுற்று வாடும் கிராமமக்களின் தேவைகளை முதலில் நிறை வேற்றவேண்டும். அப்போதுதான் உயிர்நாடியாகிய பயிர்த்தொழில் வளம்பெறும்.

கிராமங்களிலுள்ள சமுதாய ஏற்றத் தாழ்வுகள் போக்கப் பெறவேண்டும். அதற்கெனச் சட்டசபைகள் வெறும் சட்டங்களைச் செய்வதோடு அமையாது ஒவ் வோர் ஊரிலும் அவற்றைச் செயல்படுத்த முன்னிற்க வேண்டும். பெருஞ் சீர்திருத்தங்களைச் செய்ய முதலில் பல இடர்ப்பாடுகளும் எதிர்ப்புகளும் தோன்றுவது இயற்கையே. எனினும் எதுவரினும் அஞ்சாது எல்லாத் துறைகளிலும் செயலாற்றிவரும் தமிழ்நாட்டு அர சாங்கம் இத்துறையில் இன்னும் சற்று அதிகக் கவனம் செலுத்திப் பாடுபட்டுக் கிராமமக்களின் வாழ்வையும் வளத்தையும் பெருக்கி அவர்வழி தமிழ்நாட்டில் பழங் காலந் தொட்டுப் போற்றி வளர்த்த-இன்றும் உயிர் நாடியாக இருக்கின்ற-உழவுத் தொழிலை வளர்த்துத் தானும் வளர்ந்து சிறப்படைய வேண்டுமெனக்கேட்டுக் கொள்ளுகிறேன்.

# 9. நெய்தல் தொழில்—கைத்தறி

மக்கள் வாழ்விற்கு அடிப்படைத் தேவைகளைக் காணும் போது உணவு முதலாவதாகவும் உடை இரண்டாவதாகவும்' இடம் பெற்றிருப்பதைக் கண்டோம். மனிதன் உயிர் பெற்ற உடன் வேண்டுவது உணவு; உணர்வு பெற்றபின் தேவைப்படுவது உடை. உணவே உயிரினும் ஓம்பப்பட வேண்டுவதாகும் என்று ஆன்றோர்கள் கூறுவர். உயிரினும் நாணே சிறந்தென்றும் இரண்டில் ஒன்றைவிட வேண்டுமாயின் நாணினைக் காப்பாற்றி உயிரையே நல்லவர்கள் விட்டுவிடுவார்கள் என்றும் இலக்கியத்திலும் வரலாற்றிலும் வாழ்க்கையிலும் காண்கின்றோம். அத்தகைய உயிரின் சிறந்த நாணினையும் உணர்வையும் காப்பாற்றுவது ஆடையாகும். 'ஆடை இல்லா மனிதன் அரைமனிதன்' என்ற பழமொழி தமிழ் நாட்டின் பழைய மொழியாகும். இந்த ஆடையைத் தமிழ் நாட்டு மக்கள் வரலாறு உணரும் நாட்களுக்கு முன்பிருந்தே அறிந்திருந்தார்கள். நாம் இந்த நூலின் முதல் தலைப்பில் கண்டபடி இன்றைக்கு இரண்டாயிரமாண்டுகளுக்கு முன்பே தமிழ் நாட்டு

மக்கள் பட்டினும் மயிரினும், பருத்தியினும் பல்வேறு வகைப்பட்ட வண்ண ஆடைகளை உடுத்தியிருந்தார்கள் எனக் காண்கின்றோம். எனவே தமிழ் நாட்டில் நெசவும் தொன்மைவாய்ந்ததாகும். இன்றும் பெரும் ஆலை நகர்களில் காண்பது போன்ற அளவிறந்த நிலையில் ஆடைகளைப் பலவகையில் பெருக்கா விட்டாலும் அன்றைய தமிழ் நாட்டில் மக்கள் — சிறப்பாகப் பெண்கள்— நல்ல வண்ண ஆடைகளை நெய்யக்கற்றிருந்தார்கள் என உணர்கின்றோம். தமிழ் நாட்டில் பெரும்பாலும் நெசவு ஊர்தோறும் வீடு தோறும் இருந்த ஒரு தொழில். தமிழ் நாட்டு மக்கள் அவரவர்களுக்கு வேண்டிய வாழ்க்கைப் பொருள்களை அவரவர்களே தயாரித்துக் கொண்டார்கள் எனக் கண்டோம். அந்த வகையில் ஆடையும் ஒன்றாக அமைந்தது எனக் காண்கின்றோம். அந்த நிலை இன்னும் நம்நாட்டில் மறையாது நிற்கின்றது. அதையே நாம் இன்று கைத்தறி நெசவு என்று போற்றுகிறோம். இன்று அது வீடுதோறும் இல்லையென்றாலும், இந்தியாவை நோக்கத் தமிழ் நாட்டில் பெரும்பாலான மக்கள் கைத்தறிநெசவாலேயே வாழ்ந்து வருகிறார்கள். நெசவாளிகளின் வீடுகளில் ஆண்களும் பெண்களும்கலந்தே இந்தத்தொழிலைச் செய்வதை இன்றும் காண்கின்றோம். பழங்காலத்தில் பெண்கள் பஞ்சியைத் துப்புரவு செய்து இழைத்து நூலாக்கித் தர ஆடவர் அவற்றை ஆடையாக நெய்வார்கள் போலும் இன்று கைத்தறி நெசவு பெருவாரியாக நடைபெற்று நகரங்களில்— பட்டு இழைகளையும், நூல் இழைகளையும் பக்குவப் படுத்தித் தரும் பணியைப் பெண்களே மேற்கொள்ளுகிறார்கள். இவற்றையெல்லாம் எண்ணியே இடைக்கால இலக்கணப் புலவர் இலக்கிய நூலுக்கும், நெசவு நூலுக்கும் தொடர்பு உண்டாக்கி

அழகான வெண்பாவையே பாடி விட்டுச் சென்றார்: பவணந்தியார் தம் நன்னூல் பாயிரத்தில்,

> ‘பஞ்சிதன் சொல்லாப் பனுவல் இழையாகச்
> செஞ்சொற் புலவனே சேயிழையா— எஞ்சாத
> கையே வாயாகக் கதிரே மதியாக
> மையிலா நூல்முடியு மாறு’

என்று பாடியுள்ளார். எனவே, இழைத்து நூலாக்கிப் பாவோட்டி அமைக்கும் பணியைப் பெரும்பாலும் பெண்கள் செய்தார்கள் என அறிகின்றோம். இன்றும் நெசவாளியின் வீட்டுக்கு நாம் செல்வோமாயின் ஆண் பெண் அனைவரும்—பல குடும்பத்தவரும்— ஒன்றுகூடி இந்த நெசவுத் தொழிலில் ஈடுபட்டு ஒற்றுமையாகத் தொழிலாற்றுவதைக் காண்கின்றோம். இங்கே தமிழ் நாட்டில் இன்று இந்தத் தொழில்–கைத்தறித் தொழில்– எந்த நிலையில் உள்ளது என்பதை அத்துறையில் வல்லவர் அறிந்துள்ள மதிப்பீட்டின்படியே காண லாம்.

நாட்டில் எத்தனையோ குடிசைத் தொழில்கள் வளர்ந்து வருகின்றன. குடிசைத் தொழில் அடிப்படை யில் பார்த்தால் கைத்தறி பெரிய—முதலில் உண் டான—குடிசைத் தொழில் என்றும் சொல்லி விடலாம். நாட்டில் உள்ள ஏழை மக்களுள் பலரையும் வாழ வைப்பது இந்த நெசவுத் தொழிலேயாகும். இன்றும், காஞ்சிபுரம் ஈரோடு போன்ற பெருநகரங்களிலும் பல கிராமங்களிலும் நெய்தற்தொழில் சிறப்பாக நடைபெறு வதோடு அந்த மக்கள் வாழ்வுப் போராட்டத்துக்கும் வழி சொல்லும் ஒரு தொழிலாக அமைந்துள்ளது. எனவே தமிழ் நாட்டுத் தொழில் வளத்துள் “கைத்தறிநெசவு,

இடம் பெறவில்லையானால் இந்நூல் நிறைவு பெற்ற தாகாது.

தமிழ்நாடு கூட்டுறவுத் துறையிலும் பிற உற்பத்தி நாடுகளைக் காட்டிலும் நல்ல முன்னேற்றம் கண்டிருப் பதை யாவரும் அறிவர். இந்தக் கைத்தறித் துறையில் அக்கூட்டுறவு பெரும் பங்கு கொண்டுள்ளது. தமிழ் நாடு கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கம் ஒரு பெரிய நிலையமாகக் கடந்த இருபத்தைந்து ஆண்டு களாக நாட்டு மக்களுக்குப் பயன்பட்டு வருகிறது. இந்தக் கூட்டுறவுச் சங்கம் 1935ல் ஆரம்பிக்கப் பெற் றது. நாட்டிலுள்ள அடிப்படைச் சங்கங்கள் பலவற் றையும் இணைத்து இச்சங்கம் பல இலட்சம் மக்களுக்கு உதவி செய்து வருகின்றது. ஏதோ வயிற்றுப் பிழைப் புக்கென வாழ்ந்த ஏழைமக்கள் வீடுகளை அழகுபடுத்தி இத்தொழிலை நன்கு திறம்பட நடத்தி, இதை வாணிபத் துறையில் வளம்படுத்தி பல்வேறு வகையில் செழிக்கச் செய்து, நெசவாளியையும் உலகில் வாழும் பிறமக்களுக் குச் சமமாகத் தலை நிமிர்ந்து வாழவைக்க வேண்டு மெனவே இச்சங்கம் தொழிலாற்றுகின்றது. எனவே நூல் முதலிய எல்லா மூலப்பொருள்களையும் நெய்தற் கருவிகளையும் இச்சங்கம் நேரடியாகவும் அரசாங்கத் தின் மூலமும் குறைந்த விலைக்கு மொத்தமாகப் பெற்றுத் தன் கீழ் உள்ள எல்லாக் கிளைச்சங்கங்களுக்கும் பகிர்ந் தளிக்கின்றது.. அப்படியே எல்லா அடிப்படைச் சங்கங் களும் கிளைச் சங்கங்களும் உண்டாக்கும் பலவகை யான துணிகளைத் தமிழ் நாட்டிலும் இந்தியாவின் பிற பாகங்களிலும் வெளி நாடுகளிலும் விற்கத் தக்க ஏற் பாடுகளையும் செய்து தருகின்றது.

இப் பெருஞ்சங்கம் அரசாங்கத்தினிடத்தும் 'ரிசர்வ் பாங்கி'யினிடத்து மிருந்துபெரும் பெருந் தொகைகளைக்

குறைந்த வட்டிக்குக் கடனுகப் பெற்று நூல் முதலிய பொருள்களை வாங்கித் தன் கீழ் உள்ள பதினைந்து கிளைப்பகுதிகள் மூலம் (units) எல்லா அடிப்படைச் சங்கங்களுக்கும் பகிர்ந்தளிக்கின்றது. ஓர் ஆண்டில் (59-60) இரண்டு கோடி ரூபாய்க்கு மேல் நூல் வாங்கி இது பகிர்ந்தளித்துள்ளது. இதற்கிடையில் இச்சங்கமே கூட்டுறவு அமைப்பில் திருநெல்வேலிப் பேட்டையில் ஒரு கூட்டுறவு ஆலையை அமைத்து அதன் வழியும் நூல் உண்டாக்கிச் சங்கங்களுக்கு உதவுகின்றது. அதற்கென இச்சங்கம் 15 லட்சம் மூலதனத்தை அளித்துள்ளது. அப்படியே பல அடிப்படை நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களும் இந்த ஆலையின் மூலதனத்துக்கு உதவ முன்வந்தன. 1958ல் 8000ம் கதிர்களோடு இவ்வாலை தொழிற்படத் தொடங்கிற்று. அடுத்து மற்ருெரு 8000ம் கதிர்களுடனும் வேலை செய்ய இடம் பெற்றுள்ளது. இது தனியார் துறையே இல்லாது எல்லாவற்றையும் கூட்டுறவுச் சங்கங்களும் அரசாங்கமுமே ஏற்றுத் தொழிலாற்றும் ஒப்பற்ற தனி நிலையில் உள்ளது:

| | |
|---|---|
| தமிழ் நாட்டுக் கூட்டுறவு சங்கம் | 15,15,000 |
| அடிப்படைச் சங்கங்கள் | 16,71,700 |
| தமிழ்நாட்டு அரசாங்கம் | 10,10,100 |
| | 41,96,800. |

ஆகச் சுமார் நாற்பததிரண்டு இலட்ச ரூபாய்ச் செலவில் கூட்டுறவு ஆலை இயங்கி வருகின்றது. '20s' எண் நூலையே இது உற்பத்தி செய்கிறது. மாதம் ஒன்றுக்கு 750 பேல்களை இது உற்பத்தி செய்து உதவுகின்றது எனக் கணக்கிட்டிருக்கிருர்கள்.

இதைத் தவிர துணிகளுக்குப் பூ போடல், வண்ணம் இடல், நூல்களுக்கு வண்ணம் இடல் ஆகிய பல துறைகளில் இச்சங்கம் ஆவன செய்து கைத்தறி நெசவை எத்துணைக்கு வளர்க்க முடியுமோ அத்துணை அளவிற்கு வளர்த்து நாட்டின் பொருளாதாரத்தை உயர்த்துவதோடு பல இலட்சம் ஏழை மக்களின் வாழ்வுக்கும் வழிகாட்டியாக உள்ளது. இன்றும் சில நெசவாளிகள் இச் சங்கத்துடன் இணையாது இருப்பார்களெனினும், எல்லா விதமான வசதிகளையும் பயன்களையும் கருதிப் பெரும்பாலான நெசவாளிகள் இதன் அடிப்படைச் சங்கங்களில் உறுப்பினராகி இத் தொழிலை ஒரு கூட்டுப் பெருந்தொழிலாகவே நடத்தி வருகின்றார்கள். இத்துறைக்கு வேண்டிய நூல் அல்லது ஆடை தூய்மைப்படுத்தும் சாதனங்களையும் அதற்கு வேண்டிய பொருள்களையும், பூ பொறிக்கும் இயந்திரம் முதலியவற்றையும் தேவையானவர்களுக்குத் தந்து உதவும் வகையில் பல ஏற்பாடுகளை இச்சங்கம் செய்து வருகின்றது. அதற்கென ஏற்றுமதி இறக்குமதி உத்தரவுகளைத் தமிழ் நாட்டு, மத்திய அரசாங்கங்களிடமிருந்து பெற்று எல்லோருக்கும் பயன்படும் வகையில் இது உதவி செய்கின்றது. தனியார் இயல்பாகப் பெறமுடியாத பல இத்தொழிற்குத் தேவையான உதவிகளை இது கூட்டாகப் பெற்றுத் தன் பிரிவுகள் மூலமும் அடிப்படைச் சங்கங்கள் மூலமும் எல்லோருக்கும் கொடுத்து உதவுகின்றது.

நூல்கள் மட்டுமன்றிச் செயற்கைப்பட்டு, பட்டு, ஆகியவற்றினும் இச்சங்கம் தொழிற்படுகின்றது. அதற்கு வேண்டிய செயற்கைப் பட்டினை இறக்குமதி செய்யவேண்டிய 'பர்மிட்'ஐ இது அரசாங்கத்திடமிருந்து

பெற்றுள்ளது. கடலூரில் நெசவுத் தொழிற்சாலை ஒன்றும் மதுரை, சென்னை, சேலம், நெல்லை ஆகிய விடங்களில் மாதிரி நெசவுச்சாலைகளும் (Pattern weaving factories) இச்சங்கம் வைத்துத் தொழிலாற்றி வருகின்றது. ஆகவே பட்டினும், செயற்கைப் பட்டினும் பெருமளவில் பருத்தியினும் ஆடையை உற்பத்தி செய்யும் பெரும் கூட்டுறவு நிலையமாக இது விளங்குகின்றது.

இவ்வளவை உற்பத்தி செய்து விட்டு இது விற்பனைக்கு வழிகாணு விட்டால் என்னுவது? எனவே உற்பத்தியாகும் பொருள்களை விற்கத் தக்க எல்லா ஏற்பாடுகளையும் இது செய்து வருகின்றது. முன்னூறுக்கு மேற்பட்ட விற்பனைக் கடைகள் நாட்டின் பல பாகங்களினும் இதன்வழித் தொழிற்படுகின்றன. சுமார் இரண்டரை கோடி ரூபாய்க்கு மேல் ஆண்டொன்றுக்கு இவற்றின் வழியே விற்பனை நடந்து வருகின்றது. தமிழ் நாட்டுக்கு வெளியிலேயும் இந்தியாவுக்கு வெளியிலேயும் பல விற்பனை நிலையங்களை இது அமைத்துள்ளது. மற்றும் பல நாடுகளுக்கு இது கைத்தறித் துணிகளை ஏற்றுமதி செய்கின்றது. சில சமயங்களில் விற்பனை ஆகாது பொருள்கள் தேங்கிக்கிடக்கும்போது அரசாங்கம் கடன்கொடுக்க முன் வந்து நெசவாளிகள் வேலை குறைபடாதிருக்கும் வகையில் பார்த்துக்கொள்ளுகின்றது. தமிழ் நாட்டில் சுமார் ஆயிரம் அடிப்படைக் கூட்டுறவு நெசவுச் சங்கங்களும் இரண்டு இலட்சம் தறிகளும் உள்ளன. இவை அனைத்தும் கூட்டாக ஒரே குடும்பமாக நாட்டின் தேவையான அடிப்படைத் தேவையான ஆடையினைச் செய்து நல்கும் பணியினை மேற்கொள்ளுகின்றன. இந்தியாவிலேயே இது

போன்ற பெருங் கூட்டுறவு நிலையம் வேறு இல்லை என்லாம். இத்துணைப் பெருமளவு உதவிகளைப் பெற்றபோதிலும் சில ஆண்டுகளில் எதிர்பாராதபடி பெரும் தொல்லைகள் உண்டாகின்றன. அவைபற்றிப் பின் காணலாம். இனி இந்தக் கூட்டுறவுச் சங்க அடிப்படையிலும் பிறவகையிலும் தமிழ் நாட்டில் வளர்ந்து வரும் இக் கைத்தறித் தொழில் பற்றிய விவரங்களைக் தொடர்ந்து காண்லாம்.

இந்திய நாட்டுத் திட்டங்களின் அடிப்படையில் இத்தொழிலுக்கும் ஓரளவு பாதுகாப்பும் பொருள் உதவியும் இருந்து வருகின்றன. வளர்ந்து வருகின்ற நெசவு ஆலைகளுடன் இத்தொழில் போட்டியிட முடியாது என்பதை அறிந்து, ஆலைகளிடம் இதன் உதவிக்கென ஓரளவு 'செஸ்' என்ற பெயரில் வரி வசூல் செய்து, அதைக் கைத்தறி வளரக் கொடுத்து உதவு கிறார்கள். அந்தத் தொகையே பெரும்பாலும் கைத்தறி ஆடையில் தள்ளுபடிக் கணக்காக வரும் தொகை யாகும். இக் கைத்தறிக்கு அடிக்கடி சரிவு நேர்தல் இயற்கையாக அமைந்துவிட்டது. ஒரு பத்தாண்டு களுக்குமுன் இத்தொழிலில் உண்டான பெரு மந்த நிலை யும் அதனால் நெசவாளிகள் வாடி வருந்தித் தெரு தோறும் பிச்சை ஏற்ற காட்சியும் இன்னும் தமிழ் மக்கள் கண்ணிலிருந்தும் கருத்திலிருந்தும் மறைந் திருக்க வழியில்லை; அத்தகைய கொடிய நிலையி லிருந்து மெல்லத் தப்பி இன்று சற்று நன்றாகவே வளர்ச்சி பெற்றுள்ளது எனலாம். அந்தக் காலத்தில் நாட்டின் இப் பழந்தொழில் அடியோடு நசித்துவிடுமோ என்று அஞ்சக்கூடிய பெருநிலையே உண்டாகி விட்டது. எனினும் இத்துறையில் செயலாற்றிய நல்ல

தலைவர்களும் அவர்தம் முயற்சிகளுக்குச் செவி சாய்த்து உதவிய அரசாங்கங்களும் கைதூக்கித் தந்த நல் உதவியினாலேயே இன்று கைத்தறி வாழ்கின்றது. இன்றும் கைத்தறித் தொழில் நிலையாக வளரும் என்ற நிலை நாட்டில் அமையவில்லை என்பர். நெசவு ஆலைகள் தமிழ் நாட்டில் அதிகமாக இல்லையேனும் வடநாட்டுப் பல பகுதிகளில், சிறப்பாக, குஜராத் மராட்டியப் பகுதிகளில் உள்ளன. அவற்றோடு போட்டியிட முடியாத நிலையில் ஓரளவு முயன்று கைத்தறித் தொழில் மெல்ல நகர்ந்துகொண்டே இருக்கிறது.

இன்றைய நாட்டுத் தேவையான ஆடைவகையில் நான்கில் ஒரு பகுதியைக் கைத்தறியே நிறைவு செய்கின்றது. இந்தியா முழுவதும் ஒன்றரை கோடி மக்கள் இத்துறையில் நேர்டியாகவும் மறைமுகமாகவும் பாடுபட்டு வாழ்ந்து வருகிறார்கள். கடந்த இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களாலும் இத்துறை ஓரளவு வளர்ச்சி பெற்று வந்துள்ளது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் கைத்தறிக்கு இந்திய அரசாங்கம் 36½ கோடி ரூபாய் ஒதுக்கி இருந்தது எனக்கணக்கிடுவர்.

கைத்தறி வளர்ப்பதாக அனைத்திந்தியாவுக்கு ஒரு கைத்தறி போர்டினை (All India Handloom Board) அரசாங்கத்தார் நிறுவினர். மற்றும் ஆலைகள் உண்டாக்கும் ஒவ்வொரு சதுர கெஜத் துணிக்கும் 1.625 காசு 'செஸ்' வசூல் செய்து அதில் பெரும்பகுதியைக் கைத்தறியின் வளர்ச்சிக்குப் பயன் படுத்தினர். அனைத்திந்திய அளவில் அரசாங்க நேரடி உதவியாலும் 'செஸ்' உதவியாலும் கடந்த பத்தாண்டுகளில்

கைத்தறி நன்கு வளர்ச்சி யடைந்தே வந்துள்ளது. 1952ல் 110 கோடி கஜம் உற்பத்தி செய்த கைத்தறித் தொழில் 1959ல் 186 கோடி கஜம் துணியை உற்பத்தி செய்தது என்றால் அதன் வளர்ச்சி மிகப் பெரிய ஒன்று தானே!

இத்துணை வளர்ச்சி யடைந்த போதிலும் உள் நாட்டு வெளிநாட்டு வாணிபத் துறைகளாலே அவ்வப் போது குறை நேர்வதைக் காண்கிறோம். சீன நாட்டொடு கொண்டிருந்த வெளிநாட்டுவாணிபம் பேரளவு பாதிக்கப் பட்டதோடு உள் நாட்டிலேயும் ஆலை உற்பத்திப் பெருக்கத்தாலும் இதன் வளர்ச்சி தடைப்படுகிறது. வேறுபிற வெளிநாடுகளில் நடைபெற்றுவந்த வியாபாரமும் பலவகைகளில் குறைபட்டுள்ளது. மக்களின் மனமறிந்து பல்வேறு வகைகளிலும் பல்வேறு வண்ணங்களிலும் ஆடைகளை உற்பத்திசெய்தாலும், ஆலைவளர்ச்சியின்போட்டியினால் அதிகம்வளர்ச்சியில்லை. எனவே இதற்கு நிலைத்த தீர்வு காண வேண்டுமென விழைகின்றனர். ஆடை வகைகளுள் வேட்டி, புட்டவை இரண்டு ரகங்களையும் தனியாகப் பிரித்துக் கைத்தறிக்கு ஒதுக்கி விட்டால் இதற்கு ஓரளவு விடிவு காலம் உண்டாகும் என்பதே அத்துறையில் உள்ளவர் தம் முக்கிய நோக்கமும் கருத்து மாகும். நாட்டின் பொருளாதார நிலையை உயர்த்தும் வகையில் இத்துறை ஓரளவு சிறக்கத் தொழிலாற்ற வேண்டுமானால் உண்மையிலே இது நன்கு அரசாங்கத்தாரால் பாதுகாக்கப் படவேண்டும்.

அகன்ற பாரத நாட்டில் இக் கைத்தறித் தொழில் சிறந்திருந்தாலும் இதில் பெரும்பாகம் தமிழ் நாட்டில்

தான் உள்ளது. இந்தியாமுழுவதுக்கும் சுமார்27லட்சம் தறிகள் உள்ளன. அவற்றுள் 12 லட்சம் தென்னாட்டில் உள்ளன. அவற்றுள் சுமார் ஐந்து லட்சம் தறிகள் தமிழ் நாட்டிலேயே உள்ளன. இந்த ஐந்து லட்சம் தறிகளை நம்பி இருபத்தைந்து லட்சம் மக்கள் வாழ்ந்து நாட்டின் தேவைக்கும் உதவுகிறார்கள். எனவே கைத் தறித் துறையில் தமிழ்நாடு மிக முக்கிய இடத்தைப் பெற்றிருக்கின்றது. முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இந்திய அரசாங்கம் ஏற்படுத்திய சில திட்டங்களாலும் 'கனுங்கோ கமிட்டியார்' வரையறுத்ததன் முறைகளாலும் இத்துறைக்குச் சிலவகையான நெசவுகள் ஒதுக்கப்பட வேண்டுமென்று தீர்மானிக்கப் பெற்றது. கைத்தறி நெசவாளிகள் ஆண்டொன்றுக்கு முன்னூறு நாளுக்கு வேலைபெறும் அளவுக்கு இத்தொழில் கட்டாயம் பாதுகாக்கப்பெற வேண்டுமெனக் 'கனுக் கமிட்டி' சிபார்சு செய்தது என அறிகிறோம்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் திட்டக் கமிஷனால், அனைத்திந்திய அடிப்படையில் அமைக்கப்பெற்ற 'கார்வே கமிட்டி'யினால் செய்யப்பட்ட சிபார்சாலும் பெரும் ஆலைத் தொழிலுக்கும் சிறு கைத் தறித் தொழிலுக்கும் இடையில் உண்டாக்கப் பெறும் ஒப்பந்த வகையில் சில நல்ல முடிவுகளைப் பெறலாம் என்ற நிலை ஏற்பட்டது. கைத்தறித் தொழிலாளர்கள் தங்கட்கு வேட்டி, புடவை நெய்யும் முழு உரிமையையும் ஒதுக்க வேண்டுமெனக் கேட்டுக் கொண்டே வற்புறுத்தினர். அத்துடன் உற்பத்தி நிலையிலும் சில வரையறைகள் செய்ய வேண்டுமெனக் கோரியிருந்தனர். அவர் தம் கோரிக்கைகள் முழு அளவில் வெற்றி தரவில்லை; என்றாலும் ஓரளவில் சில

வரையறைகள் செய்யப்பெற்றன. அதன் நிலை வருமாறு:

இந்திய நாட்டில் இரண்டாம் திட்ட இறுதிக் காலத்தில் 40 கோடி மக்கள் இருப்பார்களென்றும் ஆளொன்றுக்கு 18½ கெஜம் தேவையாக இருக்குமென்றும், அக்கணக்கின்படி நாட்டுக்கு 740 கோடி கெஜம் துணி உற்பத்தியாக வேண்டுமென்றும் கணக்கிடப் பெற்றது. அந்த அளவிலும் வெளிநாட்டு ஏற்றுமதிக்கு 100 கோடி கெஜம் அதிகமாகத் தேவைப்படும் எனவும் கணக்கிட்டனர். இந்த 840 கோடி கெஜத்தில் ஆலைகளுக்கு 500 கோடியும் கைத்தறிக்கு 150 கோடியும் விசைத்தறிக்கு 20 கோடியும் நெய்ய வேண்டுமெனக் கணக்கிட்டனர். மிகுதியும் கைத்தறிக்கே வேறு வகையில் வரையறுக்கப் பெற்றது.

மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இந்த அளவு கூடுதலாயிற்று. 43 கோடிக்கும் மேலாக மக்கள் வாழ்வார்களெனவும் அவர்கள் ஆளுக்கு 20.3 கெஜம் ஆடை பெறுவார்களெனவும் கணக்கிட்டு, மொத்தம் 960கோடி கெஜம் துணி தேவையாகும் எனக் கணக்கிட்டார்கள். அதை,

| | |
|---|---|
| ஆலைகளுக்கு | 630 கோடி |
| கைத்தறிக்கு | 250 |
| விசைத் தறிக்கு | 50 |
| அம்பர் சர்க்காவுக்கு | 20 |

எனப் பிரித்துள்ளாகள். எனினும் இந்த அளவும் கணக்கில் சரியானதாகாது என அத்துறையில் வல்லவர்கள் காட்டுகிறார்கள். மக்கள் வாங்கும்

திறன் வளர்ச்சியடையாத காரணத்தால் 20.3 கெஜம் தனி மனிதருக்கென்று கணக்கிடப் பெற்றதாகும் என்றும், கைத்தறிக்கு 400 கோடி கெஜமாவது ஒதுக்கப்பெற வேண்டுமென்றும் அவர்கள் சொல்லுகிறார்கள். எனவே இன்னும் இத்துறை வல்லவர்களுக்கும் அரசாங்கத்துக்கும் இது பற்றிய ஆய்வு நிலை நீடித்துக்கொண்டே இருக்கிறது. பல துறைகளின் வளர்ச்சிக்கு உதவிய இக் கைத்தொழிலுக்கு இன்னும் - இத்தொழில் நிலைத்து யாதொரு இடர்ப்பாடும் இல்லாதவகையில் உதவவேண்டுமென இத் துறையில் வல்ல தலைவர்கள் இன்னும் தமிழ்நாட்டு அரசாங்கத்தையும் மத்திய அரசாங்கத்தையும் வேண்டிக்கொண்டே இருக்கிறார்கள்.

இந்த நிலையில் 1958-ல் இந்திய அரசாங்கம் அமைத்த D. S. ஜோஷி, (D. S. Joshi I.C.S.) கமிட்டி இத் துறையை நன்கு ஆராய்ந்து சில கருத்துக்களை வெளியிட்டது. இத் துறையில் உண்டாகும் தேக்க நிலையை ஆராய்ந்து இத் தேக்கநிலை வருங்காலத்தில் உண்டாகாதிருக்க வேண்டிய வழித்துறைகளை ஆராய்ந்தது. இரண்டாம் ஐந்தாண்டுத் திட்ட இறுதியில் தனிமனிதர் உபயோகத்துக்கு 18.5 கெஜம் எனக் கணக்கிடப்பட்டது அதிகமெனவும் 16.7 கெஜமே சரியாகும் எனவும் கண்டுள்ளது. அதன் முடிவு, ஆலைகள் 500 கோடி கெஜத்துக்கு அதிகமாக உற்பத்தி செய்யக்கூடாது என்று வரையறை செய்தாலொழிய கைத்தறிக்கு வளர்ச்சி இல்லை என்பதாகும்.

வெளிநாட்டு வாணிபமும் இத்துறையில் அவ்வளவு வளம் பெற்றதாக இல்லை. 1957-ல் 82.8 கோடி

கெஜமாக இருந்த ஏற்றுமதி 1958-ல் 62.5 கோடி கெஜ மாகக் குறைந்து விட்டது. சீன நாட்டோடு நடை பெற்ற பெரு வியாபாரம் மங்கத்தொடங்கியது. வெளி நாடுகளில் தத்தம் நாட்டுத் தொழிலை வளர்க்கவேண்டு மென்ற ஆர்வமும் பிறநாடுகளில் வாணிபப் போட்டி நிலையும் இந்த வெளிநாட்டு வாணிப மந்தத்துக்குக் காரணமாகலாம்; இந்திய அரசாங்கம் இதைத் தவிர்க்க உடனடியாக நடவடிக்கை எடுக்கவேண்டும். வெளி நாடுகளில் வாணிபக் குழுக்களை அனுப்பி நம் கைத்தறிகளைப் பற்றிப் பிரசாரமும் விளம் பரமும் செய்தல் வேண்டும். மற்றும் ஆடை ஏற்று மதியில் கைத்தறி ஆடைகளுக்கெனத் தனியான மதிப்பிடும் முறையும் பிறநிலைகளும் அமைத்து இத்துறையை வளர்க்க அரசாங்கத்தார் தக்க பெருமுயற்சிகளை எடுத்துக்கொள்ள வேண்டும். அப்படியே கைத்தறி ஆடைகளைத் தயாரிக்கும் தொழிற்சாலைகளும், சங்கங்களும், மக்களும் இன்று இவ்வகை ஆடைகளைப் பெரிதும் விரும்பும் அமெரிக்க, மேற்கு ஜெர்மனி நாடுகளின் தேவைகளை அறிந்து அவர் தம் மனநிறைவுக்கேற்ற நல்ல வண்ண ஆடை களையும், பிறவற்றையும் உண்டாக்கித்தர முயல வேண்டும். வாணிபத்துறையில் கையாளவேண்டிய நேர்மை முறையினையும் இங்கே எண்ணிப்பார்க்க வேண்டும். சில ஆண்டுகளுக்கு முன் தமிழ்நாட்டில் உண்டான ஒருவகைக் கைத்தறி ஆடைக்கு அமெரிக் காவில் உண்டான பெருந்தேவையினையும் அதைப் பயன் படுத்திக்கொண்டு தவறான வகையில் நம் நாட்டுமக்கள் வாணிபம் செய்ய நினைத்து நிலை கெட் டுப் பெருவாணிபத்தைக் கெடுத்துக் கொண்டதையும் நாம் மறப்பதற்கில்லை. எனவே எப்போதும்-சிறப்பாக

ஆலை முதலிய போட்டிகளும், வெளி நாட்டு வியாபாரப் போட்டிகளும் மிக அதிகமாக இருக்கும் இந்த நாட்களில் கைத்தறி நெசவாளர்கள் நேர்மையும் தன்மையும் கொண்ட நல்ல திறமான நிலைத்த வண்ணங்களோடு கூடிய ஆடைகளை நெய்தே அனுப்பவேண்டும். உள்நாட்டிலும் வண்ணங்கள் நிலைக்காத வகையிலும் நெருக்கமில்லா நெசவு வகையிலும் போட்டி மனப்பான்மையில் குறைந்த விலையில் ஆடைகளைத் தயாரிக்க நினைக்கின்றனர். இதுவும் ஒருவகையில் வருந்தத்தக்கதே யாகும். அந்த வாணிபத்துறையில் இந்நிலை வருந்தத்தக்க ஒன்றாகும். இந்திய நாட்டுப் பல்வகை ஏற்றுமதிகள் இந்தச் சீர்கேடான முறையில் பாதிக்கபட்டதை அவ்வப்போது வெளியாகும் நாட்டுச் செய்திகள் மூலம் நன்கு அறிந்து கொள்ளுகிறோமன்றோ! எனவே ஆடை வகையில் இக்குறைபாடு நேராதவகையில் நன்கு கவனித்துக் கொள்ளவேண்டும். இந்தத் துறையில் தமிழ்நாட்டுக் கைத்தறிக் கூட்டுறவுச் சங்கம் சிறக்கக் குறையற்ற வகையில் பணியாற்றுகின்றது எனலாம். நிலைத்த வண்ணமுடையதாகவும் நல் ஊட்டமுடைய நெசவு பெற்றதாகவும் சிறந்த ஆடைகள் நெய்வதில் தமிழ் நாட்டுக் கூட்டுறவுச் சங்கம் தன் அடிப்படைச் சங்கங்களை வற்புறுத்தி அரிய ஆக்கப் பணியினைச் செய்கிறது. மற்றும் கடந்த சில ஆண்டுகளில் எத்தனையோ வகையான பல்வேறு வண்ணங்களாலும், திறனாலும் நெய்யப்பட்ட—வெளிநாட்டு மக்களையும் கவரத் தக்க — பல ஆடைகள் நெய்வதை நாடெங்கும் நடைபெறும் கண்காட்சிச் சாலைகள் நமக்கு நினைவூட்டுகின்றன. இன்றும் கைத்தறி நெசவாளர் சங்கத்தலைவர்களும் அத்துறையில் வல்ல பிறரும் இந்திய அர

சாங்கத்தை இரந்து கேட்டுக் கொள்வது ஒன்று தான்—அதுதான் வேட்டி புடவைகளை நெய்யும் வேலையை முழுக்க முழுக்கக் கைத்தறியின் வசம் ஒப்படைக்க வேண்டும் என்பது. அப்படிப் பிரித்து வரையறை செய்து விட்டால் இன்று ஆலைகள் வழி அவர்கள் பெற்றுவரும் 'செஸ்' கூடவேண்டாம் என்று அவர்கள் சொல்லுகிறார்கள். உலகெங்கணும் பல நாடுகளில் இத்தகைய முறைகள் கையாளப் பெறுகின்றன எனவும் அவர்கள் காட்டுகிறார்கள். எனினும் இந்திய அரசாங்கம் 1950ல் ஒதுக்கிய ஒரு சில ரகங்களைத் தவிர வேறு ஒன்றையும் செய்யவில்லை. துணி ஆலை முதலாளிகளின் ஒத்துழைப்பும் அவர்தம் பொருளாதார வளர்ச்சியும் நாட்டு வளர்ச்சிக்குத்தேவை என்று கருதுவதனாலோ அன்றி ஏனோ இந்திய அரசாங்கம் இந்த வரையறை செய்ய இதுவரை முற்படவில்லை. இனியும் செய்யுமா என்பது ஐயத்திற்குரியதேயாகும். எனவே கைத்தறி நெசவாளிகள் — சிறப்பாகத் தமிழ் நாட்டில் உள்ளவர்கள் — தம் உழைப்பின் திறத்தாலும் நேர்மையாலும் உள்ள நிலையிலே வாழ்வைப் பெருக்கிக் கொள்ளவேண்டியவர்களே. மேலும் புதுப்புதுவரிகள் உண்டாகின்ற இக்காலத்தில் இக்கைத்தறித்தொழிலுக்கு மத்தியஅரசாங்கமோ மாநில அரசாங்கமோ புதுவரி ஏதாவது இட்டு, உள்ள தொழிலை நிலைகுலையச் செய்யாத வகையிலும் பார்த்துக் கொள்ள வேண்டும். அதற்கென இத்துறையில் வல்லவர்களும் தமிழ்நாட்டுத் தலைவர்களும் இரு அரசாங்கங்களிடத்தும் அடிக்கடி தொடர்பு கொண்டு வற்புறுத்த வேண்டும். தமிழ்நாட்டில் கைத்தறி மங்கினால் மக்கள் வாழ்வு மன்றி அந்நாட்டின் பெருமையைக் காப்பாற்

றும் ஒரு பழம்பெரும் தொழில் வளமும் கெடும் என்ற நிலையை ஒவ்வொருவரும் உணரவேண்டும்.

மற்றொரு வழியிலேயும் கைத்தறியின் ஆக்கத்துக்கு இடையூறு வருகிறது என உணர்கின்றனர்—அதுதான்விசைத்தறி வளர்ச்சி.கனுங்கோ கமிட்டியின் சிபாரிசின்படி35,000 விசைத்தறிகள் இரண்டாம் திட்ட இறுதிக்குள் நாட்டில் அமைக்கப் பெற்றிருக்க வேண்டும். ஆனால் அது இன்றும் நிறைவு பெறவில்லை போலும். எப்படியாயினும் விசைத்தறி வளர்ச்சி கைத்தறி வளர்ச்சிக்கு முட்டுக்கட்டையே யாகும் என்பதை உணர்ந்து அதற்கு வேண்டிய துறையில் செலாற்றத் தலைவர்கள் முயல்கின்றனர். இத்தகைய நிலைகளில் கைத்தறி. ஆலை, அரசாங்கம் என்ற மூன்று துறையிலும் உள்ள தலைவர்கள் ஒன்றுகூடி ஏதேனும் நல்ல முடிவினைக் காண முயலவேண்டும். இன்றேல் ஒன்றை ஒன்று போட்டி மனப்பான்மையால் குறைக்கவும் குறைகூறவும் முயல்வதோடு இருவேறு வகைப்பட்ட மக்களினத்துக்கு இடையிலே கைத்தொழிலாளர்—ஆலை முதல்வர் இடையிலே — தேவையற்ற கசப்பு மனப்பான்மையே வளர்ந்து நாட்டு வளர்ச்சிக்கும் இணைப்புக்கும் கேட்டினை விளைவிக்கும். கைத்தறித் தொழிலாளர் பெரும்பாலோர் தென்னாட்டில் உள்ளனர்; ஆலை முதல்வர்களில் பெரும்பாலோர் வடநாட்டில் உள்ளனர். எனவே இந்த இருதொழிலுக்கும் இடையில் சிறு மாற்றங்களோ மாறுபாடுகளோ உண்டானால் அவற்றை இன்றைய நாட்டு நிலையில் வேறு துறைகளுக்குப் பயன்படுத்திக் கொள்வர். எனவே ஆலைக்கும் கைத்தறிக்கும் ஒருமை உணர்வு வளர்க்க வேண்டுவதே அரசாங்கத்தின் முதற் கடமை. இந்த

விடுத்துச் செல்வர்களென்று ஆலை முதல்வர்களையோ, பெரும்பான்மையினர் என்று கைத்தறியாளர்களையோ அரசாங்கம் ஆதரிக்க நினைத்தால் தவருக முடியும். கைத்தறி நெசவாளர்கள் கோரிக்கையில் ஓரளவு நேர்மையும் பொறுப்பும் உள்ளன என்பதை உணரவேண்டுமெனக் கருதுகின்றேன். அவர்கள் விருப்பின்படி வேட்டி, புடவைகளை உற்பத்தி செய்யும் முழுப்பொறுப்பினை அவர்கள் வசம் ஒப்படைத்து இன்றைய 'செஸ்' முறையையும் நிறுத்தி ஆலையாளருக்கும் உதவி, இருவரையும் தோளோடு தோள் சேர்த்துச் செல்ல அரசாங்கம் உதவுமாயின் நாட்டில் பல நல்ல செயல்கள் மேலும் நிகழ வாய்ப்பாகும்.

"இயந்திர சக்தி பெருகிக்கொண்டு வருகின்ற காலத்தில் கைத்தறி நெசவுக்கும் இடமுண்டா? என்ற வினு மிகவும் சிக்கலானது. எவ்வாறு இருப்பினும் சில சிறப்பு ரகங்களைப் பொறுத்த வரையில் கைத்தறியின் மூலமாகத்தான் அவைகளை உற்பத்தி செய்யமுடியும் என்பதில் ஐயமில்லை, ஆனல் சாதாரண ரகங்களைப் பொறுத்த வரையில் இயந்திரப் போட்டி மேலும் மேலும் வலுப்பட்டுக் கொண்டு போகும் என்பதையும் நாம் உணரவேண்டும். தற்போது இருக்கக்கூடிய நிலையில் இலட்சக்கணக்கான நெசவுத்தொழிலாளர்களுக்கு மாற்று வேலை வாய்ப்புகள் கொடுக்கக் கூடிய நிலை இல்லாவிட்டாலும், மேலும் மேலும் இயந்திரத் தொழில்கள் வளருகின்ற காலத்தில் இத் தொழில்களில் கைத்தறி நெசவுத் தொழிலாளர்களும் இடம் பெறுவார்கள் என்பதில் ஐயமில்லை. அதுவுமல்லாமல் இன்றைக்கு இருக்கக்கூடிய தலைமுறை மக்கள் கைத்தறி நெசவுத் தொழிலைத் தொடர்ந்து நடத்தலாம். ஆனல், நெசவாளர் குடும்பத்திலுள்ள

இளைஞர்கள் படித்துக் கல்வியறிவு பெற்றவர்களாக முன் வரும்போது இந்தத் தொழிலைத் தொடர்ந்து நடத்துவார்களா என்பதையும் நாம் எண்ணவேண்டியிருக்கிறது. சிறிது சிறிதாகக் கைத்தறிகளுக்குப் பதிலாக விசைத் தறிகளை உபயோகப்படுத்த ஆரம்பிப்பது சிறந்ததென்கின்ற கருத்துப் பிரச்சினையே, இந்த அடிப்படையில் நோக்குகின்றவர்கள் மத்தியில் இப்போது பரவி வருகிறது. இவ்வாறு விசைத் தறிகளைப் பயன்படுத்தத் தொடங்கினால் அதன் பயனாகக் கைத்தறி நெசவாளர்கட்கு வேலை இல்லாமற் போய் விடும் என்ற அச்சம் ஏற்படலாம். ஆனால் விசைத் தறிகளின் அமைப்பைக் கைத்தறி நெசவுக் கூட்டுறவுச் சங்கங்களின் அடிப்படையில் ஏற்பாடு செய்தால் அதன்மூலம் கைத்தறி நெசவாளர்களுக்கு வேலையில்லாது போகின்ற நிலையையும் தடுக்கமுடியும். அதே சமயத்தில் விசைத்தறி உபயோகிப்பதன் மூலமாகக் கிடைக்கக்கூடிய அதிக ஊதியத்தை ஒரு கூட்டுறவுச் சங்கத்தில் இருக்கக்கூடிய எல்லாக் கைத்தறி நெசவாளர்களும் பங்கிட்டுக்கொள்ள முடியும் என்கின்ற நிலையும் ஏற்படலாம். இதுபற்றி, பழைய கருத்துக்களிலேயே நிலைத்து, தொழிலைத் தேங்கச் செய்து விடாமல் பார்த்துக்கொள்வது அவசியமென்பதை எல்லோரும் உணரவேண்டும். இதற்கிடையில் கைத்தறி நெசவாளர்களின் வாழ்க்கைத்தரம் உயருவதற்கு எல்லாவித நடவடிக்கைகளையும் எடுப்பது அவசியமாகின்றது. இந்த அடிப்படையில்தான் பல திட்டங்கள் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் நிறைவேற்றப் பட்டிருக்கின்றன. தொடர்ந்து மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் அப்பணிகள் நடைபெற இருக்கின்றன.''

இவ்வாறு தமிழ்நாட்டு நிதிமந்திரியாக இருந்த திரு சி. சுப்பிரமணியம் அவர்கள் சுருக்கமாகக் கைத்தறி பற்றியும் அதை எதிர்நோக்கியுள்ள பிரச்சனைகள் பற்றியும் குறிப்பிட்டுள்ளார்கள். இவற்றையெல்லாம் எண்ணிப் பார்த்து அனைவரும் ஒன்றிக் கலந்து நல்ல முடிவுக்கு வர வாய்ப்பு இருக்கிறது. எத்தனை வேறுபாடுகள் உண்டானபோதிலும் நாட்டில் சிறப்பாகத் தமிழ்நாட்டில் மூவாயிரமாண்டுகளுக்கு முன்பிருந்து வளர்ச்சி அடைந்த இக்கைத்தறி நெசவுத் தொழில் இனியும் மங்காது வளரும் என்ற நம்பிக்கைக்கு இடமிருக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது.

தமிழ்நாட்டில் பருத்தி நூல் கைத்தறிகளே பெரும்பாலும் உள்ளன. அத்துடன் பட்டு ஆடைகளும் ஒரு சில இடங்களில் நெய்யப் பெறுகின்றன. காஞ்சிபுரத்தில் நெய்யப்பெறும் பட்டு அனைத்திந்தியப் புகழ் மட்டுமின்றி உலகப் புகழையே பெற்றுள்ளது. காஞ்சியில் இப்பட்டுப் புடவைக் கைத்தறிக்கும் ஒரு கூட்டுறவுத் தாபனமும் உள்ளது. தனியார் பலரும் இத்தொழிலை வளர்த்து வருகின்றனர். இதன் மூலப்பொருள்களாகிய பட்டும், சரிகையும் தமிழ்நாட்டுக்கு வெளியிலே இருந்து வருகின்றன என்றாலும் இத்தொழில் இங்கு நன்கு வளர்ச்சியடைகின்றது. எனவே கைத்தறி என்னும்போது பருத்தி நூலுடன் பட்டு நூலும்சேர்த்தே எண்ணப் பெறல்வேண்டும். இரண்டும் தமிழ்நாட்டுப் பழந்தொழில்களேயாகும். மூன்றாவதாகக் குறிக்கப் பெறுகின்ற கம்பள நெசவு தமிழ்நாட்டில் இல்லை. தமிழ்நாட்டில் கம்பளத்துக்கு வேண்டிய மூலப்பொருள்கள் இல்லை. மற்றும் அதை நெய்யவேண்டிய முயற்சியும் நாட்டில் இல்லை. ஒரு

வேளை தமிழ்நாட்டில் இதன் வெப்ப நிலைக்கேற்ப-தேவை இல்லாத ஒரு பொருள் என்ற காரணத்தால் இத்தொழிலை யாரும் மேற்கொள்ளவில்லை போலும். எனினும் தமிழ்நாட்டில் எரிமயிரை மற்றவற்றுடன் சேர்த்துப் 'பட்டினும் மயிரினும் பருத்தி நூலிலும், நெய்த வகைகளுடன்' எண்ணியே அன்றைய சங்க இலக்கியங்கள் போற்றுகின்றன. சிலர் 'எலி மயிர்ப் போர்வை' என்று பாடங்கொண்டு தமிழ் நாட்டில் பழங்காலத்தில் பேரெலிகளின் மயிர்களைக் கொண்டு போர்வை செய்தார்கள் எனவும் தம் கருத்தை வெளியிட்டுள்ளனர். இக்கருத்து மேலும் ஆராய்தற் குரிய ஒன்று எனக்கொள்ளலாமேயன்றி இது உண்மை யென்றோ அனைவரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய கருத்து என்றோ கொள்ளமுடியாது. இங்கு நமக்கு இந்த ஆராய்ச்சிகளெல்லாம் இன்று தேவையில்லை. தமிழ் நாட்டில் பெருமளவில் பருத்தி நூல் கைத்தறி நெசவும்; அடுத்தபடியாகப் பட்டு நெசவும் சிறக்க நடைபெற்று வருகின்றனவென்பதும், அவை பல இடையூறுகளுக் கும் நெருக்கடிக்களுக்கும் இடையிலும் அவ்வப்போது சிக்கி வாடவேண்டிய நிலைகளையெல்லாம் கடந்து வாழ்கின்றனவென்பதும், இனி என்றும்வாழும் வகை யில் அவை சிறக்கும் என்பதும் நாம் இங்கே அறிந்து கொள்ள வேண்டியவையாம்.

கைத்தறி நெசவினை எண்ணும்போது கதர் பற்றியும் நினைக்கவேண்டும். மத்திய மாநில அரசாங் கங்களுடைய பெரும் பொருள் செலவுடன் அது வளர்கின்றது. நாடு உரிமை பெறுவதன்முன் அண்ணல் காந்தி அடிகளார் போற்றி வளர்த்த புனிதத் தொழில் இது என்றாலும், உரிமை பெற்ற

பிறகு அரசாங்கம் தனித்துறை அமைத்துக் கோடிக் கணக்கில் பணம் செலவுசெய்து அதை வளர்க்க நினைத்தாலும், 30% விலையில் தள்ளுபடி தரும் அளவுக்குச் சில சமயங்களில் வாணிப நிலையை மாற்றி அமைத்தாலும், அந்த நெசவுத் தொழில் நாட்டில் அதிகமாகவளரவில்லை என்பது கண்கூடு. அரசாங்கக் கணக்கு, கதர் நூற்பவர்கள், இத்துணையர் எனக் காட்டுகிறது.

| | 1-வது ஐந்தாண்டு | 2-வது ஐந்தாண்டு | 3-வது ஐந்தாண்டு | எதிர் பார்த்தது |
|---|---|---|---|---|
| கதர் நூற்பவர் | 26,000 | 181,000 | 181,000 | +45,000 |
| கதர் நெய்பவர் | 716 | 9,000 | 15,000 | |
| உற்பத்தி | | 66 லட்சம் கெஜம் (1.64 கோடி ரூபாய்) | 80 லட்சம் கெஜம் (2 கோடி ரூபாய்) | |

இதில் நூற்பவர் பலர் அரசாங்கத் தொடர்புடையவர்களாகவோ அல்லது சேவா சங்கத் தொடர்புடையவர்களோ அல்லது பற்றுடையவர்களாகவோ இருப்பவராவர். தொழிலுக்காக இதை மேற்கொள்ளுபவர் மிகச் சிலரே போலும். எனவே இது அரசாங்கப் பொருள் உதவியும் பற்றும் இல்லையானல் எப்படி வளர்ச்சி அடையும் என்று சொல்லமுடியாது.

அசுர வேகத்தில் வளர்ந்து வரும் பெருந்தொழில்களுக்கிடையே இந்தப் பண்டைய தமிழ்நாட்டுத்

தொழிலாகிய கைத்தறி நெசவும் மெல்லமெல்ல வளர்ந்துகொண்டே வருகின்றது இனியும் வளர்ந்து வரும். நாமே மேலே கண்டபடி இதன் வளர்ச்சியில் கருத்துடைய அனைவரும் கூட்டுறவு முறையிலும் தனி நிலையிலும் வேறு வகையிலும் பாடுபட்டு இப் பண்டைத் தொழில் வளத்தை மேலும் மேலும் சிறக்கச் செய்ய வேண்டுமென்ற வேண்டுகோளை நாட்டின் முன் வைத்து அமைகின்றேன்.

# 10. குடிசைத் தொழில்கள்

உரிமை பெற்றபின் நம்நாடு பல வகைகளில்முன் னேற்றம் பெற்று வருவதை அறிகின்றோம். பெருந் தொழில், உழவு என்ற இரண்டின் நிலையிலும் கடந்த பதினைந்தாண்டுகளில் நாடு வளர்ந்த நிலையினை ஒரு வாறு கண்டோம். இவைகள் மட்டுமன்றி சிறு சிறு தொழில்கள் பல குடிசைகளிலும் குக்கிராமங்களிலும் நாட்டு உட்புறங்களிலும் வளர்ந்து வருவதையும் காணல் நலம் பயப்பதாகும். இவற்றைக் குடிசைத் தொழில்கள் என்றும் சிறு தொழில்கள் என்றும் அர சாங்கத்தார் அறுதியிட்டுள்ளனர். உழவுத் தொழிலில் பணியாற்றும் பலருக்கு ஆண்டுமுழுதும் வேலை இருப்பதில்லை. சிலருக்கு ஆண்டில் பாதிநாள் ஓய் வாகவே இருக்கும். எதிர்பாராத பஞ்சம் முதலிய வற்றின் காரணத்தாலும் நாட்டில் வேலை-சிறப்பாக உழவுத் தொழில்—இல்லாதநிலை ஏற்படும். அக்காலங் களில் வேலையற்ற அல்லது ஓய்வுபெற்றுள்ள மக்கள் தம் பொழுதை வீணாக்காது பயனுள்ள வழிகளில் செலவுசெய்து, சிறு தொழில்களைப் பெருக்கி, நாட்டுக்கு

உதவி, தமக்கும் வருவாயைத் தேடிக்கொள்ளும் வகை யில் அரசாங்கம் பல ஏற்பாடுகளைச் செய்துள்ளது. அவற்றுள் ஒன்று கூட்டுறவு முறை.

வாய்ப்புள்ள இடங்களிலெல்லாம் கூட்டுறவுச் சங்கங்கள் அமைத்து, அவற்றின் மூலமாகத் தமிழ் நாட்டின் பல இடங்களில் குடிசைத் தொழில்களை வளர்த்து வருவதைக் காண்கின்றோம். அங்கங்கே தொழிற் சங்கங்களும், தொழிற் பேட்டைகளும், தொழில் நுணுக்க அலுவலகங்களும் பேரளவில் அமைத்து வருவதுபோன்றே, நாட்டில் மூலை முடுக்கு களிலெல்லாம் கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்பெறு கின்றன. அவற்றின் வழி, வீணுகும் பொழுதையெல் லாம் மக்கள் பயனுள்ள முறைகளில் செலவுசெய்ய வசதி ஏற்படுகிறது. மிகக் குறைந்த செலவில், நிறைந்த பயனை இக்கூட்டுறவுச் சங்கங்கள் மக்களுக்கும் மாநிலத்துக்கும் நாட்டுக்கும்வாரி வழங்குவதை யாரே அறியாதார் !

கூட்டுறவுச் சங்கங்களைத் தவிர்த்து, தனியார் இத்தகைய தொழில்களை வளர்க்க நினைத்தாலும் அவர் களுக்கும் அரசாங்கம் போதிய முன்பணம் தந்து, அவர்தம் ஆக்க வேலைக்கு உறுதுணை புரிகின்றது. அத்தகைய தனியார் சிறுதொழில் அமைப்புக்கள் அள வற்றன. அவை அனைத்தையும் இங்கே அறுதியிடுவ தென்பது நம்மால் இயலாது—அது நமக்குத் தேவை யற்றதும் கூட. ஆனால் தமிழ்நாட்டுத் தொழில் வளத்தைக் காட்டும் முறையில் சிறு தொழில் வளர்ச்சி யையும் காட்டவேண்டிய இன்றியமையாமை உள் ளமையின் கூட்டுறவு அமைப்பிலே உள்ள சிறு

தொழில் அமைப்புக்களையும் அவற்றின் வழி நாடு பெறும் நன்மைகளையும் மட்டும் இங்கே காட்டலாம் என எண்ணுகின்றேன்.

தமிழ்நாட்டில் பழங்கால முதற்கொண்டே வீடு தோறும் அவரவர் இயல்பிலே சிறு சிறு பொழுது போக்கு வேலைகளைத் தமக்கென மக்கள் அமைத்துக் கொண்டு வாழ்ந்து வந்தனர் என்பதை அறிவோம். சிறப்பாக அவரவர் வாழ்வின் தேவைகளையும் சூழ் நிலைகளையும் பிற அண்டைப் பொருள்களையும் ஒட்டி அச்சிறு தொழில்கள் அமையும். உழவுத் தொழிலில் ஓய்வுபெறும் காலத்திலெல்லாம் பணியாட்கள்,பனைநார் தென்னைநார் இவைகளைச் செப்பனிட்டுக் கயிறுதிரித்து தம் உழவுக்கு அவற்றைப் பயனுள்ள பொருள்களாகச் செய்யும் தொழிலில் ஈடுபடுவதைக் கண்ணுாரக் காண் கின்றோம். அப்படியே ஓலைகளாலும், மூங்கில், பிரம்பு, கசங்கு முதலியவற்றாலும் கூடை முதலியன செய் வதைக் காண்கின்றோம். ஓலை, கோரை முதலியவற்றால் பாய் நெய்வதையும் காண்கின்றோம். களிமண் கொண்டும் வண்ணங்கொண்டும் பொம்மை செய்வதும் அவர் தொழிலன்றோ! நூல் நூற்பதும் ஆடை நெய் வதும்கூடப் பழங்காலத்து உழவர் தம் ஓய்வுகால வேலைகளாக இருந்தன. இத்தகைய பணிகளையும் பிற வற்றையும் இன்று கூட்டுறவு முறையிலே அரசாங் கத்தார் அமைத்து, நாட்டில் தொழில் பெருக்கத்தையும் பெருக்கியவற்றை உரிய இடங்களுக்கு அனுப்பி விற்க ஏற்பாடுசெய்து வாணிபத்தையும் வளர்க் கின்றனர். கடந்த இரண்டு ஐந்தாண்டுத் திட்டங் களில் அரசாங்கத்தார் என்னென்ன செய்தார்கள் என்பதை அவர்தம் புள்ளிக் கணக்குகள் நன்கு

விளக்கிக் காட்டுகின்றன. நான் முன் கண்டபடி தனி யார் வளர்க்கும் குடிசைத் தொழில்கள் பற்றி எழுதின் எல்லையற்று விரியும் என்ற காரணத்தினாலே கூட்டுறவு அடிப்படையில் அரசாங்க நல்லாதரவில் அமைந்த தமிழ்நாட்டுக் குடிசைத் தொழில் வளத்தை மட்டும் இங்கே குறித்து அமைகின்றேன்.

இன்று நாட்டில் பல்வேறு வகைத் தொழிற் சங்கங்கள் பணியாற்றுகின்றன. இங்கே கீழே தரப் படும் கணக்குகள் அனைத்தும் பெரும்பாலும் இரண் டாம் ஐந்தாண்டுத் திட்ட எல்லையிலிருந்து எடுக்கப் பட்டவையேயாகும். தொழில் துறையினர் தம் வழி மக்களுக்கு உதவிய அமைப்புக்கள் மட்டுமே இங்கே குறிப்பிடப் பெறுகின்றன. அரசாங்க உதவிபெற்றும் பெருமலும் வளரும் தொழில்கள் பல. கிராமத் தொழிற் சங்கங்கள் பல அமைக்கப்பெற்றன. 31-3-60 முடிய மொத்தம் 334 தொழிற் சங்கங்கள் அமைக்கப்பெற்றன அவற்றுள் தொழில் நிலைவகையில் கீழே கண்ட வாறு ஒரு சிலவற்றைப் பிரிக்கலாம்.

| | | |
|---|---|---|
| எண்ணெய் உற்பத்தியாளர் | சங்கம் | 124 |
| மண்பாண்டம் செய்யும் | ,, | 50 |
| செங்கல், ஓடு உற்பத்தியாளர் | ,, | 33 |
| கைக்குத்தல் அரிசிச் சங்கம் | | 14 |
| தேன் உற்பத்திச் சங்கம் | | 11 |
| தோல் பதனிடும் சங்கம் | | 10 |
| கரும்பு வெல்லம் உற்பத்திச் சங்கம் | | 4 |

(பிற மற்றத் தொழிற் சங்கங்கள்.) இவை மொத்தம் 13,687 உறுப்பினர் தம் ரூ. 5,42,125 முலதனத்தைக் கொண்டு திறம்படத் தொழில் வளர்க்கின்றன. இத்

தொகை பெரும்பாலும் கதர், கிராமக் கைத்தொழில் நெறியாளரிடமிருந்தே பெறப்படுகின்றது. இச் சங்கங்கள் கோடிக்கணக்கான மதிப்புடைய பொருள்களை உற்பத்திசெய்து-விற்பனை செய்து-நாட்டுக்கு உதவித் தம் உறுப்பினர்களுக்கும் வாழ்வளிக்கின்றன.

அண்மையில் தமிழ நாட்டில் உண்டான மது விலக்கினால் வேலையற்றோர் பலராவர். அவர்கள் வாழ்வை நிலைபெறுத்தும் வகையில் பல தொழிற் சங்கங்கள் அமைக்கப் பெற்றன. அவற்றுள் முக்கிய மானவை பனைவெல்ல உற்பத்திச் சங்கங்கள். இத் துறையில் மொத்தம் 1433 சங்கங்களில் 1,49.900 பேர் உறுப்பினராக இருந்து தொழிலாற்றிப் பயன் பெறு கின்றனர். இவர்கள் சுமார் ஏழுலட்சம் ரூபாய் பங்குத் தொகையாகச் செலுத்தி, கதர் கிராமக் கைத்தொழில் நெறியாளர் வழிச் சுமார் ஏழரை லட்சம் ரூபாய் மானிய மாகவும் ஐந்தரை லட்சம் கடனாகவும் பெற்றுத் தம் சங்கப் பணிகளை நன்குசெய்து, தம்தொழில் வளத் தைப் பெருக்கி வருகின்றனர். இவர்கள் சுமார் ஒன்றரை கோடி ரூபாய் மதிப்புள்ள பனை வெல்லம் உற்பத்தி செய்கின்றனர். இந்த உற்பத்திச் சங்கங்கள் நன்கு வளம்பெற்று, சென்னையில் ஒருமத்திய சங்கமும் நாடெங்கிலும் கிளைச் சங்கங்களும், அடிப்படைச் சங்கங்களுமாகப் பலவகையில் அமைந்து தொழிற்படு கின்றன. உற்பத்தி, பண்டமாற்று, விற்பனை முதலிய எல்லாத் துறைகளிலும் இவை கலந்து பணியாற்று கின்றன. பனைவெல்லத்தோடு, கற்கண்டு முதலிய பொருள்களையும் இவை உற்பத்தி செய்கின்றன. பனை யால் உண்டாகப்பெறும் மக்களுக்குத் தேவையான எத்தனையோ பொருள்களையும் இவை தனிப்பட்ட வகை

யிலும் கூட்டாகவும் உண்டாக்கி உதவுகின்றன இந்தச் சங்கங்களின் அமைப்பினுலேதான் மதுவிலக்கினுல் உண்டான வேலை இல்லாத் திண்டாட்டம் குறைந்ததோடு, மக்கள் பனைமரத்தின் முழுப் பயனைப் பெறவும் வழி உண்டாகின்றது. இதனுல் பயன் பெறுவோர் தமிழ் நாட்டில் இலட்சக்கணக்கில் உள்ளனர்.

இவைகளையன்றி, பல்வேறு சிறுசிறு கைத்தொழில்களைச் செய்யும் சங்கங்களும், நாட்டில் பலப்பல உள்ளன. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட இறுதியில் இந்த வகையில் 148 சிறுரகத் தொழிலமைப்புக்கள் தமிழ் நாட்டில் உள்ளன.

| | |
|---|---|
| முன்னுள் இராணுவத்தினருக்காக அமைத்த தொழிற் கூடங்கள். | 4 |
| தோல்பொருள் செய்யும் தொழிற் சாலைகள் | 5 |
| தீப்பெட்டித் தொழிற்சாலைகள் | 6 |
| பித்தளை வெண்கல உலோகத் தொழிற் சாலைகள் | 25 |
| தச்சு, இரும்புப் பட்டறைகள் | 52 |
| மகளிர் தொழிற் சங்கங்கள் | 45 |
| தேயிலை உற்பத்திச் சங்கம் (குந்தா) | 1 |
| பூட்டு உற்பத்திச் சங்கம் (திண்டுக்கல்) | 1 |
| இரும்புப் பெட்டி செய்யும் சங்கம் (நாகை) | 1 |
| மறை திருகு (Bolts & Nuts) உற்பத்தி சங்கம் | 1 |
| பிற | 9 |

இவைகள் செம்மையாகத் தொழிற்படின் நாட்டில் குடிசைத்தொழில்கள் - சிறு ரகத் தொழில்கள்—நன்கு வளர்ச்சியடைய வாய்ப்பு உண்டு. இவைகளுக்குத் தாயகமாக 'சென்னை இராச்சியக் கூட்டுறவு சங்கம்'

என்ற தாய் நிலையம் ஒன்று சென்னையில் அமைக்கப் பெற்றுள்ளது. இச்சங்கத்தின் முக்கிய நோக்கம் நாட்டின் பல பகுதிகளிலுள்ள சிறு ரக அடிப்படைத் தொழிற்சங்கங்களுக்கு மூலப்பொருள்களை வாங்கிக் கொடுப்பதோடு 'அவற்றிற்கு வேண்டிய பண உதவி களைச் செய்வதோடு அச்சங்கங்கள் உற்பத்தி செய்யும் பொருள்களுக்கு ஏற்ற சந்தைகள் அமைத்து விற் பனை செய்ய உதவுவதாகும். இவை அனைத்தும் நன்கு தொழிற் பட வேண்டும்.

மேலும் நாட்டின் பல பகுதிகளில் கலைப்பொருள் செய்வோர் கூட்டுறவுச் சங்கங்களும் (Handicrafts Industrial Co-operatives) செயலாற்றி வருகின்றன. இரண் டாவது ஐந்தாண்டு திட்ட எல்லையில் இச்சங்கங்களின் எண்ணிக்கை தொண்ணூற்றொன்றாக இருந்தது எனக் கணக்கிட்டுள்ளனர். அவை வருமாறு.

| | | |
|---|---|---|
| பாய் நெய்யும் | சங்கங்கள் | 35 |
| மூங்கில், பிரம்பு கூடை நெய்யும் | ,, | 24 |
| பனை ஓலை பாய் கூடை ,, | ,, | 7 |
| நார் 'பிரஷ்' செய்வோர் | ,, | 5 |
| கற்சிலை செய்வோர் | ,, | 5 |
| கயிறு 'திரிப்போர்' | ,, | 4 |
| வெண்கல விக்கிரகம் செய்வோர் | ,, | 4 |
| பொம்மை செய்வோர் | ,, | 3 |
| பொத்தான் ,, | ,, | 1 |
| நெட்டி வேலை செய்வோர் | ,, | 1 |
| கரி, பீங்கான் உற்பத்தி செய்வோர் | ,, | 1 |
| வீணை வாத்தியக் கருவி செய்வோர் | ,, | 1 |

இவ்வாறு பல்வேறு வகைகளில் பல்வேறு பொருள் களை நாட்டுக்குச் செய்து தருவோர்தம் தொழிலியற்

சங்கங்கள் நாட்டில் நிறைந்துள்ளன. இவற்ருல் நாட்டுப் பழங்காலத் தொழில் முறைகளும் தொழில் நுணுக்கங்களும் கெடாமல் வளர்ந்து வருவதை எண்ணிப் பார்ப்பின் இவை செய்யும் தொண்டு அளப் பரிது என்பது நன்கு விளக்கும். தமிழ்நாட்டில் மிகப் பழைய காலத்தில் உலோகங்களாலும், கல்லாலும், பிற பொருள்களாலும் செய்யப்பெற்ற பல பொருள்களைப் பற்றியும் அவை வளர்ந்து வாழ்ந்த வகையையும் இந் நூலின் முற் பகுதியில் கண்டோமல்லமோ! ஆம்! அத் தகைய தொழில் முறைகளை - தொழில் நுணுக்க உண்மைகளை - இச்சங்கங்கள் மங்காது காத்து வரு கின்றன என்பதை எண்ணும்போது நமக்கு இவற்றின் வாழ்வும் வளர்ச்சியும் எத்துணை ஏற்றத்தை அளிக் கின்றன என்பது புலனுகுமே!

மேலேகண்ட நுணுக்கத்தொழிற்சங்கங்களில் சுமார் 5000 பேர் உறுப்பினராக இருந்து, நாட்டுப் பண்டைய தொழில்களை வாழவைக்கின்றனர். அரசாங்கமும் பல இலட்சக் கணக்கில் இனுமாகவும் கடனுகவும் பொருளை வழங்கி அவரவர் தொழில் வளர ஆவன செய்து வரு கின்றது. இச்சங்கங்கள் ஆண்டுதோறும் சுமார் பத்து இலட்ச ரூபாய் மதிப்புள்ள பொருள்களை உற்பத்தி செய்து நாட்டுக்கு அளிக்கின்றன. தமிழ்நாட்டு மக்கள் மட்டுமின்றி அண்டை நாட்டிலுள்ள நம் சுற்றத்தாரும், வெளிநாடுகளிலிருந்து ஆண்டுதோறும் வரும் ஆயிரக் கணக்காக யாத்ரீகர்களும் இப் பொருள்களின் அரிய வேலைப்பாடுகளைக் கண்டு கண்டு உணர்ந்து உணர்ந்து, உற்று உற்று, வியந்து வியந்து போற்றுகிருர்களே! வெளிநாட்டிலிருந்து வருபவர் இவற்றை வாங்கித் தத்தம் நாடுகளுக்குக் கொண்டு சென்று ஆங்காங்கே உள்ளவர்களுக்கெல்லாம், இவற்றைக் காட்சிப் பொருள்

களாகக் காட்டி மகிழ்கின்றனர்களே! இன்று உலகெங்கும் நடைபெறும் கைத்தொழிற் பொருட் காட்சிச் சாலைகளிலெல்லாம், தமிழரின் கைவண்ணத்திறன் காட்டும் கவினுர் பொருள்கள் இடம் பெறுவதையும், அவற்றைக் கண்ட பிற நாட்டவர் தம்மை மறந்து போற்றுவதையும் எண்ணும்போது நாம் நம்மை மறக்கிறோ மல்லமோ !

இத்தகைய நாட்டிலுள்ள பொருள் உற்பத்தியும் செய்யும் அடிப்படைச் சங்கங்களுக்கு உணர்வூட்டவும் வேண்டிய உதவி செய்யவும் சென்னையில் ஒரு தாய்ச் சங்கமும் அமைக்கப் பெற்றுள்ளது. இதுவே கிராமச் சங்கங்களின் பொருள்களையெல்லாம் விற்பனைச் சந்தைக்கு அனுப்ப ஆண்டாண்டுள்ள மக்களுக்கு நம் நாட்டின் தொழில் வளத்தை விளக்குகின்றது.

உயர்ந்த பொருள்களைச் செய்து நாட்டுத் தொழிலின் சிறப்பை உலகுக்கு உணர்த்துவது ஒருபுறமிருக்க, வாழ்வின் தேவைக்குரிய பல பொருள்களைச் செய்யும் சிறு தொழிலோர் சங்கங்களும் பலப்பல நாட்டில் உள்ளன. உழவர் தம் ஓய்வு நேரத்தில் தென்னை, பனை நார்களைக் கொண்டு கயிறு 'திரித்து' அவற்றைத் தம் தொழிலுக்குப் பயன்படுத்தும் செயலை மேலே கண்டோம். தற்காலத்தில் அந்த நார்களைக் கொண்டும் அவற்றில் பல வகை வண்ணம் தீட்டியும் எத்தனையோ வகையான கண்கவர் பொருள்களைச் செய்வதைக் காண்கின்றோம். தமிழ் நாட்டில் இத்தகைய தொழில் புரியும் சங்கங்கள் இருபத்தைந்து உண்டென இரண்டாம் ஐந்தாண்டுத் திட்ட எல்லையில் கணக்கிட்டிருக்கிறார்கள். இவற்றுள் சுமார் 1500 பேர் உறுப்பினராக இருந்து பணிபுரிந்து பயன் பெறுகிறார்கள். இவற்றிற்கென இரண்டாவது

திட்டக் காலத்தில் தமிழ்நாட்டு அரசாங்கம் சுமார் ஐந்து அலட்சம் ரூபாய் செலவு செய்துள்ளது. இச்சங் கங்கள் சுமார் ஐந்துலட்ச மதிப்புள்ள பொருள்களை உற்பத்தி செய்து உலகுக்கு அளித்துள்ளது. இத் தகைய சங்கங்களை வாய்ப்புள்ள இடங்கள் தோறும்-தென்னையும் பனையும் செறிந்து வளர்ந்தோங்கும் இடங்கள் தோறும் - உண்டாக்க அரசாங்கத்தார் முயன்று ஆவன செய்து வருகிறார்கள். நாள்தோறும் இத்துறையில் புதுப்புதுச் சங்கங்கள் வளர்ந்து வரு கின்றன. வளர்ந்து வரவேண்டுவதே நாட்டின் எதிர் காலத்துக்கு ஏற்றதுமாகும். இவ்வாறு தமிழ்நாடு முந்திய பகுதிகளில் கண்டபடி பெருந் தொழில்களை வளர்ப்பதோடு வீட்டுக்கு வீடு அமைந்து வளரும் இச் சிறு தொழில்களையும் வளர்த்து, பல வகையில் தன் தொழில் வளத்தை மங்காது காத்து வருகின்றது.

பரந்த பாரத நாட்டில், பிற மாநிலங்களோடு (States) ஒப்பிட்டுப் பார்க்கும்போது, வேறு பல துறைகளில் முன்னேற்றங் கண்டுள்ளமை போன்றே தமிழ்நாடு, இச்சிறு தொழில் வளர்ச்சியிலும் முன்னேற்றங் கண் டுள்ளது. தமிழ்நாடுதான் அதிகமான தொழிற் சங்கங் களை உடைய மாநிலம் என அண்மையில் எடுத்த கணக் கினால் அறிய முடிகின்றது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட எல்லையில் நின்று ஆராயும்போது, தொழில் வாரியாகக் கணக்கிட்டால், சுமார் இரண்டாயிரம் கூட்டுறவுத் தொழிற் சங்கங்கள் இத் தமிழ் நாட்டில் இயங்கிப் பணி புரிகின்றன என்றும் இவற்றிற்கு அர சாங்கம் ஒரு கோடிக்குமேல் கடனாகவும் இனமாகவும் பொருள் வழங்கியுள்ளது எனவும் அறிகிறோம். இச் சங்கங்களைத் தொழில்வாரியாக ஒரு வகையில் பிரிக்கலாம் என எண்ணுகின்றேன். அந்நிலை வருமாறு:

| | | |
|---|---|---|
| கிராமத் தொழிற் சங்கங்கள் | | 334 |
| பனைவெல்ல உற்பத்தி | ,, | 1433 |
| சிறு ரகத் தொழில் | ,, | 148 |
| கைத்திறன்-தொழில் | ,, | 91 |
| நார்த் தொழில செய்யும் | ,, | 25 |
| பட்டு உற்பத்தி | ,, | 1 |

இவற்றைத் தொகுத்துப் பார்க்கும்போது 'சிறு துளி பெருவெள்ளம்' என்ற மொழிக்கேற்ப, இத் தொழில்கள் கோடிக் கணக்கில் பொருள்செய்து, நாட்டு நல்ல தொழில்களைப் பாதுகாப்பதோடு, நாட்டு வருவாயினையும் மக்கள் வாழ்க்கை நிலையினையும் உயர்த்துவதை நன்கு அறிவோம். இச்சங்கங்களில் சுமார் இரண்டு லட்சம் மக்கள் உறுப்பினராக இருந்து தொழிலாற்றுகின்றனர். இரண்டாம் திட்டம் எல்லை இறுதியில் இவை ஓர் ஆண்டில் சுமார் மூன்றேகால் கோடி ரூபாய் மதிப்புள்ள பொருள்களை உற்பத்திசெய்தன. தற்போது இவற்றின் உற்பத்தித் திறன் இன்னும் மிக்கிருக்கும் என்று கொள்வதும் பொருந்தும்.'

இவை அனைத்தும், அரசாங்க ஆணைவழி 1956-ம் ஆண்டிலே, தொழில் வளர்ச்சி நெறியாளர் (Director of Industries) வழி இயங்கத் தொடங்கின. அதற்கு முன்னும் அவ்வாண்டிலிருந்தும் அவை பல வகைகளில் விரிவுற்று வளர்ச்சியடைகின்றன. இவையனைத்தும், கூட்டுறவின் அடிப்படையில் அமைந்தவை. தனியான வகையிலும் தனியார் துறையிலும் இச்சிறு தொழில் வளர்ச்சியின் நிலை அளவிடற்கரிது. அவற்றின் விரிவும் பெருக்கமும் நாட்டை நல்வாழ்விற்கு அழைத்துச் செல்லும் என்பது உறுதி.

# 11. மின்சாரமும் தொழில்வளமும்

மின்சாரத்தை உண்டாக்கி அதை உலகுக்கு அளித்தவன் யாவனுயினும் அவன் எந்த நாட்டைச் சார்ந்தவனுயினும் இன்றைய உலகம் அவனுக்குத் தலை தாழ்ந்து அஞ்சலி செய்யக் கடமைப் பட்டுள்ளது. மக்கட் சமுதாய வாழ்வும் தனிவாழ்வும் அவற்றை வள மாக்கும் உழவுத் தொழில் ஆலைத் தொழில் போன்ற பிறதொழில் அமைப்புக்களும் மின்சாரமின்றேல் இல்லை என்னும் அளவுக்கு வாழ்க்கை சென்று கொண்டே இருக்கிறது. இன்று மின்சாரம் புகாத இடமே இல்லை என்னும் அளவுக்கு அதன் வளர்ச்சி பெருகியுள்ளது. உலகெங்கணும் மின்சாரம் தன் ஆணை செலுத்துகிறது. அண்மையில் மின் ஆற்றலுக்கு மேலான சில ஆற்றல்களைக் கண்டுபிடித்து அவற்றை வாழ்வுக்குப் பயன்படும் ஆக்கத் துறைக்கு உபயோகிக் கத்தொடங்கும் முயற்சிகள் நடைபெற்றும் மின்சாரம் தன் ஆணையை உலகெங்கணும் செலுத்திக் கொண்டு தான் இருக்கிறது ; இனியும் செலுத்துமென்பதிலும் தடையில்லை. பரந்த பாரதநாட்டில் மின்சாரம் பெரு

மளவு நாட்டு உபயோகத்தில் பயன்படுத்தப் படுகிறது நாட்டுத் தொழில் உலைக்கும் வீட்டு அரிசி உலைக்கும் மின்சாரம் பயன்படுகிறது. சர்க்கரையை அடுப்பில் பாகாக்குவதற்கும் பேருலையில் இரும்பை நீராக்குவதற்கும் மின்சாரம் பயன்படுகிறது. சூட்டுக்கிடையில் தண்மை காண்பதற்கும் தண்மைக்கிடையில் வெப்பம் விளைப்பதற்கும் மின்சாரம் பயன்படுகிறது. இரவைப் பகலாக்குவதற்கும் இல்லாக் காற்றை அள்ளித் தெளிப்பதற்கும் மின்சாரம் பயன்படுகிறது. இப்படியே போக்குவரத்துக்கும் 'பொழுதுபோக்குக்கும் உதவும் வானொலி கேட்பதற்கும் மின்சாரம் பயன்படுகிறது. வீட்டைத் துப்புரவு செய்தற்கும் முகத்தை அழகு செய்வதற்குங்கூட மின்சாரம் தேவை என்ற நிலையில் நாடு முன்னேறுகிறது. இப்படி எடுத்ததற்கெல்லாம் மின்சாரம், உலகில் இடம்பெற்று, ' இது மின்சார யுகம் என்றுவர்லாற்ருள்ர் கூறும்வகையில் தன் ஆட்சியைப் 'பார்க்குமிடமெங்கு மொரு நீக்கமற'ச் செலுத்துகிறது. அதன் பயனைத் தமிழ்நாட்டு மக்களும் பிறநாட்டாருக்குச் சளைக்கா வகையில் துய்த்து வாழும் வழியில் முன்னேற்றம் பெற்றே வருகிருர்கள். அவர் தம் முயற்சி வெல்வதாக என வாழ்த்துகின்றேன்.

இந்திய நாட்டில மின்சாரம் பல ஆண்டுகளாகவே வழக்கத்தில் உள்ளது. சிறந்த தொழில் வளம் மிக்க பம்பாய் மேற்கு வங்காளமாகிய இரு பகுதிகளாலும் தொழில் வளர்ச்சிக்கு மின்சாரம் பெருமளவில் பயன்பட்டு வருகின்றது. தமிழ்நாடு அந்த இரு மாநிலங்களுக்கு அடுத்த நிலையில் மூன்ருவதாக மின்சாரத்தை உற்பத்திசெய்து பயன்படுத்தி வருகின்றது. தொழிலுக்கு மின்சாரம் உபயோகிப்பதில், நாம் மூன்ருவ

நிலையில் நின்றாலும், பயிருக்குப் பாசன வசதிக்கு மின்சாரத்தைப் பயன்படுத்துவதில் தமிழ்நாடே முதனிலையில் உள்ளது. பம்பாய் கல்கத்தா நகரங்களில் பெரும்பாலும் மின்சாரம் தொழிலுக்குப் பயன்பட, தமிழ் நாட்டில் எல்லா மின்சார நிலையங்களும் இணைக்கப்பெற்று நாடு முழுதும் அதன் உதவி செல்லத்தக்க அளவு பரவியுள்ளது. 7500க்கு மேற்பட்ட நகரங்களும் கிராமங்களும் மின்னொளி பெற்றுத் தமிழ்நாட்டில் திகழ்கின்றன. இந்நிலை இந்தியாவில் எந்த மாநிலத்திலும் இல்லாத நிகழ்ச்சியாகும். இந்த மாநில முழுதுக்கும் 'சென்னை மாநில மின்சார போர்டு' நிர்வாக அமைப்பின் கீழாகவே மின்சாரம் பகிர்ந்தளிக்கப் பெறுகின்றது. இவ்வாறு மின்சாரத்தால் பயன்பெறுவோர் நாட்டில் மிகஅதிகமாக வளர்கின்றனர். அவருள்பெரும்பாலோர் 68% நேராகவும் சிலர் நகராண்கழக அமைப்புக்கள் தனியார் துறை ஆகியவற்றின் வாயிலாகவும் பயன்பெற்று வாழ்வை வளமுறறதாக்குகின்றனர்.

1908-ம் ஆண்டுக்குமுன் தமிழ்நாட்டுப் பொதுநலத்துக்கும் மின்சாரத்துக்கும் தொடர்பே கிடையாது. மின்சாரமே இல்லை என்றுகூடச் சொல்லிவிடலாம். மலை நிலங்களிலுள்ள சில தேயிலைத் தொழிற்சாலைகளிலும் நீலகிரியிலுள்ள கதிரியி (Kateri) லும் நீருதவியால் தேவைக்கேற்ற சிறு சிறு மின்சார அமைப்புக்களைப் பெற்றிருந்த நிலையில்தான் ஐம்பது ஆண்டுகளுக்கு முன் தமிழ்நாட்டு மின்சாரம் இருந்து வந்தது. சென்னை நகரத்துக்கே முதன் முதன் 1909-ல் மின்சாரம் அளிக்கும் வகையில் ஆங்கில நாட்டுக் கம்பெனிக்கு முதலாவதாக 'லைசென்ஸ்' அளிக்கப்பெற்றது. அடுத்து 1925-ல் உதகையில் இத்துறையில்

மின்சாரம் உண்டாயிற்று. 1925-ம் ஆண்டுக்குப் பிறகு மின்சாரத் துறையைப் பொறுப்புடன் ஏற்ற டாக்டர் C. P. இராமசாமி ஐயர் அவர்களே விரைந்து நாட்டில் மின்சாரம் வளரக் காரணமாக இருந்தார்கள். 1927-ல் பைகாரா நீர் மின்சார நிலையத் தொடக்கத்துக்கு அவரே முதற்காரணராவர். முதன் முதலாக 1932ல் பைகராவும் அடுத்து 1937-ல் மேட்டூரும் நீர் மின்சார நிலையங்களாக அமைக்கப்பெற்று அவற்றின் வழி மின்சாரம் நாட்டுக்கு வேண்டிய வகையில் பல் வேறு துறைகளில் தொழிற்படத் தொடங்கிற்று.

1944-ல் நெல்லை மாவட்டத்திலுள்ள பாபநாசம் நீர் மின்சாரத் திட்டம் தொழிற்படத் தொடங்கிற்று. 1947-ல் சென்னை மின்சார அமைப்பு அரசாங்க வசமாயிற்று. ஒப்பந்தப்படி ஆங்கில நாட்டுக் கம்பெனி அப்படியே அதை அரசாங்கத்திடம் ஒப்படைத்துவிட்டது. 1951-ல் மதுரையில் மின்சாரநிலையம் அமைக்கப் பெற்றது. 1952-ல் மோயார் நீர்மின்சார நிலையம் நாட்டில் நான்காவதாகத் தொழிற்படத் தொடங்கிற்று. 1953, 54-ஆம் ஆண்டுகளில் சென்னை மின்சார நிலையம் விரிவாக்கப்பெற்று மதுரை நிலையத்துடன் இணைக்கப் பெற்றது. 1954-ல் பைகாரா நீர் மின்சார நிலையம் மூன்றுவது அமைப்பாக அதிக சக்தியை உற்பத்தி செய்யும் நிலையை அடைந்தது. 1955-ல் சென்னை நிலையச் சக்தியும் பெருகிற்று; 1958-ல் அதன் எல்லையும் சக்தியும் இன்னும் விரிவடைந்தது. 1958-ல் பெரியாறு நீர் மின்சார நிலையம் தொழிற்படத் தொடங்கிற்று. தற்போது குந்தா மின்சாரத் திட்டம் நாட்டு மின்சார திட்டத்துடன் இணைக்கப் பெறுகின்றது. அதன் முழு ஆக்கமும் இன்னும் நிறைவு பெறவில்லை

1-7-1957 முதல் நாட்டு மின்சாரப் பகிர்ந்தளிப்புப் பணியைத் 'தமிழ்நாட்டு மின்சார போர்டு' ஏற்று நடத்தி வருகின்றது. நூற்பு நெசவு ஆலைகள், சிமிட்டி உற்பத்திச் சாலைகள், இரும்பு உருக்குச் சாலைகள் இரசாயனத் தொழிற்சாலைகள், இரெயில்வேக்கள், பல் வேறு தொழிற் சாலைகள், தேயிலைத் தொழிற்சாலைகள் போன்ற நாட்டின் பல்வேறு பெருந் தொழிற்சாலைகள் அனைத்தும் நேரடியாகப் 'போர்டி'னிட மிருந்தே தத்தம் தேவையைப் பெற்றுக்கொள்ளுகின்றன. ஐந்து பெரு நகராண் கழகங்கள் தம் தேவையைப் பெற்றுத் தத்தம் எல்லையில் உரியவர்களுக்குப் பகிர்ந் தளிக்கின்றன. அப்படியே எட்டுத் தனியார் அமைப்புக் களும் 'போர்டி'னிடமிருந்து, மொத்தமாகப் பெற்றுப் பலருக்குப் பகிர்ந்தளிக்க ஏற்பாடு செய்து கொண் டுள்ளன.

இவ்வாறு 1927ல் தொடங்கிப் பல்வேறு இடங்களில் அமைக்கப்பெற்ற நீர்மின்சார நிலையங்களும் தனி ஆக்க மின்சார நிலையங்களும் அங்காங்கே தனித் தனி யாகத் தொழிற்பட்டு வந்தன. எனினும் அவற்றை யெல்லாம் இணைத்து தமிழ்நாடு முழுவதுக்கும் — எல் லாக் கிராமங்களுக்கும் நகரங்களுக்கும்—நிலைத்த ஒரே அளவாக - அமைப்பாக - மின்சாரத்தைப் பகிர்ந்தளிக்க வேண்டுமென்ற எண்ணத்தில் எல்லாவற்றையும் இணைக்கும் திட்டம் மெல்லமெல்ல உருப்பெற்றது. இன்று மேலே கண்ட எல்லா நிலையங்களும் இணைக்கப் பெற்றன. நாடு முழுவதிலும் சுமார் 14000 மைல் களுக்கு உயர் சக்தி ஓட்ட அமைதியும் 20,000 தாழ் சக்தி ஓட்ட அமைதியும் உடையனவாகிய இணைப்பே இன்று பெருமளவில் இயங்கி வருகின்றது. கீழ்க்கண்ட

வகையில் மின்சார இணைப்பில் பல நிலையங்களும் இணைக்கப் பெற்றுள்ளன.

| | | | | |
|---|---|---|---|---|
| நீர் மின்சார நிலையம் | 1. பைகாரா | — | 70·000 | கி.வா. |
| | 2. மேட்டூர் | — | 40,000 | ,, |
| | 3. பாபநாசம் | — | 28,000 | ,, |
| | 4. மோயார் | — | 36,000 | ,, |
| | 5. பெரியாறு | — | 105,000 | ,, |
| | 6. குந்தா | P.H.I. | 60,000 | ,, |
| | | II. | 175,000 | ,, |
| ஆக்க அமைப்பு நிலையம் | 1. சென்னை | — | 98,000 | ,, |
| | 2. மதுரை | — | 14,000 | ,, |

இத்துணை ஆக்க வேலைக்கு இன்றளவும் சுமார் 120 கோடி ரூபாய் செலவாயிற்று. ஆண்டொன்றுக்குப் பதினைந்து கோடிக்குமேல் வருமானம் இவற்றால் வருகின்றது.

ஆண்டொன்றுக்கு 190 கோடி யூனிட் மின்சாரம் சில ஆண்டுகளுக்குமுன் உற்பத்தி (1960) செய்யப் பெற்றது. இதில் 76% நீர் மின்சார இயக்கமாகும்.

தற்போது வளர்ந்துள்ள நெய்வேலி நிலக்கரி அகழ்ந்தெழுப்பால் அங்கே ஒரு மின்சார நிலையம் அமைத்துள்ளனர். அதன் முதன்நிலையும் தொழிற்படத் தொடங்கியுள்ளது. நெய்வேலி மின்சார நிலையம் தொழிற்படத் தொடங்கினால் அதுமட்டும் 250,000 கி.வா. மின்சாரம் உண்டாக்கி நாட்டுக்கு அளிக்கும்.

இன்றைய நிலையில் தமிழ்நாட்டு மின்சார வளர்ச்சி இந்த அளவிலேயே அமையும். இந்தியநாட்டு வட பகுதிகளாகிய பஞ்சாப், உத்திரப் பிரதேசம், மேற்கு வங்காளம் ஆகிய பகுதிகளைப்போன்று அதிகமாக நீர்மின்சார உற்பத்திக்குத் தமிழ்நாட்டில் இடமில்லை. உள்ள பெரும் நிலைகளைப் பயன்படுத்தியாயிற்று எனலாம். எனினும் மேற்குத் தொடர்ச்சி மலையை அடுத்து நீலகிரி, பாலனி (Palnis) போன்ற பகுதிகளிலும் வேறு சில இடங்களிலும் ஆராய்ந்து பார்ப்பின் (ஆராய்ச்சி நடைபெற்று வருகின்றது. இன்னும் நீர்மின்சார உற்பத்திக்கு இடமிருக்கலாம். எப்படி இருந்தாலும் தமிழ்நாட்டில் பத்து லட்சம் (கிலோ வாட்) மின்சாரத்துக்கு மேலாக நீர்வழிப் பெறுவது இயலாது என்பது தேற்றம். ஆக்க நிலையங்கள் இன்றைய நிலையில் ஆந்திரநாட்டுச் சிங்கனேரி நிலக்கரியாலும் பீகார் மேற்கு வங்காளத்திலிருந்து நிலக்கரி இறக்குமதி செய்வதாலும் தொழிற்படுகின்றன.

தமிழ்நாட்டு மின்சாரத்தில் நான்கில் மூன்று பகுதி நீர் மின்சார நிலையங்களிலிருந்தே கிடைக்கின்றது. எனவே, அவற்றைப்பற்றி ஒவ்வொன்றாகச் சற்று விரிவாகவே காணல் நலம் பயப்பதாகும். இங்கே சென்னை மாநில மின்சார போர்டின் 1960-ம் ஆண்டில் கணக்கிட்ட அவர்தம் எழுத்தை அப்படியே தொகுத்துத் தருகின்றேன்.

I. சென்னை நீராவி-மின் உற்பத்தி நிலையம், சென்னை மின்சார வினியோகிப்புக் கழகத்தினரால் 1909-ல் நிறுவப்பட்டு 1947-ம் வருடம் ஆகஸ்டு மாதம் வரை அவர்களாலேயே இயக்கப் பெற்று, பின்பு சென்னை அரசாங்கத்தாரால் ஏற்றுக் கொள்ளப்பெற்றது. இது

சென்னை மின்சார இணைப்பிலுள்ள மிகப் பெரிய நீராவி மின் நிலையமாகும். இந்நிலையம் சென்னை நகரத்திற்கும் அதன் சுற்றுப்புற இடங்களுக்கும் மின்சாரம் பகிர்ந்தளிப்பதல்லாமல் கோடையிலே ஏற்படும் மின்சாரத் தட்டுப்பாட்டினையும் ஓரளவு தணிக்கிறது.

**சிறப்பியல்புகள் :**

1. மின்சார உற்பத்தி செய்யும் சாதனங்களின் சக்தியின் தொகை :—

'A' நிலையம் ; 38,500 கிலோவாட் அல்லது 51,500 ஹார்ஸ் பவர்.

'B' நிலையம் ; 30,000 கிலோவாட் அல்லது 40,200 ஹார்ஸ் பவர்.

'C' நிலையம் : 30,000 கிலோவாட் அல்லது 40,200 ஹார்ஸ் பவர்.

2. நீராவி உற்பத்தி செய்யும் சாதனம்: (கொதி கலம்)

'A' நிலையம் :—மணிக்கு 60.000 பவுண்டு நீரைச் சதுர அங்குலத்துக்கு 200 பவுண்டு அழுத்தமும் 600°F உஷ்ணநிலையும் உள்ள நீராவியாக மாற்றும் சக்தி பெற்ற நிலக்கரியால் இயங்கும் மூன்று நீராவி உற்பத்திச் சாதனங்களும் (கொதி கலங்களும்), மணிக்கு 40,000 பவுண்டு நீரைச் சதுர அங்குலத்துக்கு 200 பவுண்டு அழுத்தமும் 600°F உஷ்ண நிலையும் உள்ள நீராவியாக மாற்றும் சக்தி பெற்ற, நிலக்கரியால் இயங்கும் மற்றொரு கொதி கலமும் உள்ளன.

'B' நிலையம் :—மணிக்கு 80,000 பவுண்டு நீரைச் சதுர அங்குலத்துக்கு 425 பவுண்டு அழுத்தமும் 775°F உஷ்ணமும் உள்ள நீராவியாக மாற்றும் 5 நீராவி உற்பத்திச் சாதனங்கள் (கொதி கலங்கள்) உள்ளன.

'C' நிலையம்; மணிக்கு 150,000 பவுண்டு நீரைச் சதுர அங்குலத்துக்கு 900 பவுண்டு அழுத்தமும் 925°F உஷ்ணமும் உள்ள நீராவியாக மாற்றும் இரு நீராவி உற்பத்திச் சாதனங்கள் உள்ளன.

3. கழிவு நீராவியைக் குளிரவைத்தல்:—

குளிரவைக்கும் விமானங்கள்.

'A' நிலையம்; நிமிடத்திற்கு 150;000பவுண்டு நீரை இயற்கையாகக் குளிர வைக்கும் ஒரு விமானம்.

'B' நிலையம்; நிமிடத்திற்கு 150,000 பவுண்டு நீரை இயற்கையாகக் குளிர வைக்கும் இரண்டு விமானங்கள்.

'C' நிலையம்; நிமிடத்திற்கு 150,000 பவுண்டு நீரை செயற்கை முறையில் குளிரவைக்கும் இரண்டு விமானங்கள்.

4. கட்டி முடிக்கப்பட்ட தேதி:

'A' நிலையம் 1914-ல் தொடங்கி 1937-ம் வருடத்திலும்,

'B' நிலையத்தின் முதல் பகுதி 1953-லும் இரண்டாம் பகுதி 1956-லும் கட்டி முடிக்கப்பெற்றன.

'C' நிலையம்; 1958-ல் கட்டி முடிக்கப்பட்டது.

5. மூலதனம் 9.56 கோடி ரூபாய்.

II. மதுரை நீராவி-மின்சார உற்பத்தித்திட்டம்:— பாபநாசம் நீர்-மின்சார உற்பத்தி நிலையத்தில் கோடை காலங்களில் ஏற்படும் மின்சார சக்திப் பற்றுக் குறைவைத் தீர்ப்பதற்குக்கெனப் போர்க்காலத்திற்குப் பிறகு சென்னை அரசினரால் மேற்கொள்ளப்பட்ட திட்டங்களில் ஒன்றாகும்.

சிறப்பியல்புகள்

| | |
|---|---|
| 1. மின் உற்பத்தி செய்யும் சாதனங்களின் கூட்டுச் சக்தி ... ... | 14,000 கிலோவாட் (அல்லது) 18,750 ஹார்ஸ் பவர். |
| இருப்பிடம் ... ... | மதுரைக்கு வடக்கே சுமார் 8 கல் தொலைவில் உள்ள சமயநல்லூர். |
| 2. நீராவி உற்பத்தி செய்யும் சாதனம் (கொதி கலங்கள்):— | |

மணிக்கு 36,000 பவுண்டு நீரை, சதுர அங்குலத்திற்கு 275 பவுண்டு அழுத்தமும் 725°F உஷ்ண நிலையும் உள்ள நீராவியாக மாற்றும் சக்தி உள்ள நீராவி உற்பத்தி சாதனங்கள் மூன்றும், மணிக்கு 55,000 பவுண்டு நீரை, சதுர அங்குலத்திற்கு 275 பவுண்டு அழுத்தமும் 725°F உஷ்ண நிலையும் உள்ள நீராவியாக மாற்றும் சக்தி வாய்ந்த நீராவி உற்பத்தி செய்யும் சாதனங்கள் இரண்டும் உள்ளன.

| | |
|---|---|
| 3. நீராவியைக் குளிரவைத்தல் | 120 அடி × 250 அடி × 5 அடியும்; 280 அடி × 250 அடி × 5 அடியும் உள்ள இரண்டு குளிரவைக்கும் தண்ணீர்த் தொட்டிகள் உள்ளன. |
| 4. கட்டி முடிக்கப்பட்ட தேதி | முதல் பகுதி 1947-ல் தொடங்கி 1951-லும் இரண்டாவது பகுதி |

| | |
|---|---|
| | 1951 -ல் தொடங்கி 1954-லும் முடிவடைந்தன. |
| 5. மூல தனம் | 1.32 கோடி ரூபாய் |

III. பெரியாறு நீர்மின்சார நிலையம் :–சென்னை அரசினரால் மேற்கொள்ளப்பட்ட ஐந்தாவது நீர் மின் சாரத்திட்டமாகும். கேரள மாநிலத்திலுள்ள பெரியாறு ஏரியின்நீர் மின்சார உற்பத்திக்குப் பயன்படுத்தப்படுகிறது. 1955-ம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்ட இத்திட்டம் 35,000 கிலோவாட் சக்தியுள்ள முதல் மின் உற்பத்தி இயந்திர வழி 1958-ம் ஆண்டு அக்டோபர் மாதம் உபயோகத்திற்குக் கொண்டு வரப்பட்டது. $3\frac{1}{2}$ ஆண்டு காலத்திற்குள் 138 லட்சம் ரூபாய் சேமிப்போடு முடிக்கப்பட்ட முதல் திட்டம் இதுதான்.

**சிறப்பியல்புகள்**

| | |
|---|---|
| 1. மின்சாரம் உற்பத்தி செய்யும் சதானங்களின் கூட்டுச் சக்தி. | 105,000 கிலோவாட் 140,000 கிலோவாட் (இறுதியில்) |
| 2. சக்தியின் மூலாதாரம் | பெரியாறு ஏரி. |
| 3. மொத்தம் பயன்படுத்தப்படும் நீர் வீழ்ச்சியின் உயரம் ... | 1,263 அடி |
| 4. நீர் கொண்டு செல்லும் குழாய்கள் | ஒவ்வொன்றும் 3,200 அடி நீளமுள்ள 4 குழாய்கள் |
| 5 மின் நிலையத்தின் இருப்பிடம் ... | மதுரை மாவட்டத்தில் உள்ள கூடலூர் அருகில். |

| | |
|---|---|
| 6. மின் நிலயத்தின் மட்டம் | கடல் மட்டத்திற்கு மேல் 1,574 அடி. |
| 7. கட்டி முடிக்கப்பட்ட தேதி | 1955-ல் துவங்கி, 1959-ல் முடிக்கப்பட்டது. |
| 8. மூலதனம் ... | ரூ. 10.09 கோடி. |

IV சென்னை அரசினரால் மேற்கொள்ளப்பட்ட ஆரு வது மின்சாரத் திட்டம் இதுவரை நிர்மாணிக்கப்பட்ட திட்டங்களுள் மிகப் பெரியதாகும். இத்திட்டத்தின் படி நீலகிரிமலையிலுள்ள குந்தா நதியின் நீர் விசை முழுவதும் மின்சாரம் உற்பத்தி செய்யப் பயன்படுத் தப்படும். இத்திட்ட ஆரம்பக் கட்டத்தில் இரண்டா வது ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் இரு மின் நிலயங் கள் நிர்மாணிக்கப்படும். (1960ல் இட்ட குறிப்புகள்)

கனடா அரசாங்கம் கொழும்புத் திட்டத்தின் கீழ் இத்திட்டத்திற்காக 25 மில்லியன் டாலர் (அதாவது சுமார் 22.5 கோடி ரூபாய்) பெறுமான சாதனங்களையும் இயந்திரங்களையும் கொடுப்பதன் மூலம் நிதி உதவி செய்கிறது.

### மின் நிலயம் 1

**சிறப்பியல்புகள்**

| | |
|---|---|
| 1. மின்சாரம் உற்பத்தி செய்யும் இயந்திரங்கள் கூட்டுச் சக்தி ... | 40,000 கிலோவாட (முதற் கட்டத்தில்) 60,000 கிலோ வாட் (இறுதிக்கட்டத்தில்) |
| 2. மின் சக்திக்கு ஆதாரம் | குந்தா ஆறு. |
| 3. பயன் படுத்தப்பெறும் நீர்வீழ்ச்சியின் உயரம்... | 1175 அடி. |

| | |
|---|---|
| 4 மின் நிலையத்தின் இருப்பிடம் ... | குந்தா பாலம் (உதகையிலிருந்து 20 கல் தொலைவு) |
| 5. நிலையத்தின் மட்டம் ... | கடல் மட்டத்திலிருந்து 5353 அடி. |
| 6. கட்டி முடிக்கப்படும் தேதி | 1956-ல் வேலை துவக்கப்பட்டது. (1960ல் முடிவுற்றது.) |

### மின் நிலையம் 2

**சிறப்பியல்புகள்**

| | |
|---|---|
| 1. நிறுவப்பெறும் மின்சார உற்பத்திச் சாதனங்களின் கூட்டுச் சக்தி | 140,000 கிலோவாட் (முதற் கட்டத்தில்) 175,000 கிலோவாட் (இறுதிக் கட்டத்தில்). |
| 2. மின் சக்திக்கு ஆதாரம் | குந்தா ஆறு. |
| 3. பயன் படுத்தப்பெறும் நீர்விசையின் உயரம் ... | 2,470 அடி. |
| 4. மின் நிலையத்தின் இருப்பிடம் ... | "பெகும்பஹல்லா" நதிக் கரையின் ஓரம். |
| 5. மின் நிலையத்தின் மட்டம் | கடல் மட்டத்திலிருந்து 2,876 அடி உயரம் |
| 6. முடிக்கப்பெறும் தேதி | (1961ல் முடிவுற்றது) |
| 7. மூலதனம் (முழுத்திட்டம்) | ரூ. 35.44 கோடி. |

இவையன்றி பழைய பைகாரா, மேட்டூர், பாபநாசம் போன்ற மின்சார நிலையங்களும் நன்கு தொழிற்படுகின்றன.

மற்றைய எல்லா மாநிலங்களைக் காட்டிலும் சென்னை மாநிலம் இந்தியாவிலேயே கிராம மின்சார விஸ்தரிப்பில் முதன்மை வகிக்கின்றது.

50,032 சதுர மைல் பரப்புள்ள சென்னை மாநிலத்தில் 19,911 கிராமங்களும் 295 நகரங்களும் உள்ளன. இதன் ஜனத்தொகை 336.4 லட்சம் ஆகும். இதில் 75 சதவிகிதம் அதாவது 252.3 லட்சம் மக்கள் கிராமங்களில் வசிப்பவர்களாவர்.

இந்தியாவின் பிற பகுதிகளைப் போல் சென்னைக்கும் கிராம மின்சார விஸ்தரிப்பு மிக மிக அவசியமாகும் என்பது தெரிவு. ஏனெனில் இதன் உதவியால் உணவு உற்பத்தி பெருகுவதோடு கிராம மக்களில் பலருக்கு வேலை வசதியும் கொடுக்கப்படுகிறது. இது, சுகமான இன்ப வாழ்விற்கான வசதிகளைத் தந்து சாதாரண மனிதனின் வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்துகிறது.

9,000க்கு மேற்பட்ட நகர கிராமங்கள் மின்சார வசதி பெற்றுவருகின்றன.

மிகுந்த அளவில் கிராமங்களுக்கு மின்சாரம் அளிக்கும் திட்டம் வகுக்கப்பட்டு இப்போது வருடத்திற்கு 1,000 கிராமங்களுக்கும் 12,000 விவசாய பம்பு செட்டுகளுக்கும் மின்சார வசதி அளிக்கப்பட்டு வருகிறது.

எட்டுக் கோடி ரூபாய் செலவில் புதிய விஸ்தரிப்பு உருவகம் செய்யப்பட்டு ஒவ்வொரு ஆண்டும் செயல்படுத்தப்படுகிறது.

இந்த மாநிலத்தில் மொத்த மின்சார உபயோகத்தில் சுமார் 25 சதவீதம் விவசாய பம்பு செட்டுகளுக்காகப் பயன்படுத்தப்படுகிறது. விளக்குகளுக்கும், விவசாய உபயோகத்திற்கும் போக, கிராமக் கைத்தொழில் நிலையங்களுக்கும் வேண்டிய மின்சார வசதிகள் தரப்

பட்டு வருகிறது. விவசாயப் பொருட்களைப் பயன் படுத்தும் இவ்விதக் கிராமக் கைத்தொழில் நிலையங் களில் 6,000க்கும் மேலாக மின்சார வசதி பெற்று வருகின்றன. (இன்று இன்னும் விரிவுபெற்றிருக்கும்,

விவசாயப் பம்பு செட்டுகளுக்கெனத் தரப்படும் சலுகைகளைப் போலவே சிறு கைத்தொழில் நிலையங் களுக்கும் அவற்றை ஊக்குவிக்கும் வகையில் குறைந்த விதத்தில் சலுகையளித்து எல்லா மின்சார வசதிகளும் தரப்பட்டு வருகின்றன.*

அனைத்து இந்தியாவிலும் தமிழ்நாடே மின்சார உற்பத்தியில் தலைசிறந்து நிற்கின்றது. இதை 1961-ல் வெளியிட்ட அரசாங்க அறிக்கை நன்கு விளக்கும்.

| | அனைத்திந்தியாவிலும் 55-56 | அனைத்திந்தியாவிலும் 60-61 | 100க்கு அதிகம் | தமிழ் நாட்டில் 55-56 | தமிழ் நாட்டில் 60-61 | 100க்கு அதிகம் |
|---|---|---|---|---|---|---|
| மின்சாரம் உண்டாக்கும் அளவு (1000 K W) கணக்கில் | 3,400 | 6,800 | 100 | 256 | 571 | 123 |
| யூனிட்(பத்து லட்சம் கணக்கில்) | 11,000 | 22,000 | 100 | 1,055 | 2,500 | 136 |
| உயர்திறன் (H-T) 11 KVக்கு மேல் | 35,000 | 70,000 | 100 | 7,343 | 15,500 | 112 |
| பயன்பெற்ற நகர் கிராமங்கள் | 7.400 | 18,000 | 145 | 3543 | 10,000 | 183 |

*241வது பக்கக் கடைசிப் பகுதி முதல் இதுவரை மின் சார போர்டின் வாக்கியங்களும் குறிப்புகளுமாகும்.

1951-க்கும் 1961-க்கும் இடையில் மின்சாரம் வளர்ந்துள்ள விதம்.

| | 31-3-51 | 31-3-61 |
|---|---|---|
| உற்பத்தியின் அளவு M W | 156 | 571 |
| யூனிட் (பத்து லட்சம் கணக்கில்) | 630 | 2,500 |
| H.T. Lines (மைல்கள்) | 4355 | 15,500 |
| L. T. ,, ,, | 3580 | 20,000 |
| பயன் படுத்துபவர் (லட்சத்தில்) | 2.5 | 8 |
| மின்சாரம் பெற்ற கிராமங்கள் | 1613 | 10,000 |
| விவசாய இறைக்கும் இயந்திரங்கள் | 14373 | 100,000 |
| செலவு (அடிப்படை) கோடியில் | 30.96 | 125 34 |
| மொத்த வருமானம் ,, | 3,37 | 18.42 |

இவ்வாறு ஆண்டு தோறும் வளர்ச்சி அடையும் மின்சாரம் மேலும் வளர்ச்சி அடைய வாய்ப்புக்கள் உள்ளன. முதன் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் மின்சாரத் துறை பல வகையில் தமிழ்நாட்டில் வளர்ச்சி யடைந்தது. இன்னும் குந்தாவும் நெய்வேலியும் முழு அளவில் தொழிற்படவில்லை. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 133 கோடி செலவில் இன்னும் 7000 கிராமங்களுக்கு 75,000 இறைக்கும் இயந்திரங்களுக்கும், நாட்டில் வளரும் பல்வேறு தொழில்களுக்கும் மின் சாரம் பகிர்ந்தளிக்க ஏற்பாடு செய்யப்பெற்றுள்ளது. அத்தனையும் தொழிற்படினும் நாட்டின்தேவைக்கு 'அது போதுமா ?' என்ற வினாவுக்கு விடை காணமுடியாது. அண்டை நாடுகளும் மின்சாரத் தேவையினால் நம்மைக் கேட்கும் நிலையில் உள்ளன. எனவே இன்னும் என்ன வகையில் புது வாய்ப்புக்கள் உண்டோ, அத்தனையும் அடுத்த ஐந்தாண்டுத் திட்டங்களில் ஆராய்ந்து ஆக்கப் பணிக்கு வழிகோல வேண்டுவது அரசாங் கத்தின் முதற் கடமை என்ற அளவில், இதை நிறுத்தி மேலே செல்லலாம்.

சென்னை, கோவை, மதுரை போன்ற பெரு நகரங்களும் சில சிறு நகரங்களும் தத்தம் தொழில் வளர்ச்சியின் காரணத்தால் பல்வேறு வகையில் மின்சாரத்தைப் பயன்படுத்துகின்றன. ஆனால் கிராமங்கள் பல பெரும்பாலும் ஒளிக்காகவும் பாசனத்துக்காகவுமே மின்சாரத்தைப் பயன்படுத்துகின்றன. அவற்றையெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக வரிசைப் படுத்திக் காட்டல் என்பது இயலாத ஒன்றாகும்.

மின்சாரத்தினாலேயே வளரும் நாட்டின் ஒரு முக்கியமான துறை படக்காட்சித் துறையாகும் (Cinema). படப் பிடிப்புக்கும் அதைச் செம்மைப் படுத்துவதற்கும் அதை நாடு முழுவதும் காட்டிக் கலை வளர்ப்பதற்கும் இம் மின்சாரமே அடிப்படையாக அமைந்துள்ளது. மின்சாரம் இல்லாதிருந்தால் நாட்டில் இத்துணை அளவில் படக்காட்சி அரங்குகள் உண்டாகியிருக்குமா என்பது ஐயத்திற் கிடமாகிய ஒன்று. இந்தத் தொழில் மட்டுமின்றி நாட்டு எல்லாத் தொழில் துறைகளுமே நிச்சயமாக இந்த அளவில் வளர்ந்திருக்க முடியாது என்பது திண்ணம். ஐந்தாண்டுகளுக்கு முன் எடுத்த கணக்கின்படி தமிழ்நாட்டில் சுமார் 800 புகைப்படக் கொட்டகைகள் மின்சாரம் பெற்றன. (நிலைத்தவை 322; சுற்றுபவை 477).

உயர்சக்தி மின்சாரத்தை நேரடியாக எடுத்துக் கொள்ளும் பெருந்தொழில் நிலையங்கள் நாட்டில் எத்தனையோ உள்ளன. அவற்றை ஓரளவு வரிசைப் படுத்திக் காட்டிவிட்டாலே தமிழ்நாட்டுத் தொழில் வளத்தை ஓரளவு அறுதியிட்டுக் காட்டியதாக முடியும். ஆம்! அத்தனைப் பெருந்தொழிற்சாலைகளும் மின்

சக்தியின் துணையாலேயே இயங்குகின்றன என்பதை யாரே அறியாதார்? ஒவ்வொரு நீர் மின்சார நிலையத்திருந்தும் தனி ஆக்க மின்சார நிலையத்திருந்தும் மின்சாரம் பெறும் தொழிற்சாலைகளை மின்சார போர்டின் ஆண்டறிக்கைகளில் ஆண்டுதோறும் வெளியிட்டு வருகிறார்கள். ஆண்டுக்கு ஆண்டு எண்ணிக்கை வளர்ந்து வருவதைக் கணக்கின்றிக் காணலாம். இந்த அடிப்படையில் ஓரளவு நாட்டில் வளரும் தொழில்களையும் அவற்றால் வளம்பெறு நிலையையும் நன்கு புரிந்து கொள்ள முடியும் என நம்புகிறேன். (1956–57) ஐந்தாண்டுகளுக்குமுன் எடுத்த கணக்குப்படி பைகாரா 165 தொழிற்சாலைகளுக்கும் மேட்டூர் 65 தொழிற்சாலைகளுக்கும் பாபநாசம் 65 தொழிற்சாலைகளுக்கும் சென்னை நகர மின்சாரம் 117 தொழிற்சாலைகளுக்கு மின்சாரத்தைத் தருகின்றன. தற்போது இந்த அளவு மிகவும் விரிந்து வளர்ந்துள்ளது என்பது தோற்றம்,

தற்போது செயல் துறைக்கு வழிகோலிவரும் குந்தா இன்னும் நன்கு வளரத்தக்க பணிகள் நடைபெற்றுக்கொண்டு வருகின்றன. நான்கு பெரும் மின்சார நிலையங்களும் இணை மின்சார நிலையம் ஒன்றும் அங்கே அமைக்கப்பெறும். இப்பெரும் ஆற்றல் வாய்ந்த மின் நிலையத்திற்குக் கொழும்புத் திட்டத்தின் கீழ் கனடா (Canada) நாட்டு நிபுணர்தம் துணையும் உதவியும் உள்ளன. அதனுடைய தொழிற்படுநிலையை நேரில் காண்பது மிகவும் வியப்பூட்டுவதாகும். கண்டார் அதன் விரிவையும் விளைவையும் கண்டு வியப்பார்கள்.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நாம் மேலே காட்டியபடி மின்சார உற்பத்தியை இருமடங்காக்கும்

வேலைகள் நடைபெற்றுக் கொண்டு வருகின்றன. மேட்டூர் முழை (Tunnel)த்திட்டம் தொழிற்படத் தொடங்கினால் சுமார் 38 கோடி யூனிட் நமக்குக் கூடுதலாக மின்சாரம் கிடைக்கும். ஜூலையிலிருந்து ஜனவரி வரையில் (ஏழு திங்களில்)நீர்ப்பாசனத்துக்காக விடும் நீரை இந்த முழைத் திட்டம் வழியாகப் புது முழை வழி செலுத்தி அதன்மூலம் இந்த மின்சாரத்தைப் பெருக்கும் திட்டம் தீட்டியுள்ளார்கள். திட்டக் கமிஷனாலும் ஏற்றுக் கொள்ளப்பெற்ற இந்தத் திட்டம் விரைவில் பயனளிக்கும் என எதிர்பார்க்கப் பெறுகின்றது. குந்தாவில் மூன்றாவது நிலையாக வீழ்ச்சியை அமைத்து மின்சாரத்தைப் பெருக்கினால் அதன்வழி குந்தா திட்டத்தால் மொத்தம் 420,000 கி.வா. பெற இயலும் எனக் கணக்கிட்டிருக்கிறார்கள். பரம்பிக்குளம் திட்டம் கேரளநாட்டுடன் நன்கு ஒப்பந்தம் செய்து முடிந்த காரணத்தால் விரைவில் செயலாற்றத் தொடங்கலாம். இத்திட்டம் முற்றுப்பெறின் சுமார் லட்சம் கிலோ வாட்ஸ் (மூன்று அமைப்புக்களிலும்) மின்சாரம் கிடைக்கும் எனக் கணக்கிட்டுள்ளனர். பெரியாற்றுப் பாசனத்துக்குப் பயனற்று நிற்கும் நீரை இறைத்து மின்சாரம் உண்டாக்கினால் மேலும் அந்த நிலையத்தில் நான்கு கோடியே முப்பத்தைந்து லட்சம் யூனிட் மின்சாரம் கிடைக்கும் எனக் கணக்கிட்டுள்ளனர். இதே பெரியாறின் இரண்டாவது அமைப்பில் (Stage) இன்று 35,000 கி. வா. பெற வசதியும் இருக்கின்றது. அப்படியே நெய்வேலி மின்சார நிலையம் நன்கு தொழிற்படத்தொடங்கின் அதன் நிறைவில் இரண்டு லட்சம் கி.வா. மேலாகப் பெற வாய்ப்பும் உண்டு. இப்படி மூன்றும் ஐந்தாண்டுத் திட்ட முடிவிற்குள் எல்லாம் ஒழுங்காகச் செய்து முடிக்கப்பெறின் 1965–66ல் நாம்

மேலே காட்டியபடி பத்து லட்சம் கி. வா. (9,200,000 KW அரசாங்கக் கணக்குப்படி) கட்டாயம் பெறமுடியும். இத்துணையும் பெற்ற பிறகும் நாட்டின் வளர்ந்துவரும் தொழில் நிலைக்கேற்ப மின்சாரத் தேவையை நிறைவு செய்ய முடியுமா என்ற ஐயம் வளர்ந்து கொண்டே வருகின்றது. 'அறிதோ றறியாமை கண்டற்றால்' என்று திருவள்ளுவர் கூறிய உண்மை இன்று நாட்டின் மின்சார வளர்ச்சிக்கும் தொழில் வளர்ச்சிக்கும் பொருந்துவதாகும். அறிய அறியத்தான் நமது அறியாமை மேலும் மேலும் நன்கு நமக்குப் புலப்படுகிறது என்பது அதன் பொருளாகும். இதேநிலையில் தான் நாட்டின் தொழில் வளமும் அதனுடன் இணைந்த மின்சார வளமும் வளர வளரத்தான் பிற உலக நாடுகளை நோக்கவும் நாட்டின் பிற பகுதிகளில் உள்ள இயற்கைச் சூழல், முதலிய சாதனங்களை நோக்கவும் நாம் இன்னும் பல்வேறு துறைகளில் வளம்பெற வேண்டியுள்ளோம் என்பதை உணர முடிகின்றது. நாட்டின் தேவையும் அதற்கேற்ப வளர்ந்துகொண்டே வருகின்றது. தொழில்கள் வளர வளரத்தான் தமிழ் நாட்டு மக்கள் 'இவ்வளர்ச்சி எம்மாத்திரம்? இன்னும் நாம் எவ்வளவோ வளர வேண்டியுள்ளதே!' என எண்ணி எண்ணி ஏங்கவேண்டிய நிலை உண்டாகியுள்ளது. அப்படியேதான் நீர் மின்சார நிலையங்களும் தனி ஆக்க மின் நிலையங்களுக்குப் பத்து லட்சம் கி.வா. மேல் கடந்த ஐம்பது ஆண்டு வளர்ச்சியில்-சிறப்பாகப் பதினைந்தாண்டுகளில்—வாரி வழங்கிய போதிலும் 'இது எம்மாத்திரம்' எங்கள் தமிழ்நாட்டுத் தொழில் வளர்ச்சிக்கு இன்னும் எவ்வளவோ மின்சாரம் தேவையாகுமே' என்று தமிழர் உள்ளங்களிலும் தமிழ்நாட்டு ஆட்சியாளர் உள்ளங்களிலும் உணர்ச்சி உண்டா

கின்றது. அந்த உணர்ச்சியின் வழியே பலப்பல புது வழிகள்தோன்றுவது இயற்கை. அது தான் உண்மையில் வளர்ச்சிக்கும் அடிப்படையாகும். ஆகவே அந்த தேவையின் அடிப்படையில் ஆராயும்போது நமது துணைக்கு அணுச்சக்தி வந்து நிற்கின்றது. அணுச் சக்தியைக் கொடுத்து அழிவுத்துறைக்கு உலகை ஈர்த்துச் செல்லும் மேனுடுகளுக்கு மாருக, நம் இந்திய நாடு அதே அணுச்சக்தியை ஆக்கத் துறைக்குப் பயன்படுத்த முன்னிற்கின்றது. இந்த நிலை வரவேற்கத் தக்கதாகும். இந்த அணுச்சக்தியைக்கொண்டு அடுத்த நிலையில் (நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில்) இரண்டு லட்சத்து ஐம்பதாயிரம் கி. வா. அளவில் மின்சாரத்தைப் பெருக்க வேண்டிய திட்டம் தீட்டி வெற்றி பெறச் செய்ய வேண்டிய பொறுப்பு அரசாங்கத்திற்கும் மின்சாரத்துறையாளருக்கும் அதன் நெறியாளருக்கும் உள்ளது.* எனவே அவர்களை அந்த வகையில் இன்று தொடங்கியே வழி வகுக்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளுகிறேன். மற்றும் அண்டை உறுப்பு நாடுகளிலிருந்து பெறக்கூடிய இயற்கைச் சாதனங்களை—அவர்கள் பாழாக்கும் வீண் சக்தியாகிய சாதனங்களை-நமக்குத் தருமாறு வேண்டிப் பெறவும் ஆவன செய்ய வேண்டும். இந்த முயற்சிகளே உண்மையில் தமிழ் நாட்டுத் தொழில் வளத்தை உயர்த்தப் பயன்படுவதாகும்.

அண்மையில் அரசாங்கத்தின் மற்ருெரு முயற்சியும் தெரிவிக்கப் பெற்றுள்ளது. பெருந்தொழிலைச் செய்து நாட்டுத் தொழில் வளத்தை வளர்க்கும் தனி

* (இத்துறை தொழிற்படத் தொடங்கியுள்ளது.)

நபர்கள் ஆங்காங்கே இணைந்து தத்தம் தேவைக்கு ஏற்ற மின்சாரசக்தியைத் தனி ஆக்கத்திட்டங்களின் வழி உண்டாக்கிப் பெருக்கிக் கொள்ளலாம் என்றும் அதற்கேற்ற வகையில் அரசாங்கம் ஆவனவற்றைச் செய்யத் தயங்காது என்றும் அறிக்கை வந்தது என அறிகிறோம். அதுவும் ஒருவகையில் மின்சாரத்தை வளர்த்து அதன் வழியில் தொழில் வளத்தைப் பெருக்கச் சிறந்த செயல் சாதனமாகும் என்பது தெளிவு. எப்படியாயினும் தேவைக்குப் பின்னடையாது செயலாற்றி வெற்றி கண்டு தமிழ் நாட்டைத் தொழில் வளம் பெற்ற பொன்னுடாகச் செய்ய வேண்டுவது தமிழர் ஒவ்வொருவருடைய கடமையுமாகுமெனக் கூறி அமைகின்றேன்.

# 12. பத்தாண்டுச் சாதனைகள்*

## பெருந்தொழில்கள்

இன்றைய நிலையில், நம் நாட்டின் பெரும் பகுதி மக்கள், விவசாயத்தையே நம்பி வாழக்கூடிய நிலையில் இருக்கின்றனர். பொதுவாக, தேசிய வருமானம் வளர்ச்சி அடைந்து வருகின்றது என்றாலும் 75 சத விகித மக்கள் விவசாயத்திலேயே ஈடுபட்டிருக்கக் கூடிய காரணத்தினாலும் மக்களுடைய எண்ணிக்கை நாளுக்குநாள் வளர்ந்து கொண்டே போகின்ற காரணத்தினாலும் தனி மனிதனின் வருமானம் வர வரக் குறையக்கூடிய நிலைமை ஏற்பட்டு வருகின்றது. பொருளாதார முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகளில் ஒரு சிறு பகுதியினரே விவசாயத் துறையில் ஈடுபட்டிருக்கின்றனர். மற்றப் பெரும் பகுதியினர் வேறு தொழில்களில் ஈடுபடுகின்றனர். அந்நிலையை நம் நாட்டிலும் ஏற்படுத்துவதன் மூல

---

**25-2-61ல் நிதி அமைச்சர் ஆற்றிய சட்டமன்ற உரையின் சில பகுதிகள் அப்படியே தரப்பெற்றுள்ளன.*

மாகத்தான் நாட்டிலுள்ள வறுமையைப் போக்க முடியும் ; எல்லா மக்களுக்கும் நல்ல வேலை வாய்ப்பு ஏற்படச் செய்ய முடியும். ஆகவேதான் நம்முடைய திட்டங்களில் தொழில் வளர்ச்சிக்குப் பெரிய முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது.

தமிழ் நாட்டின் தொழில் வளர்ச்சி, நெய்வேலி நிலக்கரித் திட்டம் வெற்றி பெறுவதையே பெரிதும் பொறுத்து இருக்கிறது. இத்திட்டம் 86 கோடி ரூபாய் அளவில் உருவாக்கப்பட்டுள்ளது. இதன் முக்கியப் பகுதிகள் —

(1) 35 லட்சம் டன் பழுப்பு நிலக்கரி வெட்டி எடுப்பதற்கான சுரங்க வேலைத் திட்டம்.

(2) பழுப்பு நிலக்கரியை உபயோகப்படுத்தி 2.5 லட்சம் கிலோவாட் மின்சாரம் உற்பத்தி செய்வது.

(3) பழுப்பு நிலக்கரியை மூலப்பொருளாகக் கொண்டு ஆண்டு ஒன்றுக்கு 1.5 லட்சம் டன் ஊரியா உரம் தயாரிப்பது.

(4) 3.8 லட்சம் டன் சுட்ட நிலக்கரி அச்சுக்கள் தயார் செய்வது.

நெய்வேலி மின்சார உற்பத்தி நிலையத்திற்கு ரஷ்ய உதவி கிடைத்திருக்கின்றது. அதற்கான ஒரு ஒப்பந்தமும் 1957–ம் ஆண்டு நவம்பரில் ரஷ்யாவுடன் செய்யப்பட்டுள்ளது. மின்சார உற்பத்தி நிலையத்தைக் கட்டுவதற்கான வேலைகள் துரிதமாக நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. முதல் இயந்திரமூலம் மின்சார உற்பத்தி இவ்வாண்டு செப்டம்பர் மாதத்தில் ஆரம்பமாகுமென எதிர்பார்க்கலாம். 1962–ம் ஆண்டு டிசம்

பருக்குள் 2.5 லட்சம் கிலோவாட் அளவு மின்சாரம் உற்பத்தி செய்ய முடியுமென எதிர்பார்க்கிறோம். உர உற்பத்திக்கான தொழிற்சாலையை இத்தாலி, மேற்கு ஜெர்மனி நாடுகளின் உதவி கொண்டு அமைக்க ஏற்பாடாகி வருகிறது. இதற்கான பணிகளும் துவங்கப்பட்டு, பல இயந்திரங்களும் வர ஆரம்பித்து விட்டன. சுட்ட நிலக்கரி அச்சுக்கள் தயாரிப்பதற்கான தொழிற்சாலை அமைப்பிற்கு வந்துள்ள 'டெண்டர்கள்' பரிசீலனையில் இருக்கின்றன. நிலக்கரிச் சுரங்கத்தில் நல்ல உயர்தரக் களிமண் கிடைக்க வாய்ப்பு இருக்கின்றது. இதைச் சுத்தம் செய்து பல பொருள்களை உற்பத்தி செய்வதற்கு உபயோகப் படுத்த முடியும். இதற்கான ஒரு தொழிற்சாலையும் கட்டப்பட்டு வருகின்றது.

நெய்வேலித் திட்டம் முழுமைக்கும் 26,750 ஏக்கரா நிலம் உரிமை செய்ய வேண்டியிருக்கிறது. இதுவரையிலும் 11,454 ஏக்கரா நிலம் செய்யப்பட்டுள்ளது. இதன் காரணமாக வெளியேற்றப்பட்ட மக்களுக்கு வேறு இடங்களில் வசதி செய்து கொடுக்கப்பெற்று, அவர்கள் புனர் வாழ்விற்கான உதவிகளும் அளிக்கப் பட்டு வருகின்றன. இத்திட்டத்தில் பணியாற்றும் பல் வேறு பணியாளர்களுக்கு வீடு கட்டும் திட்டமும் விரைவாக முன்னேறி வருகின்றது. குடிநீர் வசதி, விளக்கு வசதிகள், பள்ளிகள், சுகாதார வைத்திய வசதிகள், கடைகள், விளையாட்டு மைதானங்கள் போன்ற பல்வேறு வசதிகளுக்கும் ஏற்பாடு செய்துள்ளார்கள். குடும்பங்களுக்குத் தேவையான பொருள்களை நியாயமான விலைக்கு விற்கும் முறையில் கூட்டுறவுத் தாபனங்களும் அமைக்கப்பட்டு இருக்கின்றன.

## இரும்புத் தொழிற்சாலை

தமிழ் நாட்டில் இரும்பு உற்பத்தி செய்யும் தொழிற்சாலை இல்லாத குறை பெரும் குறையாக இருந்து வந்திருக்கின்றது. சேலம் மாவட்டத்தில் இரும்புக் கனி ஏராளமாக உள்ளது. ஆயினும் அதிலே இருக்கக்கூடிய இரும்புச் சத்துக் குறைவுதான். இரும்புக் கனியை உருக்குவதற்கான நிலக்கரியும் நம் மாநிலத்தில் இது வரையில் கிடைக்காது இருந்தது. தற்போது நெய்வேலியில் பழுப்பு நிலக்கரி கிடைக்கும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. சேலம் இரும்புக் கனியையும், நெய்வேலி பழுப்பு நிலக்கரியையும் உடன் கொண்டு இரும்பு உற்பத்தி செய்ய முடியுமா என்ற ஆராய்ச்சிகள் நடை பெற்று வருகின்றன. கிழக்கு ஜெர்மன் நிபுணர்கள் இதைப்பற்றி ஒரு முன்னிலை அறிக்கையைத் தயாரித்துக் கொடுத்துள்ளார்கள். மேற்குஜெர்மனியிலிருந்து இத்திட்டத்திற்கு உதவ முன் வந்துள்ளார்கள். முதனிலை சோதனைகள், இத்திட்டம் வெற்றிபெறுவதற்கான நம்பிக்கையை நமக்கு ஊட்டுவதாய் இருந்தாலும், இதைப்பற்றி இன்னும் பெரிய அளவில் சோதனைகள் நடத்த வேண்டிய அவசியத்தைப்பற்றி ஜெர்மன் நிபுணர்கள் வலியுறுத்தி இருக்கிறார்கள். நிலக்கரி வெட்டி எடுக்கப்பட்ட பின்புதான் அச் சோதனைகளுக்கு ஏற்பாடு செய்யமுடியும். அச் சோதனைகளின் அடிப்படையில் இரும்பு உற்பத்தி செய்ய முடியும் என்ற முடிவு ஏற்படுமேயானால் தமிழ் நாட்டில் கட்டாயம் இரும்புத் தொழிற்சாலை அமையும் என்பதில் யாருக்கும் ஐயம் வேண்டியதில்லை. மத்திய சர்க்கார் இதற்கான திட்டங்களைப் பரிசீலிப்பதற்கு நிபுணர்கள் அடங்கிய ஒரு குழுவை நியமித்து இருக்

கின்றூர்கள். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் இதற்கென முதற்படியாக 25 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. ஆக்வே இரும்புத் தொழிற்சாலை அமைப்பதற்கான முதனிலை ஏற்பாடுகள் நடைபெற்றுக் கொண்டு இருந்தாலும், முடிவான சோதனைகள் நடைபெற்று, திட்டத்தை எடுத்துக்கொள்ளலாம் என்கின்ற உறுதியை நிபுணர்கள் தெரிவிக்கின்ற வரையில், நாம் பொறுமையுடன் காத்திருக்கத்தான் வேண்டும். பல கோடிக்கணக்கில் முதலீடுசெய்யவேண்டிய தொழிலைச் சோதனைகள் முடிவு பெருமல் எடுத்துக் கொள்வது என்பது முடியாத காரியம். இதற்கான எல்லா வேலைகளையும் விரைவாகக் கவனிப்பதற்காக ஒரு தனி அதிகாரியையும் நாம் நியமித்திருக்கிறோம். முதனிலை வேலைகளுக்காக மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மாநில சர்க்கார் நிதியில் 75 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது சேலத்தில் உள்ள இரும்புக் கனியைவெட்டி எடுத்து அவைகளை ஜாம்ஷெட்பூருக்கும், ஜெர்மனிக்கும் சோதனைகள் நடத்துவதற்காக அனுப்ப ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. இச்செலவுக்காக 1961-62-ம் ஆண்டு பட்ஜெட்டில் 7.5 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது.

நெய்வேலித் திட்டத்திலுள்ள பல்வேறு பகுதிகள் நிறைவேற்றப்படுவதன் மூலம் நம் இராஜ்யத்திற்கு மின்சாரம், உரம், எரிப்பொருள்கள் போன்ற பல வசதிகள் கிடைப்பதோடு, பல புதிய உபதொழில்கள் தோன்றக்கூடிய வாய்ப்பும் ஏற்படும். அண்டை இராஜ்யங்களுக்கும் இத்திட்டத்தின் மூலமாகப் பல பலன்கள் ஏற்படலாம். மின்சார உற்பத்தியை 4 லட்சம் கிலோவாட்டாக உயர்த்துவதற்கு மூன்ருவது ஐந்தாண்டுத்

திட்டத்தில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இதற்காக நிலக்கரியை அதிக அளவில் வெட்டி எடுப்பதற்கும் திட்டம் உருவாக்கப்பட்டுள்ளது.

### காவிரி எண்ணெய்

தமிழ் நாட்டில் காவிரிப் பகுதியில் எண்ணெய் இருக்கின்றதா என்பதைப் பற்றிய ஆராய்ச்சி பல அந்நிய நாட்டு நிபுணர்களால் நடத்தப்பட்டு வந்துள்ளது. 1956-ம் ஆண்டு ரஷ்ய நிபுணர்கள் அவ்விடத்தைப் பார்வையிட்டு இங்கு எண்ணெய் கிடைப்பதற்கான அறிகுறிகள் உள்ளன என்ற கருத்தை வெளியிட்டனர். இதற்காக முதனிலைச் சோதனைகளை மேற்கொள்ள வேண்டுமென இந்திய அரசாங்கத்திற்கு ஆலோசனை கூறினர். நம் சர்க்காரும் இதைப்பற்றி மத்திய சர்க்காருக்கு எடுத்துச் சொல்ல, இதற்கான சோதனைகள் 1957-58–ல் ஆரம்பமாயின. இந்தியப் புவியியல் ஆராய்ச்சிக் கழகம் இதற்கான சோதனைகளை மேற்கொண்டது. இதுவரையில் சுமார் 4,000 சதுர மைல் அளவில் 'சர்வே' நடத்தியுள்ளார்கள். மேலும் பல பகுதிகளில் சோதனைகள் நடைபெற்று வருகின்றன. எண்ணெய் எரிவாயுக் கமிஷனும் (Oil and Natural Gas Commission) இங்கு ஒலி அலைச் சோதனைகளை நடத்த நிபுணர்களையும் கருவிகளையும் அனுப்பியுள்ளனர். இந்த முதனிலைச் சோதனைகள் இப்பகுதியில் எண்ணெய் கிடைக்கும் என்ற நம்பிக்கையை ஊட்டுகின்றன.

### ஏனைய மத்தியத் திட்டங்கள்

நீலகிரியில் கச்சாபிலிம்ஸ் தொழிற்சாலை அமைப்பதற்காக உதகைக்கு அருகில் ஓர் இடம் தெரிந்

தெடுக்கப்பட்டுக் கட்டடம் கட்ட ஏற்பாடுகள் நடை பெற்று வருகின்றன. மத்திய அரசாங்கம் நிறுவப் போகும் மற்றொரு முக்கியத் தொழிற்சாலை, கிண்டியில் இரண சிகிச்சைக் கருவிகள் உற்பத்திக்கானது ஆகும். இதற்கான ஏற்பாடுகளும் நடைபெற்று வரு கின்றன. டெலி பிரிண்டர் இயந்திரங்கள் செய்வதற் கான ஒரு தொழிற்சாலை அமைப்பதற்கும் ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. புரோட்டோ டைப் தொழிற் சாலை ஒன்று நியமிக்கும் திட்டமும் நிறைவேறி வரு கிறது.

மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில், கனரக மின்சாரக் கருவிகளை உற்பத்தி செய்ய அமைக்கப் போகும் இரண்டு பெரும் தொழிற்சாலைகளில் ஒரு தொழிற்சாலை தென்னிந்தியாவில் அமையும். நம் முடைய மாநிலத்திலுள்ள சில இடங்களை இதற்கென அமைக்கப்பட்ட நிபுணர் குழு வந்து பரிசீலனை செய்து சென்றிருக்கிறது. இத் தொழிற்சாலை நம்முடைய மாநிலத்திலே ஏற்படுவதற்கான வாய்ப்புகள் உள்ளன.

பெரம்பூர் இரெயில் பெட்டித் தொழிற்சாலை 1955-ம் ஆண்டு அக்டோபர் 2-ம் தேதியன்று உற்பத்தியைத் தொடங்கிற்று. ஆண்டு ஒன்றுக்கு 350 பெட்டிகள் கட்டக்கூடிய அளவை ஐந்தாண்டுகளில் அடைய வேண்டுமெனத் திட்டமிட்டிருந்தார்கள். ஆனால் இந்த இலக்கை மூன்று ஆண்டுகளிலேயே அடைய முடிந்தது. தற்போது ஆண்டு ஒன்றுக்கு இங்கு 600 பெட்டிகள் கட்டப்படுகின்றன. இந்த ஆண்டு முடிவிற்குள்ளாக 700 பெட்டிகள் கட்டக்கூடிய அள விற்கு விரிவடைந்து விடும் என எதிர்பார்க்கிறோம்.

இதில் 7·5 கோடி ரூபாய் முதலீடு செய்யப்பட்டுள்ளது. ரயில் பெட்டிகளுக்கு உள்ளிட்டு வசதிகள் செய்வதற்கான ஒரு திட்டம் 3·7 கோடி ரூபாய் செலவில் அமைக்க ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. இரண்டு ஆண்டுகளுக்குள்ளாக இத் தொழிற்சாலை கட்டி முடிக்கப்பட்டு விடும். இதன் மூலம் பெரம்பூர் தொழிற்சாலையில் தயாராகின்ற எல்லா ரயில் பெட்டிகளும் இந்தத் தொழிற்சாலையிலேயே உள்ளிட்டு செய்யக் கூடிய வசதிகள் ஏற்பட்டுவிடும்.

**தனியார் துறை**

நம் ராஜ்யத் தொழில் வளர்ச்சியில் தனியார் துறை ஒரு முக்கியப் பங்கை ஏற்றுக்கொண்டுள்ளது. பல்வகைத் தொழிற் சாலைகள் பெரிய அளவிலே அமைப்பதற்கான திட்டங்களைப் பல தொழிற் கம்பெனிகள் வெற்றியுடன் நிறைவேற்றி வருகின்றன.

தமிழ்நாட்டில் முதன் முதலில் ஏற்பட்ட தொழில் நூல் நூற்கும் ஆலைகள்தாம். 1950-ம் ஆண்டில் 71 ஆலைகள் 17 லட்சம் கதிர்களுடனும் 7,400 தறிகளுடனும் ஏற்பட்டிருந்தன: 1956-ம் ஆண்டில் மேலும் 31 ஆலைகள் அமைந்து, மொத்தம் 21·7 லட்சம் கதிர்களும் 8.016 தறிகளும் இயங்கி வந்தன. அடுத்த ஐந்தாண்டுகளில் 30.6 லட்சம் அளவிற்குக் கதிர்கள் அதிகப்பட்டுள்ளன. அகில இந்தியாவிலும் 135.4 லட்சம் கதிர்களே உள்ளன. இவைகளில் 22 சதவீதத்துக்குமேல் நம்முடைய மாநிலத்தில் அமைந்துள்ளன. ஆனால் தறிகள் போதுமான அளவுக்கு அதிகரிக்கவில்லை. அதற்கு முக்கிய காரணம் இங்கு உற்பத்தியாகும் நூலில் பெரும் பகுதி கைத்தறிக்கு உபயோகப்

படுவதுதான். இருப்பினும் தறிகளை மேலும் அதிகப் படுத்துவதற்கும் முயற்சி எடுப்பது அவசியம். மூன்ரு வது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் மில்களில் பொருத்துவதற்காக 10,000 விசைத் தறிகளை நம்மாநில திற்காக ஒதுக்கவேண்டுமென மத்திய சர்க்காரைக் கேட்டுக் கொண்டிருக்கிருேம்.

அண்மையில் துணி உற்பத்தி செய்வதில் ஒரு புரட்சிகரமான மாறுதல் ஏற்பட்டிருக்கின்றது. இயற்கையாகக் கிடைக்கும் பஞ்சு அல்லது பட்டு இவை களைக்கொண்டு துணி செய்வதற்குப் பதிலாக இர சாயன முறையில் செயற்கைப் பஞ்சு, செயற்கை நூல் இவைகளை உற்பத்திசெய்யும் முறைகளைக் கண்டு பிடித்துள்ளார்கள். இதன் பயனுக விவசாய நிலங் களில் பஞ்சு உற்பத்தி செய்வதற்குப் பதில் காடுகளில் வளருகின்ற மரங்களை உபயோகித்துச் செயற்கைப் பஞ்சையும், நூலையும் தயார் செய்ய முடியும். இதற் கான நிலம் பஞ்சுப் பருத்தி விளைவிக்கும் நிலத்தைப் போன்று வளம்பெற்றதாக இருக்க வேண்டிய அவ சியம் ஒன்றுமில்லை. அத்துடன் ஒரு ஏக்கரில் தயா ராகின்ற பருத்தியைக் காட்டிலும் அந்த ஏக்கரில் தயா ராகின்ற மரத்தைக் கொண்டு செய்யப்படும் செயற்கை நூல் பல மடங்கு அதிகமாக உள்ளது. பஞ்சுப் பற்ருக் குறை இருக்கக்கூடிய நாட்டில் இந்த நவீன முறை களைக் கையாளுவது அவசியமாகிறது. இந்த அடிப் படையில் 'தென்னிந்திய விஸ்கோஸ் கார்ப்பொரேஷன்' என்ற தாபனம் கோயம்புத்தூருக்கு அருகில் இதற் கென ஒரு தொழிற்சாலையை அமைத்து வருகின்றது. நம் ராஜ்யத்தில் ஏற்பட்டிருக்கக்கூடிய முக்கியமான தொழிற்சாலைகளில் இதுவும் ஒன்று.

சேலத்தில் அலுமினியக் கனியை உபயோகித்து அலுமினியம் தயார் செய்வதற்கான திட்டம் பூர்த்தி யாகிவிட்டது. சமீபத்தில் இதற்காக ஒரு கம்பெனியும் பதிவு செய்யப்பட்டு மூலதனத்திற்கான பங்குகளும் பொது மக்களிடமிருந்து சேர்க்கப்பட்டுள்ளன. இத்தாலியிலுள்ள சிறந்த மான்டிகேட்டினி என்ற கம்பெனி இதற்கு உதவ முன் வந்துள்ளது. வேலை தொடங்கி இரண்டு ஆண்டுகளுக்குள் அலுமினிய உலோக உற்பத்தி செய்ய முடியுமென எதிர் பார்க்கப்படுகிறது.

வருடம் ஒன்றுக்கு 20,000 டன் காகிதம் உற்பத்தி செய்யக்கூடிய தொழிற்சாலை ஒன்றை சேஷாயி தாபனத்தார் கட்டி வருகின்றனர். மேலும் சிறிய அளவில் காகிதம் உற்பத்தி செய்வதற்காக ஆறு லைசென்சுகள் வழங்கப்பட்டிருக்கின்றன. சர்க்கரைத் தொழிற்சாலையில் உப பொருளாகக் கிடைக்கும். கரும்புச் சக்கைகளைக் கொண்டு காகிதக் கூழ் (pulp) செய்யக்கூடிய திட்டமும் பரிசீலனையில் இருக்கின்றது. சர்க்கரைத் தொழிற்சாலையிலே ஏற்படக்கூடிய இன்னொரு மூலப் பொருள் வெல்லக் கசடு (molasses). இதிலே இருந்து எரி சாராயம் உற்பத்தி செய்ய முடியும். வருடம் ஒன்றுக்கு 20 லட்சம் காலன் எரி சாராயம் உற்பத்தி செய்யக்கூடிய ஒரு தொழிற்சாலை அமைப்பதற்கு லைசென்சு வழங்கப் பட்டுள்ளது.

உரத் தொழிற்சாலைகள் பல ஏற்படுவதற்கான வாய்ப்புகளும் நம் இராஜ்யத்தில் உள்ளன. முன்பே குறிப்பிட்டபடி நெய்வேலியில் யூரியா உரம் செய்வதற்குத் தொழிற்சாலை அமைக்கப்பட்டு வருகிறது. பாரி அண்டு கம்பெனியார் அம்மோனியம் பாஸ்பேட்

என்ற உரம் செய்வதற்கான ஒரு தொழிற்சாலையை அமைத்து வருகின்றனர். கோத்தாரி அண்டு சன்ஸ் தூத்துக்குடிக்குப் பக்கத்தில் அம்மோனியம் பாஸ்பேட் தயாரிப்பதற்கான ஒரு பெரும் தொழிற்சாலையை அமைக்க முன் வந்துள்ளனர். இவைகளெல்லாம் உரு வாகும் பொழுது, நம் ராஜ்யத்திற்கு வேண்டிய நைட் ரஜன் உரம் போதிய அளவிற்கு உற்பத்தியாகும். பாஸ்பேட் உரமும் நம்முடைய ராஜ்யத்தில் 110,000 டன் அளவுக்கு இப்போது உற்பத்தியாகிறது. மேலும் 140,000 டன் சூபர் பாஸ்பேட் உற்பத்தி செய்வதற் காக மூன்று தொழிற்சாலைகள் சென்னை, கடலூர், கோயம்புத்தூர் ஆகிய இடங்களில் அமைக்க லைசென் சுகள் வழங்கப்பட்டுள்ளன. இந்தப் புதிய தொழிற் சாலைகளில் முழு உற்பத்தி ஏற்படும்பொழுது மொத் தம் 2. 5 லட்சம் டன் சூபர் பாஸ்பேட் உரம் உற்பத்தி செய்ய முடியும். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட முடி விற்குள்ளாக 320,000 டன் பாஸ்பேட் உரம் நமக்கு வேண்டியிருக்குமென மதிப்பிட்டிருக்கிருர்கள். ஆக வே இன்னொரு தொழிற்சாலை ஏற்படுவதற்கான தேவை உள்ளது. வருடம் ஒன்றுக்கு 60,000 டன் சூபர் பாஸ்பேட் உற்பத்தி செய்வதற்குத் தஞ்சாவூரில் ஒரு தொழிற்சாலையை அமைக்க முயற்சி நடைபெற்று வருகின்றது. இதற்கும் அனுமதி கிடைக்குமென எதிர் பார்க்கிருேம்.

ரசாயனத் தொழில் வகைகளில் தாரங்கதாரா கெமிகல் வொர்க்ஸ் 30,000 டன் காஸ்டிக் சோடா உற்பத்தி செய்யும் ஒரு தொழிற்சாலையை அமைத்துத் தொழில் நடைபெறுவது அங்கத்தினர்களுக்குத் தெரியும். இதன் உற்பத்தி அளவை 60,000 டன்னுக்கு

அதிகரிக்கத் திட்டமிடப்பட்டு அதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. இத்தொழிற் சாலையில் உப பொருளாக வரக்கூடிய குளோரின் வாயுவைப் பயன்படுத்துவதற்கான ஒரு திட்டமும் பரிசீலனையில் இருந்து வருகிறது. இத் திட்டம் உருவானல், பிளாஸ்டிக் உற்பத்தி செய்வதற்கு மூலப் பொருளாக உள்ள பி. வி. சி. என்ற இரசாயனப் பொருளை வருடம் ஒன்றுக்கு 10,000 டன் அளவுக்கு உற்பத்தி செய்ய முடியும். தாழையூத்தில் வருடம் ஒன்றுக்கு 10,000 டன் கால்சியம் கார்பைட் உற்பத்தி செய்யக்கூடிய தொழிற் சாலை அமைக்கப்பட்டு உற்பத்தி ஆரம்பமாகியிருக்கிறது. மேட்டூரில் காஸ்டிக் சோடா, பிளீச்சிங் பவுடர், குளோரின் திரவம் ஆகிய இரசாயனப் பொருள்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன.

இயந்திரக் கருவிகள் செய்யும் துறையிலும் நல்ல முன்னேற்றம் கண்டுள்ளோம். கோயம்புத்தூர் மாவட்டத்திலும், சென்னை நகர்ப்புறத்திலும் பல முக்கிய என்ஜினீயரிங் தொழிற்சாலைகள் அமைந்துள்ளன. இவைகள் தமிழ் நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு நல்ல முறையில் உதவி வருகின்றன.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் நம்முடைய மாநிலத் தொழில்களை நடத்துவதற்காக பதிவு செய்யப்பட்ட கம்பெனிகளின் எண்ணிக்கை 908. அவைகளில் 66 பப்ளிக் லிமிடெட் கம்பெனிகளாகவும், 842பிரைவேட் லிமிடெட் கம்பெனிகளாகவும் உள்ளன. பப்ளிக் லிமிடெட் கம்பெனிகளுக்காக மொத்தம் அனுமதிக்கப்பட்ட பங்குத்தொகை53:36கோடிரூபாய். அதில் செலுத்தப்பட்ட பங்குத்தொகை 4.53 கோடி ரூபாய். 842 பிரைவேட் கம்பெனிகளுக்கு அனுமதிக்கப்பட்ட

பங்குத் தொகை 106.68 கோடி ரூபாய். செலுத்தப்பட்ட பங்குத் தொகை 42.64 கோடி ரூபாய். இந்தப் புள்ளி விவரங்கள் நம் மாநிலத்திலே ஏற்பட்டிருக்கக்கூடிய தொழில் வளர்ச்சியை ஓரளவுக்கு விளக்கிக் காட்டுகின்றன. ஆனால் நாட்டின் பொருளாதார வளர்ச்சி போதிய அளவிற்கு ஏற்பட்டு மக்களுடைய வாழ்க்கைத் தரம் நன்கு உயரவேண்டுமென்று சொன்னால் இதைவிடப் பெரிய அளவில் தொழில் வளர்ச்சி ஏற்படுவது அவசியம். ஆகவே மேலும் தொழில் வளர்ச்சி ஏற்படுவதற்கான திட்டங்கள் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே எடுக்கப்பட்டு நிறைவேற்றப்படுவது அத்தியாவசியமாகிறது.

**தொழிற் கல்வி**

நம் மக்களிடையே தொழில் நுட்ப அறிவும், தொழில் திறமையும் பெருகுவதுதான் இந்தத் தொழில் வளர்ச்சிக்கு அடிப்படை. சென்ற பத்தாண்டுகளில் இந்த அறிவையும், திறமையையும் வளர்ப்பதற்குத் தொழில் நுட்பக் கல்வித் துறையில் பல திட்டங்களை நிறைவேற்றியுள்ளோம். அதன் பயனாக இப்போது வருடம் ஒன்றுக்கு 1,157 மாணவர்கள் பொறியியல் கல்லூரிகளில் சேர வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. பல தொழில் பள்ளிகளில் வருடம் ஒன்றுக்கு 2,910 மாணவர்கள் சேர இடவசதி செய்யப்பட்டுள்ளது. இருப்பினும் மூன்றாவது திட்டக் காலத்திலும் அதைத் தொடர்ந்து நான்காவது திட்டக் காலத்திலும் நமக்கு வேண்டிய பட்டப்படிப்புப் பெற்ற பொறியாளர்களையும், 'டிப்ளமா' பெற்றவர்களையும் கணக்கெடுப்போமானால் பற்றாக்குறை ஏற்படும் என்றுதான் தோன்றுகிறது. ஆகவே பொறியியல் கல்லூரிகளையும்

இன்னும் அதிகப்படுத்த வேண்டியது அவசியமாகின்றது. மூன்ருவது திட்டக் காலத்தில் ஒரு பிராந்தியப் பொறியியல் கல்லூரியையும், தனியார் துறையில் இன்னொரு பொறியியல் கல்லூரியையும் ஆரம்பிப்பதெனத் திட்டமிடப்பட்டுள்ளது. ஒவ்வொரு கல்லூரியிலும் வருடம் ஒன்றுக்கு 120 மாணவர்கள் சேர்க்கப்படுவதற்குப் பதிலாக 180 மாணவர்கள் சேர்க்கப்படுவார்கள். பிராந்தியப் பொறியியல் கல்லூரியில் வருடம் ஒன்றுக்கு 250 மாணவர்கள் சேருவதற்கு வசதி செய்யப்படும். இந்த முறையில் மூன்ருவது திட்ட முடிவிற்குள் பொறியியல் கல்லூரிகளில் வருடம் ஒன்றுக்கு 1767 மாணவர்கள் சேர்க்கமுடியும். பல தொழிற் பள்ளிகளில் இப்போது இருப்பதைவிட மேலும் 700 பேர் சேருவதற்கான வசதிகள் செய்யப்படும். மூன்ருவது திட்டக் காலத்தில் தொழில் நுட்பக் கல்விக்காக 6·5 கோடி ரூபாய் செலவு செய்வதென முடிவு செய்யப்பட்டுள்ளது. இரண்டாவது திட்டக் காலத்தில் தொழில் நுட்பக் கல்விக்கு ஒதுக்கிய தொகை 3 37 கோடி ரூபாய். பொறியியல் துறையில் பெரிய அளவில் மேல்படிப்பு போதிப்பதற்குரிய வசதிகளுடன் இந்தியத் தொழில் நுட்பக் கழகம்(இண்டியன் இன்ஸ்டிடியூட் ஆப் டெக்னலஜி) மத்திய சர்க்காரால் கிண்டியில் அமைக்கப்பட்டு நடைபெற்றுவருகின்றது. அதற்கான கட்டடங்கள் துரிதமாகக் கட்டப்பட்டு வருகின்றன. இதற்கு வேண்டிய உதவியை அளிக்க மேற்கு ஜெர்மன் சர்க்கார் முன்வந்துள்ளார்கள். மேற்கு ஜெர்மன் நிபுணர்களும் பேராசிரியர்களும் இந்தத் தாபனத்தில் பணியாற்றி வருகின்றனர். இந்தத் தாபனத்தின் மூலம் பொறியியல் துறையில் நல்ல முன்னேற்றங்கள் காண்பதற்கு வாய்ப்புகள் உள்ளன.

நாட்டின் பெருந்தொழில்கள் இயங்குவதற்குப் பொறியியல் பட்டதாரிகள், டிப்ளமா உடையவர்கள் மட்டும் போதாது. பிட்டர், வெல்டர் போன்ற பல் வேறு வகைப்பணியாளர்களும் தேவை. இந்த ரகத் தொழிலாளர்களுக்குப் பயிற்சி அளிப்பதற்கான நிலையங்களும் நம் மாநிலத்தில் பல இயங்கி வருகின்றன. முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் ஆண்டு ஒன்றுக்கு 768 நபர்களைச் சேர்த்துக் கொள்ளக்கூடிய வசதி இந்தப் பயிற்சி நிலையங்களில் இருந்தது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் மேலும் 2,400 பேருக்குப் பயிற்சி அளிப்பதற்கான அளவிற்கு நிலையங்கள் திறக்கப்பட்டன. இதைத் தவிர்த்துத் தனியார் நடத்தும் தொழிற்சாலைகளில் 205 பேர் தொழில் பயிற்சி பெறுவதற்கு ஏற்பாடு செய்துள்ளார்கள். தொழிலாளர்கள் ஓய்வு நேரங்களில் பயிற்சி பெற்றுத் தங்களுடைய அறிவையும் திறமையையும் பெருக்கிக் கொள்வதற்கான வாய்ப்பைக் கொடுப்பதற்காக, மாலை வேலைகளில் நடைபெறும் இரண்டு பயிற்சி நிலையங்களும் திறக்கப்பட்டு இருக்கின்றன. இவைகளில் 400 பேர் பயிற்சி பெற இடமுள்ளது. இந்தத் தொழில் பயிற்சித் திட்டங்களுக்காக இரண்டாவது திட்டக் காலத்தில் 97 லட்சம் ரூபாய் செலவு செய்யப்பட்டது. மூன்றாவது திட்டக் காலத்தில் இவ் வகையில் 3·25 கோடி ரூபாய் செலவு செய்யத் திட்டமிட்டுள்ளோம். மேலும் 14 தொழில் பயிற்சி நிலையங்கள் ஏற்பாடு செய்து அவைகளில் 3500 பேருக்குப் பயிற்சி கொடுப்பதற்கு வகை செய்யப்படும். மாலை வேலைகளில் பயிற்சி கொடுக்கும் நிலையங்கள் மேலும் இரண்டு திறக்கப்படும்.

பெருமளவில் தொழில் வளர்ச்சி ஏற்படுகின்ற கட்டத்தில் தொழில் தாபனங்களே பயிற்சி கொடுப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்வது மிகவும் தேவை. பெரம்பூர் ரயில் பெட்டி கட்டும் தொழிற் சாலையில் இவ்வாறு பயிற்சிகொடுக்க ஏற்பாடு செய்துள்ளார்கள். தனியார் துறையிலுள்ள பெரிய தொழில் தாபனங்களும் இந்தப் பணியில் ஈடுபட முன் வருவது மிகவும் அவசியம். இதற்கான திட்டம் ஒன்றை வகுப்பதற்குச் சர்க்காரும் வேண்டிய உதவியைச் செய்ய வேண்டும்.

### சிறு ரகத் தொழில்கள்

ஒரு நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு, பெருந் தொழில்கள் மட்டும் இருந்தால் போதாது. சிறிய தொழில்கள் பெருமளவில் அமைவதன் மூலமாகத்தான் வேலை வாய்ப்புகள் பரவலாக ஏற்படுவதுடன் மக்களின் தொழில் திறனும் வளர்ச்சி அடைய முடியும். சிறு ரகத் தொழில்களை அமைப்பதில் நமது மாநிலம் முன்னணியில் இருந்து வருகின்றது. முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் 12 லட்சம் ரூபாய்தான் இத் துறையில் செலவழிக்கப்பட்டது. இரண்டாவது திட்டக் காலத்தில் 3,96 லட்சம் ரூபாய் சிறு ரகத் தொழில்களுக்காகச்செலவழிக்கப்படுவதுடன் தொழில் பண்ணைகளை அமைப்பதற்கும் 1,54 லட்சம் ரூபாய் செலவு செய்யப்பட்டுள்ளது. கிண்டி, விருதுநகரில் இரண்டு தொழில் பண்ணைகளும் மார்த்தாண்டம், பேட்டை, மதுரை, திருச்சிராப்பள்ளி, ஈரோடு ஆகிய இடங்களில் ஐந்து தொழிற் பேட்டைகளும் ஏற்படுத்தப் பட்டுள்ளன. தஞ்சையில் அமைக்கப்பட்டு வரும் தொழிற்பேட்டைகூடிய விரைவில் தொழிற்படும். காட்பாடியில் ஒரு பேட்டை கட்டப்பட்டு வருவதுடன்

சேலத்தில் ஒன்றும் அமைப்பதற்கான முதனிலை வேலைகள் நடைபெற்று வருகின்றன. கிண்டியில் அமைக்கப் பெற்ற தொழிற்பண்ணை மிகச்சிறந்தமுறையில் அமைக்கப்பட்டு, தற்போது 128 தொழிற் கூடங்கள் உற்பத்தியில் ஈடுபட்டுள்ளன. சுமார் 3,000 பேர் இவைகளில் பணிபுரிந்து ஆண்டு ஒன்றுக்கு இரண்டு கோடிக்கு மேற்பட்ட மதிப்புள்ள பொருள்களை உற்பத்தி செய்கின்றனர். உலகின் பல்வேறு பகுதிகளிலிருந்து வரக்கூடிய தொழில் நிபுணர்கள், இப்பண்ணை அமைப்பைக் கண்டு அவர்களுடைய பாராட்டுதல்களைத் தெரிவித்துள்ளார்கள்.

மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் சிறுரகத் தொழில்கள் அமைப்பதற்காகவும், தொழில் பண்ணைகளுக்காகவும் மொத்தம் 11·2 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. 1961-62-ல் கோவையில் வெப்பப் பக்குவ சாலை (Heat treatment shop) ஒன்றும், கருவி நிலையம் (tools room) ஒன்றும், பொதுத் தொழில் வசதித் தொழிற்சாலை (common lease shop) ஒன்றும் ஆரம்பிக்கத் திட்டமிடப்பட்டுள்ளது. சேலத்தில் கருவி நிலையமும் (tools room), மதுரையில் ஒரு பொதுத் தொழில் வசதித் தொழிற்சாலை (common lease shop) யும், கார்குடியில் ஒரு மரம் அறுக்கும் தொழிற்சாலை (saw mill) யும் அமைக்கப்படும். ஐந்து கிராமப் பட்டறைகள் (rural workshops) கரூர், நாமக்கல், திருப்பூர், நாகர்கோயில், விழுப்புரம் ஆகிய இடங்களில் ஏற்பாடு செய்யப்படும். சென்னையில் இரும்பு உருக்குக் கட்டுமான (structural) தொழிற் சாலை ஒன்று தொடங்கத் திட்டமிடப்பட்டுள்ளது கோவையிலும் மதுரையிலும் கச்சாப் பொருள் கிடங்குகள் (raw materials depot)

ஆரம்பிக்க நிதிவசதி செயயப்பட்டிருக்கிறது. அத்துடன் மதுரை, கோயம்புத்தூர், நாகர்கோயில் ஆகிய இடங்களில் கருவி அமைப்புப் பயிற்சி (tool design) களுக்கான நிலையங்களும்; பல்வகை அச்சு வார்ப்படம் (dyes), பீங்கான் பண்டம் (ceramic wares) செய்தல் போன்ற தொழில்கள் ஆரம்பிக்கவும் ஏற்பாடு செய்யப்படும். தனியார் துறையில் சிறு ரகக் கைத்தொழில்கள் ஆரம்பிக்கக் கடன் உதவி செய்வதற்காக ரூ. 30 லட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது. மூன்ருவது திட்டக் காலத்தில் கீழே விவரித்து இருக்கின்றபடி பல்வேறு இடங்களில் தொழிற் பேட்டைகளும், பண்ணைகளும் அமைக்க ஏற்பாடு செய்யப்படும் :—

| | | |
|---|---|---|
| | | (ரூபாய் லட்சத்தில்) |
| (1) | 5,000 ஜனத்தொகைக்கு உட்பட்டு இருக்கக் கூடிய இடங்களில் வேலைக் கூடம் (works shed) ஆரம்பிப்பதற்காக ... ... ... | 5–80 |
| (2) | 20,000 மக்களுக்கு மேற்படாமல் இருக்கக்கூடிய நகரங்களில் இரண்டு பேட்டைகள் அமைக்க [அவைகளில் ஒன்று தேனியில் மற்ருென்று விருத்தாசலத்தில் — பீங்கான் பாண்டத் (ceramic wares) தொழிற் பண்ணையாக அமைக்கப்படும்.] ... ... | 25–00 |

| | (ரூபாய் லட்சத்தில்) |
|---|---|
| (3) 50,000 - க்கு மேற்படாத ஜனத் தொகை கொண்ட புதுக்கோட்டை, காரைக்குடி, அரக்கோணம், கிருஷ்ணகிரி, கோயில்பட்டி ஆகிய இடங்களில் ஐந்து பேட்டைகள் அமைக்க ... ... ... | 31–00 |
| (4) ஒரு லட்சம் அளவில் ஜனத்தொகை கொண்ட தேவகோட்டை, திண்டுக் கல், கும்பகோணம், ராஜபாளையம் ஆகிய நான்கு இடங்களில் ஐந்து தொழிற் பண்ணைகள் அமைக்க ... | 41–00 |
| (5) அம்பத்தூரில், கிண்டியில் இருப்பது போன்று ஒரு பெரிய தொழிற் பண் ணையும், பெரம்பூரில் தோல் தொழில் களுக்காக இரண்டு பண்ணைகளும் ஏற்படுத்துவதற்கு ... ... | 95–00 |
| (6) தொழில் நிலையங்கள் அமைப்பதற் காகக் கிண்டியிலும் அம்பத்தூரிலும் நிலங்களைத் தயார் செய்து கொடுப் பதற்காக ... ... | 45–00 |
| (7) இரண்டாம் திட்டக் காலத்தில் ஆரம்பிக்கப்பட்ட பண்ணைகளையும் பேட்டைகளையும் விரிவுபடுவதற்காக | 50–00 |

| | | (ரூபாய் லட்சத்தில்) |
|---|---|---|
| (8) தொழிற் பேட்டைகளிலும் பண்ணை களிலும் வாடகை மானியம் கொடுப் பதற்காக | ... ... | 7 20 |
| | மொத்தம் ... | 3,00.00 |

இவ்வாறு மூன்றுவது திட்டக் காலத்தில் மூன்று கோடி ரூபாய் அளவில் பல தொழிற் பண்ணைகளும் பேட்டைகளும் அமைக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. அத்துடன், தனியார் துறையில், பேட்டைகளும் பண்ணைகளும் அமைக்க முன் வருவார்களேயானுல் அவர்கள் செய்யும் முதலீட்டில் 80 சதவிதம் எளிய வட்டி விகிதத்தில் கடனுகக் கொடுத்து உதவவும் முடிவு செய்யப்பட்டுள்ளது.

சிறு ரகத்தொழிலில் ஏற்பட்டிருக்கக்கூடிய முன் னேற்றத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டு தனிப்பட்டவர்கள் பல தொழில்கள் ஆரம்பிக்க முன் வருவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகின்றது. இவ் வகையில் தமிழ்நாடு முழுவதிலும் சிறு தொழில்களைப் பரவலாக ஏற்படுத்துவதன் மூலம்தான் உண்மையான தொழில் வளம் பெருக முடியும்.

**போக்கு வரத்து**

தொழில் வளர்ச்சிக்கு முக்கியமாக வேண்டிய இன்னொரு வசதி நல்ல போக்குவரத்துச் சாதனங்கள். நம் மாநிலப் பகுதியில் சென்ற இரண்டு ஐந்தாண்டுத் திட்டக் காலத்திலும் புதிய ரயில் பாதைகள்

ஒன்றும் அமைக்கப்பட வில்லை. தொழில் வளர்ச்சி ஏற்படுவதற்கேற்ப ரயில் வசதியும் பெருக வேண்டியது அவசியமென்பதைப் பற்றி யாரும் மறுக்க முடியாது. அதிலும் முக்கியமாக நெய்வேலியில் ஏற்படக்கூடிய தொழில் வளத்தை நல்ல முறையிலே பயன்படுத்த வேண்டுமென்று சொன்னால் அதைப் பல பாகங்களுடன் இணைக்கக்கூடிய முறையில் புதிய ரயில் பாதைகள் அமைத்தாக வேண்டும். ஆகவேதான், சேலம்-பெங்களூர் ரயில் பாதையை அமைப்பது அவசியம் என்பதை வலியுறுத்தி வந்திருக்கின்றோம். இன்னும் சில புதிய ரயில் பாதைகள் ஆங்காங்குத் தேவைப்படுகின்றன. மூன்றுவது திட்டக் காலத்தில் மிகவும் அவசியமான ரயில் பாதைகளையாவது உடனடியாக அமைக்க முன்வர வேண்டுமென்று மத்திய சர்க்காரைக் கேட்டுக் கொண்டுள்ளோம்.

தொழில் வளப் பெருக்கத்திற்கு ரயில் பாதைகளோடு மட்டுமல்லாமல் சாலை வசதிகளும் பெரிய அளவில் அமைய வேண்டியது அவசியம். சில நாடுகளில் ரயில் பாதையைவிட சாலை அமைப்புகளுக்கு முக்கிய இடம் கொடுக்கப்படுகிறது. நமது மாநிலத்தில் சென்ற பத்தாண்டுகளில் சாலைகள் அமைப்பதில் பெரிய முன்னேற்றம் கண்டிருக்கின்றோம். தமிழ்நாட்டில் நல்ல சாலை வசதிகள் ஏற்பட்டிருக்கின்றன என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்கின்றனர். முதல் திட்டத் தொடக்க காலத்தில் நம் மாநிலத்தில் 6,800 மைல் கிராமச் சாலைகளும், 14,400 மைல் நீளமுள்ள மற்றச் சாலைகளும் இருந்தன. முதல் திட்டக் காலத்தில் 1,643 மைல் கப்பிச் சாலைகளாக மாற்றப்பட்டன.

2,861 மைல் புதிய மண் ரோடுகளும் அமைக்கப்பட்டன. இரண்டாவது திட்டக் காலத்தில் 2,861 மைல் கப்பிச் சாலைகள் அமைப்பதற்கும், 1830 மைல் புதிய சாலை அமைப்பதற்கும் திட்டமிட்டு நிறைவேற்றப்பட்டுள்ளது. ஆகவே சென்ற பத்தாண்டுகளில் 4,681 மைல் புதிய சாலைகள் அமைக்கப்பட்டுள்ளன. அத்துடன் சாலைப் பராமரிப்பிலும் நல்ல முன்னேற்றம் கண்டிருக்கின்றோம். இரண்டாவது திட்ட முடிவுக் காலத்தில் கீழே விவரிக்கப் பட்டிருக்கின்ற கணக்குப்படி சாலைகள் ஏற்பட்டிருக்கும் :—

| எண். | சாலை வகை | 1950-51ல் சாலைகளின் நீளம்—முதல் திட்டத் தொடக்கம். | 1955-56-ல் சாலைகளின் நீளம்—இரண்டாம் திட்டத் தொடக்கம். | 1960-61-ல் சாலைகளின் நீளம்—இரண்டாம் திட்ட முடிவில். |
|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) |
| 1. | சிமெண்ட் காங்கிரீட் சாலை... | 188 | 276 | 319 |
| 2. | தார் இட்ட சாலை ... | 926 | 4 616 | 7,111 |
| 3. | கப்பி இட்ட சாலை ... | 12,953 | 10,818 | 11,143 |
| 4. | கப்பி இடாத சாலை ... | 7,131 | 8,335 | 7,305 |
| | மொத்தம்... | 21,198 | 24,045 | 25,878 |

மேலே குறிப்பிட்டிருக்கும் புள்ளி விவரங்களிலிருந்து தார்ச் சாலைகள் அமைப்பதில் நாம் நல்ல முன்னேற்றம் கண்டிருக்கின்றோம் என்பது நன்கு விளங்கும். சாலைகள் பராமரிப்பில் நாம் எடுத்திருக்கக்கூடிய ஒரு முக்கியமான முடிவு மாவட்டக் கழகத்தாரின் கீழிருந்த

எல்லா முக்கிய சாலேகளேயும் அரசாங்கமே எடுத்துக் கொள்ள வேண்டுமென்பது. சென்ற ஐந்தாண்டுகளில் 3,840 மைல் நீளமுள்ள சாலேகள் அரசாங்க நிர்வாகத் தின்கீழ்க் கொண்டு வரப்பட்டிருக்கின்றன. தொடர்ந்து படிப்படியாக மேலும் முக்கிய சாலேகள் அரசாங்க நிர்வாகத்தின்கீழ்க் கொண்டுவரப்படும். தற்போது புதியதாக எடுத்துக்கொள்ளப்பட்ட சாலேகளுக்காக மட்டும் அரசாங்கம் வருடம் ஒன்றுக்கு 1,02 லட்சம் ரூபாய் அதிகமாகச் செலவு செய்யவேண்டிய நிலே ஏற் பட்டிருக்கிறது.

பல புதிய பாலங்களேயும் கட்டி, சாலேப் போக்கு வரத்து வசதியை வளர்ச்சி செய்திருக்கின்ரேும். இரண்டாவது திட்டக் காலத்தில் சர்க்கார் நிர்வாகத் தின்கீழ் இருக்கக்கூடிய சாலேகளில் 31 பெரிய பாலங் களும், 120 சிறிய பாலங்களும் கட்டி முடிக்கப்பட் டுள்ளன. தற்போது சாலேகள் அமைப்பதற்கும் பரா மரிப்புக்குமாக ஆண்டு ஒன்றுக்கு 5 கோடி ரூபாய் அள வுக்குச் செலவழித்து வருகின்ரேும். இவைகளில் சுமார் 3 கோடி ரூபாய் சாலேப் பராமரிப்புக்காக மட்டும் செல வாகின்றது. மூன்ருவது திட்டத்தில் சாலே அபிவிருத் திக்காக 11 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது.

இதுவரையிலும் மாவட்டக் கழக நிர்வாகத்தின் கீழிருந்து வந்த சாலேகளில் அரசாங்க நிர்வாகத்தின் கீழ்க் கொண்டு வரப்பட்டவை போக எஞ்சியுள்ள சாலே களின் பராமரிப்பு, பஞ்சாயத்துக் கூட்டாட்சிகளின் பொறுப்பாகும். அதற்காக ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியனுக்கும் தலே ஒன்றுக்கு 40 ந.பை. வீதம் சர்க் கார் மானியம் கொடுக்கப்படும். இதன் மூலம் வருடம்

ஒன்றுக்கு 1,20 லட்சம் ரூபாய் செலவாகுமென எதிர் பார்க்கப்படுகிறது.

எதிர்காலத்தில் சாலைகளின் தரத்தை உயர்த்துவதில் நாம் முக்கிய கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது. அவைகளிலும் சிறப்பாகத் தொழில் வளர்ச்சி ஏற்படக்கூடிய பகுதிகளில் பளுவான வாகனங்கள் செல்லக்கூடிய முறையில் பாலங்களைப் பலப்படுத்தவும் சாலைகளின் தரத்தை உயர்த்தவும் ஏற்பாடு செய்வது மிக அவசியம். இம்முறையில் சேலம்–நெய்வேலிப் பகுதியிலுள்ள ரோடுகளையும், கோயம்புத்தூர்–மேட்டூர்ப் பகுதியிலுள்ள ரோடுகளையும், தூத்துக்குடிப் பகுதியிலுள்ள ரோடுகளையும் பலப்படுத்துவதற்குத் திட்டமிட வேண்டும்.

சென்னை நகருக்குள்ளும் இப்போது போக்குவரத்து நெருக்கடி அதிகமாகிக் கொண்டு வருகிறது. அதற்கேற்ற முறையில் சாலை வசதிகளைப் பெருக்குவது மிகவும் அவசியம். தற்போது இருக்கக்கூடிய நெருக்கடியைத் தீர்க்கின்ற அடிப்படையில் மட்டும் நோக்காமல், 15 ஆண்டு அல்லது 20 ஆண்டுகளுக்குப் பிறகு எந்த அளவிற்குப் போக்குவரத்து பெருகிவிடும் என்பதையும் ஊகித்து, அதற்கேற்ற முறையில் சாலைகளை விரிவுபடுத்துவது அவசியமாகின்றது. இதற்காக மூன்றாவது திட்டக் காலத்தில் 1,50 லட்சம் ரூபாய் அளவிற்குச் செலவு செய்ய உத்தேசித்துள்ளோம்.

### துறைமுகங்கள்

பெரும் தொழில் வளர்ச்சி ஏற்படும்பொழுது வெளிநாடுகளிலிருந்து இயந்திரம், சில முக்கிய மூலப்

பொருள்கள் போன்ற பலவற்றை இறக்குமதி செய்வது அவசியமாகின்றது. அதே சமயத்தில் நம் நாட்டில் இருக்கக்கூடிய பல பொருள்களை வெளிநாட்டிற்கு அனுப்புவதன் மூலம்தான் நாம் பல பொருள்களை இறக்குமதி செய்வதற்கான அன்னியச் செலாவணியைச் சேகரிக்க முடியும். ஆகவே வெளிநாட்டு வர்த்தகம் ஏற்றுமதி இறக்குமதி இருவகைகளிலும் பெருகிக் கொண்டே போகக்கூடிய நிலை ஏற்பட்டுள்ளது. அதற்கேற்றபடி துறைமுக வசதிகளையும் விரிவாக்கியாக வேண்டும். சென்னைத் துறைமுகம் இந்த அடிப்படையில்தான் இப்போது பெரிய அளவில் விரிவாக்கப்பட்டு வருகின்றது. 1896–ம் ஆண்டு ஏற்பட்ட இந்தத் துறைமுகம் 1911 வரை எந்தவிதமான முக்கிய வசதிகளும் இல்லாமலேயே இயங்கி வந்திருக்கிறது. 1911–ல் சில புதிய வசதிகள் அங்கு ஏற்பாடு செய்யப்பட்டன. பிறகு 40 ஆண்டுகளுக்கு அதாவது 1951–ம் ஆண்டுவரை எந்த விதமான வளர்ச்சியுமே ஏற்படவில்லை. 1930–ம் ஆண்டுவாக்கில் இத்துறைமுக வழியாக 10 லட்சம் டன் அளவிற்குப் பொருள்கள் ஏற்றுமதி இறக்குமதியாகி வந்தன. இரண்டாவது யுத்தம் ஆரம்பித்ததன் காரணமாக இங்கு நடைபெற்று வந்த வர்த்தகம் மிகவும் பாதிக்கப்பட்டது. ஆனால் இரண்டாவது யுத்தம் முடிந்தவுடன் 20 லட்சம் டன் அளவிற்குப் பல இயந்திரங்களும், உணவுப் பொருள்களும் இங்கு இறக்குமதியாக ஆரம்பமாயின. துறைமுகத்தில் இருந்த வசதிகள் இவைகளுக்குப் போதுமானவையாக இல்லை. ஆகவே துறைமுகத்தை விரிவுபடுத்தத் திட்டமிட வேண்டியது அவசியமாயிற்று. துறைமுக நிர்வாகத்தினிடமிருந்த நிலம் மிகக் குறைவாக இருந்த காரணத்தினால் இருக்கின்ற

பகுதிக்குள் இந்தத் திட்டத்தை ஏற்பாடு செய்வது கடினமாயிற்று. துறைமுக அபிவிருத்தியின் அவசியத்தை உணர்ந்து நம் மாநில அரசாங்கமும் இப்போது துறைமுகத்தின் தென் பகுதியிலே இருக்கக்கூடிய கடற்கரைப் பகுதியைத் துறைமுக விரிவுக்காகக் கொடுத்திருக்கிறார்கள். 1952-ம் ஆண்டில் 86 ஏக்கரா மதராஸ் போர்ட் டிரஸ்டுக்குக் கொடுக்கப்பட்டது. பிற்பாடு இந்த நிலமும் போதாது என்ற நிலைமை ஏற்பட்ட காரணத்தினால் கூவம் நதி வரையில் இருக்கக்கூடிய 77 ஏக்கரா நிலத்தைச் சர்க்கார் மேலும் கொடுத்து உதவியுள்ளது.

பல பொருள்கள் சென்னைத் துறைமுகத்தில் இறக்குமதியாவதுடன், சமீபகாலத்தில் இரும்புக்கனி இங்கிருந்து பெரிய அளவில் ஏற்றுமதியாகி வருகின்றது. 1950-ம் ஆண்டில் சுமார் 20,000 டன் அளவிற்கு இரும்புக்கனி இத் துறைமுகத்திலிருந்து வெளி நாடுகளுக்கு அனுப்பப்பட்டது. தற்போது அது 7.8 லட்சம் டன் அளவிற்கு உயர்ந்துள்ளது. அடுத்த 5 அல்லது 10 வருஷங்களுக்குள்ளாக 30 அல்லது 40 லட்சம் டன் அளவிற்கு இரும்புக்கனி ஏற்றுமதியாகலாம் என எதிர்பார்க்கப்படுகிறது. இந்த வர்த்தக வளர்ச்சிகளையெல்லாம் அடிப்படையாகக் கொண்டு சென்னைத் துறைமுகம் இன்றைக்கு விரிவாக்கப்பட்டு வருகின்றது.

கப்பல்கள் வந்து நிற்பதற்கும், கப்பல்களிலிருந்து பிரயாணிகள் இறங்குவதற்கும், வெவ்வேறு பொருள்களை இறக்குவதற்கும் வேண்டிய பல்வேறு திட்டங்கள் இன்று நிறைவேறி வருகின்றன. இவை எல்லாவற்

றிற்கும் அவசியமான அலுவலகம், மருந்தகம், தொழிற்சாலை வசதி, பணியாளர்களுக்கு வீடு கட்டும் வசதி இவைகள் எல்லாம் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. இத் திட்டத்தில் மொத்தம் 16 கோடி ரூபாய் செலவழிக்கப்படும்.

சென்னைத் துறைமுகம் இந்த அளவில் பெரி தாக்கப் பட்டாலும்கூட, இந்த ஒரு துறைமுகம் மட்டும் நம்முடைய தேவையை நிறைவு செய்வது இயலாத காரியம். துறைமுக வசதி சென்னையில் மட்டும் இருக்கக்கூடிய காரணத்தினால் பல பெரும் தொழில்கள் சென்னைக்கு அருகில் அமைந்து, அதன் காரணமாக இப்பொழுதே பல நெருக்கடிகள் ஏற்பட்டுக்கொண்டு இருக்கின்றன. ஆகவே இன்னொரு பெரிய துறைமுகத்திற்கு ஏற்பாடு செய்வது மிகவும் அவசியமாகின்றது. இந்த அடிப்படையில்தான் சென்னை அரசினர் தூத்துக்குடித் துறைமுகத்தை ஒரு ஆழ்கடல் துறைமுகமாக மாற்றவேண்டுமென்று அடிக்கடி வற்புறுத்தி வந்திருக்கின்றனர். மூன்றாவது திட்டக் காலத்தில் தூத்துக்குடித் துறைமுக வளர்ச்சித் திட்டம் எடுத்துக் கொள்ளப்பட வேண்டுமென இப்போது முடிவாகி இருப்பதை எல்லோரும் வரவேற்பார்கள். அந்தத் திட்டத்தை விரைவாக நிறைவேற்றி வைப்பதற்கு எல்லா நடவடிக்கைகளும் உடனடியாக எடுக்கப்படுமென நம்புகிறோம். மேலும் அத்துடன் கடலூர், நாகைப்பட்டினம் போன்ற சிறிய துறைமுகங்களிலுள்ள வசதிகளையும் பெருக்கவேண்டிய தவசியம். அதற்காக மூன்றாவது திட்டத்திலே நிதி ஒதுக்கப்பட்டுள்ளது.

தூத்துக்குடித் துறைமுக வளர்ச்சியுடன் இணைந்திருப்பது சேது சமுத்திரத் திட்டம். இன்றைக்கு

இந்தியாவுக்கு மேற்குப் பகுதியிலிருந்து கிழக்குப் பக்கம் வரக்கூடிய கப்பல்கள் எல்லாம் இலங்கையைச் சுற்றிக்கொண்டுதான் வரவேண்டியிருக்கிறது. சேது சமுத்திரத் திட்டம் அமைப்பதன்மூலம் இலங்கைக்கும், இந்தியாவுக்கும் மத்தியிலே இருக்கக்கூடிய கடல் வழியாகக் கப்பல்கள் செல்ல ஏற்பாடு செய்ய முடியும். இதைப்பற்றித் திரு. இராமசாமி முதலியார் அவர்களின்கீழ் அமைக்கப்பட்ட குழு முன்பே ஓர் அறிக்கையைத் தந்திருக்கிறது. இத் திட்டம் பற்றிய இறுதியான முடிவு எடுக்குமுன் இன்னும் சில புள்ளி விவரங்கள் தேவையாக இருக்கின்றனவென்பதை உணர்ந்து, மேலும் சில பரிசீலனைகள் இப்போது நடைபெற்று வருகின்றன. திரு. இராசாமி முதலியார் குழுவில் பணியாற்றிய கேப்டன் டேவிஸ் என்ற கடல் துறை நிபுணர் அண்மையில் மறுபடியும் நம் நாட்டுக்கு வந்து, இந்தப் பரிசீலனைகள் நடக்க வேண்டிய முறையை வகுத்துக் கொடுத்துச் சென்றிருக்கிறார். சேது சமுத்திரத் திட்டம் உருவாவதன் மூலமாகத்தான் தூத்துக்குடித் துறைமுக வளர்ச்சியும் நல்ல முறையிலே மேலும் பயன்பட முடியும். நம்முடைய கடலோரக் கப்பல் போக்குவரத்தையும் பெரிய அளவில் வளர்க்க முடியும். ஆகவே சேது சமுத்திரத் திட்டத்தை நடைமுறையில் கொண்டு வருவதற்குத் தொடர்ந்து முயற்சிகள் செய்யப்படும்.

# 13. வாணிபமும் தொழில் வளமும்

வாழ்வின் தேவைகளே பொருள் உற்பத்தியைப் பெருக்குகின்றன என்றும் அவ்வுற்பத்திப் பெருக்கமே நாட்டின் தொழில்வளமாக அமைகின்றதென்றும் கண்டோம். வாழ்வுக்குப் பலபொருள் தேவை. அவற்றை உண்டாக்கும் தொழிற்சாலைகள் பல. வயலுள் விளையும் உணவுப் பொருள்களும் தொழிற்சாலைகளில் உண்டாகும் பிற பொருள்களும் அவ்வவற்றை விரும்பும் மக்களைச் சென்றடைந்து அவரவர் வாழ்விற்குப் பயன் படுகின்றன. வயலில் விளையும் பொருள்களையும் தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் பொருள்களையும் தேவையானவருக்குக் கொண்டு சேர்க்கும் ஒரு தொழிலையே வாணிபம் என்ற பெயரால் வழங்கி வருகின்றார்கள். சில வேளைகளில் இவ்வாணிபம் நேருக்கு நேராக நடப்பதுமுண்டு; சில வேளைகளில் சிலரோ பலரோ உற்பத்திச் சாலைக்கும் பயன் படுத்துவோருக்கும் இடையில் நின்று பணியாற்றுவர். அவர்களையே வணிகர் என அழைக்கின்றோம். சிறப்பாக வாணிபம்

இல்லையானல் நாட்டில் பொருள் பெருக்கம் வளராது. என்னதான் தேவையிருந்தாலும் தேவைப் பொருள்கள் நெடுந்தொலைவுள்ள தொழிற்சாலைகளில் உற்பத்தி செய்தாலும் அவற்றைத் தேவையானவர் கையில் சேர்க்க இடையில் பலர் தேவைப் படுகின்றனர். அவர் களே வணிகராவர். அவ்வணிகர் திறனும் தொழில் வளத்துக்கு இன்றியமையாததாகின்றது. அவ்வணிகர் பொருள்களை உற்பத்திச் சாலையிலிருந்து பல்வேறு வகைகளில் கொண்டு சென்று அவற்றின் சிறப்பியல்பு களை மக்களுக்கு உணர்த்தி விளக்கி, அவற்றை விற் பனை செய்வர். இன்று வாணிபத்துக்கு விளம்பரமும சிறந்த சாதனமாக அமைந்துள்ளது. எனவே வாணிப மும் விளம்பரமும் இன்றைய தொழில் வளத்துக்கு இரு கண்களென அமைந்துள்ளன.

ஒன்றைக் கொடுத்து மற்றொன்றைப் பெறுதலே வாணிபம் இவ்வாணிபம் நேற்று இன்று ஏற்பட்ட தன்று; தமிழ் நாட்டில் இரண்டாயிரமாண்டுகளுக்கு முன்பே சிறப்புற்றிருந்த தென்பதை முன் ஒரு பகுதி யில் கண்டோம். ஆயினும் இன்று நாம் பொருள்களைக் கொள்ளும் வகையில் அன்று வாணிபம் நடந்தது என்று சொல்ல இயலாது. இன்றைக்கும் கிராம மக்க ளில் பலர் நாம் பயன் படுத்தும் காசுகள் இன்றியே பல பொருள்களைப் பண்டமாற்றுச் செய்து கொள்ளு கின்றனர். அரிசியிட்டுக் கறிவேப்பிலை வாங்குவதும் நெல்இட்டுத் தயிர்கொள்வதும் கிராம மக்களிடை நாள் தோறும் நடைபெறுகின்ற நிகழ்ச்சிகளே. அதைப் பண்டமாற்று வாணிபம் என்பர்.

'கங்கை நதிப்புரத்துக் கோதுமைப் பண்டம்
காவிரி வெற்றிலைக்கு மாறு கொள்வோம்'

என்று விடுதலைக் கவிஞர் பாரதியார் கூட இப்பண்ட மாற்று வாணிபத்தைக் குறிக்கிறார். தத்தமிடம் மிகுதி யாக உள்ள பொருளைக் கொடுத்துத் தமக்குத் தேவை யான பொருளைப் பெற்றுக் கொள்ளும் இவ்வழக்கமே பண்டைக்கால வழக்கம்.

இப்பண்டமாற்று வாணிபத்தைச் சாதாரணப் பொருள்களல்லாது காதல் நெறியினும் கடவுள் நெறி யினும் கூடப் போற்றிவந்தார்கள் எனக் காண்கின் றோம். தலைவன் தலைவியர் இருவரும் ஒருவர் மற்ற வருக்குத் தம்மைக் கொடுக்கக் கடமைப்பட்டவராவர். ‘இருவரும் மாறிப்புக்கு இதயமெய்தினர்’ என்பர் கம்பர். அவ்வாறு ஒருவரை ஒருவர் முற்றத்தந்து மாறிக் கொள்வதிலேயே உண்மை இன்பமாகிய காதல் நன்கு சிறக்கும். இதையே வள்ளுவர்,

*“சாயலும் நாணும் அவர் கொண்டார் கைம்மாறு*
*நோயும் பசலையும் தந்து”* (குறள் 1183)

என்று தலைவனைப் பிரிந்த தலைவியின்மேல் வைத்துக் காட்டுகின்றார். கடவுளைப் பாட வந்த மாணிக்கவாசகர் இதே நிலையில் பண்டமாற்று வாணிபத்தைக் குறித் துத் தாமும் இறைவனும் ஒருவரை ஒருவர் மாற்றிக் கொண்டதைக் காட்டி, அப்பண்டமாற்று வியாபாரத் தில் தாமே லாபம் பெற்றவர் என்பதையும் குறிக் கின்றார்.

*‘தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்*
*சங்கரா ஆர்கொலோ சதுரர்*
*அந்த மொன்றில்லா ஆனந்தம் பெற்றேன்*
*யாதுநீ பெற்றதொன் றென்பால்?’*

என்பது திருவாசகம்.

மிகப் பழங்காலத்தில் காசும் பணமும் வழக்கத்தில் இல்லாதன. அக்காலத்திய மக்கள் பல பொருள்களை யும் செல்வமாகவே கொண்டார்கள். 'மாடு' என்பதைச் செல்வமாகக் கொண்டதை முன்னமே பார்த்தோம். சங்கும் பலகறையும் பிற பொருள்களும் செல்வமாகப் போற்றப் பெற்றன. உண்மையிலேயே அக்காலத்தில் பொருள்களுக்குச் சிறந்த மதிப்பு இருந்து வந்தது. கொள்வதும் கொடுப்பதுமாகிய பண்ட மாற்றே வாணிபத்தில் சிறந்த இடம் பெற்றிருந்தது.

எனினும் காலவரலாற்று நிலையில் இது அவ்வளவு எளிமையாக இல்லாத நிலையும் காசும் பணமும் உண் டான நிலையும் இப்பண்டமாற்று நிலையை மாற்றி விட் டன. ஒவ்வொரு பொருளையும் நெடுந் தொலைவு கொண்டு செல்வது இயலாது. மற்றும் அரிசி அல்லது நெல் கொடுத்து ஆடை வாங்க ஒருவன் நினைத்தால் ஆடை தருபவனுக்கு நெல் தேவையில்லா திருக்கலாம். எனவேதான் இடையில் காசும் பணமும் பொருளின் அளவையும் மதிப்பையும் வரையறுக்கும் பொருள் களாக அமைந்தன. இன்று இந்தக் காசும் பணமுமே வாணிபத்தை வளர்க்கின்றன. உற்பத்தியாளரோ, விவசாயியோ தன் பொருளை இடையிலுள்ள வணிக ருக்கு விற்றுத் தம் பொருளுக்கு உரிய பொருளைப் பண மாகப் பெற்று, தமக்கு வேண்டிய பிற பொருள்களை வேற்று வியாபாரிகளிடமிருந்து அப்பணத்தைக் கொடுத்துப் பெற்றுக் கொள்ளுகின்றான். இவ்வாணிக முறை எளிமையாக உள்ளதோடு தொழில் வளத்தைப் பெருக்கவும் வகை செய்கின்றது.

இன்று இவ்வாணிபத்துறை எத்தனையோ வகை யில் வளர்ந்துள்ளது. உலக முழுவதிலும் இவ்வணிகக்

19

குழுக்கள் இருக்கின்றன. பழங்காலத்தில் 'வணிகச் சாத்து' என்னும் வியாபாரக் கூட்டங்கள் ஊர்தோறும் தத்தம் பொருள்களை மாடுகள், கழுதைகளின்மேல் ஏற்றிச்சென்று வாணிபம் செய்தார்கள் எனக் காண்கின்றோம். இன்றோ வணிகர் ஒவ்வொரு இடத்துக்கும் செல்ல வேண்டிய தேவையில்லை. பொருள் இடையில் முக்கிய இடம் வகிக்கின்றது. அதிலும் காசும் பணமும் கையிடைக் கொள்ள வேண்டிய தேவையும் இல்லை. நாடு முழுதும்-உலகமெங்கணும்-வங்கிகள் (Bank) தனியார் துறையிலும் அரசியல் துறையிலும் இயங்கி வருகின்றன. வாணிபத்துக்கும் அதன் வழியே தொழில் வளர்ச்சிக்கும் இந்த வங்கிகள் பெருந் தொண்டாற்றுகின்றன. 'செக்' மூலம் கோடிக்கணக்கான பண மாற்றம் நடைபெறுகின்றது. வணிகருக்கும் தொழில் வளத்துக்கும் வேண்டிய பணம் முதல் ஈந்தும் சில வங்கிகள் பணியாற்றுகின்றதைக் காண்கின்றோம். இன்று உலகெங்கணும் பல்வேறு வணிகக் குழுக்கள் திறம்படச் செயலாற்றிப் பல்வேறு பொருள்களைப் பிற நாடுகளுக்கு அனுப்பியும் பெற்றும் நாட்டின் செழிப்பையும் சிறப்பையும் பெருக்குகின்றன அரசாங்கங்களே இந்த வாணிபத்துறையிலே பங்கு கொண்டு தொழிற்படுவதையும் அறிவோம். பல்வேறு தொழில்ஆலைகளை அமைத்து அர்சாங்கம் தொழிலைப் பெருக்குவதோடு, பல்வேறு பொருள்களை நாடுவிட்டு நாடு அனுப்புவதற்கும் ஒரே நாட்டுக்குள் பல பகுதிகளுள் விற்பனை செல்வதற்கும் திட்டங்கள் வகுத்துள்ளமை அறிவோம். 'State Trading Corporation' போன்ற பல தாபனங்களும் நம் நாட்டில் இத்துறையில் தொழிற்படுவதை நாம் அறிவோம். மக்கள் தேவையறிந்து தேவையான பொருள்களைக் கண்டும் கொண்டும் வந்து கொடுக்க

இவை பயன்படுகின்றன என்பர். தனி வணிகர் இலாபம் ஒன்றையே கருதிச் சிற்சில பொருள்களைப் பதுக்கி வைத்துக் காலம் வந்தால் கொள்ளை லாபத்திற்கு விற்பதையும் பிற தவருன செயல்களையும் அரசாங்கம் இவற்றின் மூலம் ஓரளவு நீக்க முயல்கின்றது. இன்னும் மக்கள் தேவைக்குரிய பொருள்களை உரிய நிலையில் அவர்களிடம் சென்று சேரத்தக்க வகையில் பல கூட்டுறவுப் பண்டக சாலைகள் நாட்டில் அரசாங்க உதவியோடு பயன்படுகின்றன. சென்னை நகரில் உள்ள திருவல்லிக்கேணி கூட்டுறவு விற்பனைச் சங்கம் (T.U.C.S) இப்பெரு நகரின் தேவையைப் பல வகையில் நிறைவேற்றுவதைப் பலரும் அறிவர்.

ஒரு சில வணிகர் தம் செயலால் நாட்டுக்குக் கெட்ட பெயர் வருவதை முன் ஒரு முறை கண்டிருக்கிறோம். தமிழ் நாட்டில் பழங்காலத்தில் பெரு நிலையில் தரை வாணிபமும் கடல் வாணிபமும் சிறக்க நடந்த விதத்தையும் கண்டோம். அந்த வாணிபத் துறையில் நேர்மையினைக் கடைப்பிடிக்க வேண்டிய வகையைப் பலரும் வற்புறுத்திவந்தனர். சான்றாண்மையை உலகுக்கு விளக்க உவமையாகப் பயன்பட்டதே இவ்வணிகக் கோல்தான்.

> 'சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்
> தொருபால்
> கோடாமை சான்றோர்க் கணி.' (குறள். 118)

என்று வள்ளுவர் நடுநிலைமை தவருத பெரியோர்களுக்குத் துலாக்கோலை எடுத்துக் காட்டி உலகுக்கு விளக்குகின்றார். 'துலைநா வன்ன சீர்த்தி' என்று திராசின் நடுநிலையை நாட்டில் பல நல்ல புலவர்கள் புகழ்ந்துள்ளனர். பிறபொருளையும் தம்பொருள் போலக்

கருதி நல்ல முறையில் 'கொள்வதூஉம் மிகை கொள்ளாது, கொடுப்பதூஉம் குறைபடாது' வாணிபம் செய்தலே நல்ல வாணிபமாகு மென்றும் அவ்வாணிபத்தாலேயே நாடும் நகரும் சிறக்கு மென்றும் வள்ளுவரும் பிறரும் கூறுகின்றனர்.

'முதலிலார்க்கு ஊதியம் இல்லை' (449) என்பதும்
'வாணிபம் செய்வார்க்கு வாணிபம் பேணிப்
பிறவும் தமபோற் செயின் (120)

என்பதும் குறளாகும். இந்த முறையே வாணிபத்துக்கு ஏற்றதாகும். நம் நாட்டிலும் உலகில் பிற நாடுகளிலும் இந்த முறையில் வாணிபம் நடைபெறுத காரணத்தினால்தான் நாட்டுக்குநாடு நம்பமுடியாதநிலை ஏற்படுகிறது. இந்த நம்பிக்கையே வாணிபத்தின் உயிர் நாடி. இந்நம்பிக்கை இழக்கும் நிலை உண்டாடானால் அந்த வாணிபம் நசித்துவிடும். அதனால் நாட்டின் உற்பத்தி நிலைகெட்டுப் பொருளாதாரம் சீர்கேடடையும். எனவே நாட்டுத் தொழிலும் அதன் வழியே பெருகும் உற்பத்திப் பொருள்களும் அவற்றை விற்பனை செய்யும் வணிக முறையும் செம்மையுடையனவாக வளர்க்கப்பெறல் வேண்டும்.

'திரைகட லோடியும் திரவியம் தேடு' என்ற ஔவையின் வாக்கும், கலத்தில் சேரும் வாழ்க்கை முறையும் தமிழ் நாட்டு மக்கள் உள்நாட்டில் மட்டுமன்றிக் கடல்மேல் கலஞ் செலுத்திப் பிற நாடுகளுடன் வாணிபத் தொடர்பு கொண்டிருந்தார்கள் எனக் காட்டுகின்றன. இன்று தரைவழியிலும் கடல் வழியிலும்—ஏன்?—வான் வழியிலும் வாணிபம் நடைபெறுகின்றது. தமிழ் நாட்டில் விளையும் காயும் வெற்றிலையும், கொய்த மறுநாள் இலண்டனில் கிடைக்

கக்கூடிய வகையில் விரைவாக வான் வழிச் செல்லு கின்றன. மற்றும் குளிர்ச்சாதனங்கள் உண்டான காரணத்தால்எல்லாப்பொருளும்எல்லாக்காலங்களிலும் கிடைக்க வழி ஏற்பட்டுள்ளது. எனவே மக்கள் தம் தேவையை எங்கிருந்து வேண்டுமானாலும் நிறை வேற்றிக் கொள்ளலாம். பணம் ஒன்றே முக்கியமாக வேண்டப்பெறுவது.

வாணிபத்துறையிலே இன்று நாட்டுக்கு நாடு பல கட்டுப்பாடுகள் உள்ளன. மிக எளிமையாக எப் பொருளும் எந்நாட்டுக்கும் செல்வதென்பது இயலாது. உலகில் பொருளாதார அடிப்படையில் நாடுகள் பல வகையில் பிரிக்கப் பெற்றுள்ளன. அமெரிக்கா, பிரிட்டன், ரஷ்யா போன்ற நாடுகளில் வாணிபம் செய்யத் தனித்தனிப் பொருள் முறை கையாளப் பெறு கின்றது. அந்த முறைகளிலும் ஒரு நாட்டுக்கும் மற்றொரு நாட்டுக்கும் பொருள் நிறைவு செய்ய வேண்டிய வகையிலேயே வாணிபம் அமைகின்றது. அதற்கென அரசாங்கங்கள் தத்தம் பொருள் அமைப்பை (Foreign Exchange) அடிக்கடி கண்காணித் துச் சரி செய்ய வேண்டியுள்ளது. கடன் வகையிலும் மாற்றுப் பொருள் நிலையிலும் நாட்டுக்கு நாடு நடை பெறுகின்ற வாணிபம் இன்று அதிகமாகவுள்ளது. நம் இந்திய நாடு, விடுதலை பெற்றபின் மேற்கொள்ளும் ஐந்தாண்டுத் திட்டங்களுக்காக நாடுகள் பல வற்றிலு மிருந்து பல்வேறு பொருள்களைப் பெறுகின்றது. அப்படியே பல்வேறு மூலப்பொருள்களையும் முடிந்த பொருள்களையும் (Raw materials & Finished Products) வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்கின்றது. இந்த வகையில் நம் நாட்டு வாணிபம் பெருநிலையிலும் சிறு

நிலையிலும் நடைபெற்றுத் தொழில் வளத்தையும் பெருக்குகின்றது.

இனி, இவ்வாணிபத் துறையில் சிறக்கவும், நல்ல வாணிப வளனால் நாட்டுச் செல்வம் செழிக்கவும் உள்ள வழித் துறைகளை ஆராய்ந்து காணல் நலமாகும். இன்று நாட்டில் ஒரே பொருளைப் பலரும் உற்பத்தி செய்கின்றனர். அத்தகைய பொருள்கள் மக்கள் வாங்கும் சந்தைக்கு வந்து குவிகின்றன. ஒரே வகையான பொருளுக்கு விலையில் ஏற்றத் தாழ்வு இருக்கக் காண்கின்றோம். ஒரு சிலர் குறைந்த விலையிலுள்ள பொருள்களை வாங்கிச் செல்லுகிறார்கள். ஆனால் அவற்றைப் பயன்படுத்திய பின் அதன் தரக் குறைவைக் கண்டு அதை வாங்க யாரும் அஞ்சுவர். அவர்களே அதே பொருளை அடுத்த முறை வாங்கும்போது உயர்ந்த விலை கொடுத்து நல்ல பொருளையே வாங்கிச் செல்வர். இன்றும் சில பொருள்களை வாங்கும்போது உயர்ந்த விலையாக இருந்தாலும் நல்ல பொருளை வேண்டுமென்று கேட்பதைச் சந்தைகளில் காண்கின்றோம். எனவே வாணிபத்தில் குறைந்த விலையில் விற்பனைப் பொருள்களைத் தயாரித்தோம் என்பதைக் காட்டிலும் சிறந்த பொருள்களைத் தயாரித்துச் சரியான விலைக்கு விற்றோம் எனக் கூறுதல் பெருமைதரும். நன்றாகவும் பொருளைத் தயாரித்துக் குறைந்த விலைக்கும் தருவதாயின் வாங்குவோர் இரட்டை மகிழ்ச்சி அடைவர். அவர்கள் வாணிபமும் பெருகும் என்பதில் ஐயமில்லை. ஒருவேளை அவருக்கு ஒவ்வொரு பொருளின் மேலும் வரும் இலாபம் சிறிய அளவினதாக இருந்தாலும் விற்பனை எண்ணிக்கை பெருகுகின்ற காரணத்தால் நாளாவட்டத்தில் அதிக லாபம் பெற வாய்ப்பு உண்

டாகும். இந்த உண்மையை அறிந்த சில உற்பத்தியாளர்கள் திறம்படச் செயலாற்றி அதிக இலாபம் அடைந்து வாணிபத்தையும் தொழில் வளத்தையும் பெருக்கி நாட்டுக்கு நலம் அளிக்கிறார்கள். தொழிலும் வாணிபமும் பொன் வாத்தினைப் போன்றவை. ஆத்திரப்படாமல் அமைதியாக இருந்து மெள்ள மெள்ளத் தத்தம் துறையில் முன்னேற்றமடைந்து வந்தால் வளர வளர அவை பெருஞ் செல்வம் பயக்கும் என்பது ஒருதலை. அதைவிடுத்துத் தொடங்கிய உடனே பெரு வருவாயினைப்பெற வேண்டுமெனஎண்ணி நேரியமுறையில்லாது தொழிலையோ வாணிபத்தையோ செய்தால் அது பொன் முட்டையிடும் வாத்தை ஆத்திரத்தால் அறுத்து நிற்பது போன்று, இட்டதம் முதலை இழந்து நிற்க வேண்டியதுதான். சில தொழில்கள் பல ஆண்டுகள் கழித்தும் பயன் தரலாம். ஆனால் தரத் தொடங்கி விட்டால் எல்லையற்ற வகையில் இடைவிடாது ஈந்து கொண்டே இருக்கும். இதை உணராத சில ஆத்திரக்காரர்கள் உடனே பயன் காணக் குறுக்கு வழியைக் கையாண்டு தம் வாணிபத்தைக் கெடுத்துக் கொள்வதோடு நாட்டின் நல்ல பெயரையும் நாசமாக்குகின்றனர்.

சில பொருள்கள் வெறும் விளம்பரத்தாலேயே மக்கள் மனதைக் கவர்தல் உண்டு. சிறப்பாகப் படக் காட்சிகள் பற்றிய விளம்பரத்தை இங்கே நினைத்துப் பார்க்கலாம். கண்ணைக்கவரும் வண்ணப் படங்களைப் பல கோணங்களில் அமைத்து அடுக்கடுக்காக அழகிய தமிழில் விளம்பரம் செய்யும் எத்தனையோ படங்களை நாமறிவோம். அவற்றின் விளம்பரங்களைக் கண்டே ஏமாறும் மக்களும் சிலர் உளர். எனினும் படங்கள்

வந்ததும் மக்கள் அவற்றின் தரத்தை அன்றே மதிப் பிட்டு விடுவதையும் காண்கின்றோம். படத் தொழிலும் இன்று தமிழ்நாட்டுத் தொழில் துறையில் முக்கிய இடம் வகிக்கின்றது. படத்திற்கு வேண்டிய மூலப் பொருளை (Raw film) உற்பத்தி செய்யும் தொழிற்சாலை ஒன்றும் நம் நாட்டில் (உதகை) தொடங்க இருக்கின் றது. சென்னையிலுள்ள கோடம்பாக்கம் இத் தொழில் சிறப்பை நமக்கு நன்கு அறிமுகப்படுத்துகின்றது. இத்தகைய படத் தொழிலில் புகும் பலர் நிலை கெடுவ தைக் காண்கின்றோம். அவற்றின் காரணங்களை இங்கே ஆய்ந்து கொண்டிருக்க நேரமில்லை. ஆயினும் அவர்தம் விளம்பரங்களில் உண்மையில்லையாயின் அவர்களுக்குக் கேடு உண்டாவதை மட்டும் இங்கே எண்ணல் வேண்டும்.

விளம்பரம் வியாபாரத்திற்கு முக்கியமானது. மேலை நாடுகளில் இந்த நல்ல உண்மையை உணர்ந்து அதற்கென அதிகப் பணம் செலவு செய்கின்றனர். ஆயினும் பெரும்பாலான பொருள்கள் விளம்பரத்துக்கு ஏற்ற வகையில் நல்லனவாகவும் திண்ணியதாகவும் சிறந்ததாகவும் அமைகின்றன. எனவே விற்பனையும் பெருகுகின்றது; இலாபமும் அதிகமாகின்றது; தொழி லும் வளம் சிறக்கின்றது. ஆனால் பொருளின் தரத் தைக் குறைத்து விளம்பரத்தால் மட்டும் வாணிபத் தைப் பெருக்க நினைப்பார்களானால் அவ்வெண்ணம் தவறுகவே முடியும். விளம்பரம் நல்ல வகையில்— உண்மை நிலையில் - பயன்படுவதே நாட்டுக்கு நல்ல தாகும். இன்று நாட்டில் எத்தனையோ வகையான விளம்பரங்களைக் கண்டு ஒன்றுமறியாத மக்கள் ஏமாந்து நிற்பதைக் காண்கின்றோம். அப்படியே அவ்

வாறு விளம்பரம் செய்து ஏமாற்றுபவர்கள் பிடி பட்டோ அன்றி முதல் இழந்தோ வாழ்விழப்பதையும் காண்கிறோம். எனவே நல்ல வகையில் பொருள்களை உற்பத்தி செய்து அவற்றை நல்லபடி சந்தைகளில் விற்பனை செய்ய நல்ல முறையில் விளம்பரம் செய்ய வேண்டும். இதுவே உள்நாட்டு வெளிநாட்டு வாணிப வளனைப் பெருக்குவதோடு நாட்டில் தொழில் வளரவும் நன்கு உதவியாக அமையும் என்பது ஒருதலை.

பொருள்களை உற்பத்தி செய்பவர்கள் வாங்குபவர் களையே உள்ளத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். தங்கள் விருப்பு வெறுப்புகளுக்கேற்பப் பொருள்களை உற்பத்தி செய்யாது வாங்கும் மக்களின் விருப்பம், சுவை, மாற்றம், தேவை, பழக்கவழக்க முறை இவற்றை அடிப்படையாகக் கொண்டு பொருள்களை உற்பத்தி செய்ய வேண்டும். சாதாரண விளையாட்டு வேடிக்கைப் பொருள்கள் தொடங்கி உயர்ந்த கனரகத் தொழிற்சாலையில் உருவாகும் பொருள்கள் வரை இந்த அடிப்படையினையே கொண்டவையாக வேண்டும். இந்த அடிப்படைதான் 'தேவைக்கு ஏற்ற உற்பத்தி' என்ற கொள்கைவழி நாட்டில் வாணிபத்தையும் தொழில் வளத்தையும் பெருக்கும்.

ஒரு தொழிற்சாலை ஒரே பொருளைப் பல ஆண்டுக ளாக ஒரே நிலையில் உற்பத்தி செய்யலாம். அந்த வகையில் அது சிறந்ததாகப் போற்றப்படத் தக்கதே. ஆயினும் கால வேறுபாடுகளுக் கிடையில் மக்கள் மன மாற்றத்துக்கு ஏற்ப அப்பொருளைப்பயன்படுத்துமுறை மாறுபடுமானல், அதற்கேற்பவே அப் பொருள் பெருக் கம் அமைய வேண்டும் உதாரணமாக ஆடைகளையும்

அணிகளையும் குறிக்கலாம், வேளைதோறும் உடை நாகரிகம் மாறிவரும் இந்த நாளில் இருபது ஆண்டு களுக்கு முன் நெய்த அதே வகையான ஆடைகளை ஒரு வன் உற்பத்தி செய்து கொண்டிருந்தால் அதனுல் அவனுக்கோ நாட்டுக்கோ நன்மை என்ன? அப்படியே அச்சுத் தொழிலில் உலகை ஒத்துப் பலவகையில் மாற் றம்கண்டு கண்கவர் வகையில் படங்களுடன் நூல்கள் வரவில்லையாயின் பொதுமக்கள் விரும்புவதில்லையே. வெறும் படங்களை மட்டும் கண்டு வாங்கும் மக்கள் நிலையறிந்து லட்சக்கணக்கான நூல்களை அச்சிட்டு வெளியாக்கிப் பொருள் பெருக்கும் வணிகர் நம்மிடை இருக்கிருர்கள். இந்த வகையில் ஒன்றுமட்டும் சொல்லி மேலே சொல்லலாம். மேலே கண்ட ஆடை வகையோ, நூல் வகையோ அன்றித் திரைப்பட வகையோ பெரும்பாலான மக்கள் வெறி கொண்டு விரும்புகிருர்கள் என்பதற்காக மிக மட்டரகமாக உடல் உறுப்புக்களைப் புறத்தே காட்டும் ஆடைகளையோ— கெட்ட உணர்ச்சியைத் தூண்டும் நூல்களையோ-ஒழுக் கம் கெட்ட சமுதாயத்தை வளர்க்க வழிகாட்டும் படங் களையோ—தயார் செய்து கொண்டு கலை வளர்க்கிருே மென்ருே தொழில் வளர்க்கிருேமென்ருே கூறுவார்க ளாயின் அவர்கள் தத்தம் நாட்டையும் சமுதாயத் தையும் நலிவுப் பாதையை நோக்கி ஈர்த்துச் செல்லு கின்ருர்கள் என்பதே பொருள். இந்த வகையில் வரம்பை மீறுங் காலத்தில் அரசாங்கம் தலையிட்டுத் தடுக்கக் கடமைப்பட்டுள்ளது. அதற்கெனச் சட்டங் களும் குழுக்களும் நாட்டில் உள்ளன. தமிழ்நாட்டில் அத்தகைய சட்டங்களும் குழுக்களும் தொழிற்படுகின் றனவா என்ற ஐயம் உண்டாகும் வகையில் இத்துறை களில் வாணிபம் வளர்ந்து வருகின்றது. கல்லாத

அறிவற்ற பொருளாசை பெருக்கும் வணிகர்கள் மட்டு மன்றி, உலகுக்கு அறிவுணர்த்த வேண்டிய கற்றவர் எனத் தக்க சிற்சில அறிவாளிகளும் கூட இத்தகைய மட்டமான உணர்ச்சிகளுக்கு மக்களை இரையாக்கும் கதைகளையும் நூல்களையும் எழுதுகிறார்கள்—படங்களை உண்டாக்குகிறார்கள்—வண்ண ஆடைகளைக் கண்டு மகிழ்கிறார்கள். அரசியல் தலைவர்கள் சிலரும் அத்தகை யோரைத் தடுப்பதற்குப்பதில் கைகொடுத்து வரவேற் கின்றார்கள். இந்த நிலை மாறினால்தான் நாட்டில் வாணிபமும் தொழிலும் நாட்டு மக்களது பண்பாட்டை யும் நாகரிகத்தையும் வளர்க்கும்சிறப்பு விளங்கும்.

நாட்டில் உற்பத்தியாகும் பொருள்கள் சில அடிப் படைகளிலேதான் உற்பத்தி செய்யப்படுகின்றன. தத்தம் அன்றாட வாழ்க்கைக்கு வீட்டிலும் நாட்டிலும் பயன்படுகின்ற பொருள்களை உற்பத்தி செய்தலும், வேறு தேவையான பொருள்களை விளைப்பதற்கும் உற் பத்தியாக்குவதற்கும் பயன்படு கருவிகள் செய்தலும், அழகுக்கு அழகு செய்து கண்காணப் பயன்படும் பொருள்கள் செய்தலும், பொருளாதார அடிப் படையில் எளிய முறையில் அமையப் பயன்படும் பொருள்களைச் செய்தலுமாகப் பலவகையில் சமுதாய வாழ்வுக்குத் தேவையான பொருள்களை உண்டாக் குவர் உற்பத்தியாளர். இவற்றுள் ஒவ்வொன்றும் சமு தாய வாழ்வுக்குத் தேவை என்பதையும் அவற்றை எவ்வெவ்வகையில் உற்பத்தி செய்ய வேண்டுமெனவும் உற்பத்தியாளர் ஆராய வேண்டும். இவற்றின் தேவை நாடுதோறும் வேறுபடலாம். உதாரணமாக, அடுப் படியில் உணவு தயாரித்து உண்பதற்குத் தமிழ் நாட்டில் தேவையான பொருள்கள் வேறு ; ஆங்கில

நாட்டில் வேறு. அப்படியே வெப்ப நாடுகளின் உடை நிலைக்கும் குளிர் நாடுகளின் உடை நிலைக்கும் வேறு பாடு உண்டு. அப்படியே உற்பத்தியைப் பெருக்கும் நிலையிலும் வேறுபாடு காணலாம். தமிழ்நாடு போன்ற விவசாய நாட்டில் விவசாயத்துக்கு வேண்டிய பொருள் களைத் தயார் செய்யும் இயந்திரங்களையும் சாதனங் களையும் உண்டாக்க வேண்டும். மோட்டார் வண்டி தயார் செய்யும் நாட்டில் அதற்கு வேண்டிய துணைப் பொருள்களை உற்பத்தி செய்ய வேண்டும். காட்சிப் பொருள்களாகக் கிடைப்பதற்கும் நாடுதோறும் வேறு பாடு காண்கின்றோம். இயற்கையோடு ஒட்டிய வாழ் விற்கு ஏற்ற காட்சிப் பொருள்களும் வேறுசிலவும் பல் வேறு; மக்களின் காட்சிப் பொருள்களாக அமை கின்றன. பொருளாதார அடிப்படையிலும் அப்படியே. மர அகப்பை தொடங்கிப் பொன் கரண்டி வரையில் நாட்டில் புழக்கத்தில் உண்டு. இவை அனைத்தையும் மனதில் கொண்டு அவ்வந் நிலத்திலே வாழ்ந்துவரும் மக்கட் சமுதாயத்தின் பண்பாடு, பழக்கவழக்கம், செல்வநிலை, மனநிலை இவைகளை அறிந்து அவற்றின் அடிப்படையில் உண்டாக்கும் பொருள்களே சந்தை களில் சிறக்க விற்பனையாவன என அறிந்து நாட்டு உற்பத்திகளைப் பெருக்க வேண்டும். இன்று எல்லா நாடுகளிலும் இந்த உண்மை ஓரளவு உணரப்பட்டே வருகின்றது. எனினும் இவற்றுக்குள் போட்டி மனப் பான்மையும் வேறு கசப்பான நிகழ்ச்சிகளும் செயல் களும் மாறுபட்ட விளம்பரங்களும் புகுந்து நாட்டு நல்ல வாணிப வளனையும் தொழில் வளத்தையும் கெடுக்கின்றன. வாணிபத் தொழில் துறைமக்கள் மன மாற்றமே இக் கொடுமைகளின் ஊக்கத்துக்கு அடிப் படையான காரணமாகும்.

வாணிபத்தில் விற்பவர் வாங்குபவர் இருவருமே முக்கியமானவர். விற்பவனுக்கு இலாபத்திலே குறிக்கோள். வாங்குபவனுக்கோ தான் தரும் பணத்துக்கு ஏற்ற பொருளைப் பெறவேண்டுமே என்ற சிந்தனை. இந்த இரண்டுக்கும் இடையிலே உற்பத்தியாளர்கள் இருவர் மனதையும் அறிந்து அதற்கேற்ற வகையில் உற்பத்தியைப் பெருக்குவார்களாயின் நாட்டில் வாணிபம் நல்லவகையில் நடைபெறும் என்பதில் ஐயமில்லை. எத்தனையோ மாறுபட்ட புதுப்புதுப்பொருள்கள் சந்தையில் விற்பனைக்கு வந்தாலும் அவற்றையெல்லாம்விட்டு நல்ல பொருளையே விலை கொடுத்து வாங்கும் வழக்கம் எந்த நாட்டிலும் உள்ளதன்றோ! 'அந்தக் கம்பெனியின் உற்பத்திச் சரக்கா?; அப்படியாயின் கேட்கவே வேண்டியதில்லை; வாங்கி வாருங்கள்.' என்று மக்கள் கூறி நல்ல பொருள்களுக்கு முத்திரை யிட்டுவிடுகிறார்களல்லவா! அதனாலேயே நாட்டில் உற்பத்தியாளர் தமக்குத் தனியாக உள்ள சிறப்பை உலகில் என்றும் நிலைநிறுத்திக் காட்ட ஒரு முத்திரையை அமைத்துக் கொள்ளுகிறார்கள். இதையே 'Trade Mark' என்கின்றோம். நாள் காட்டி முதல் மருந்துவகை வரையில் பலர் தத்தம் உற்பத்தியை அரசாங்கத்திடம் காட்டித் தமக்கெனத் தனித்தனி முத்திரையைப் பொருத்திக் கொள்ளுகிறார்கள். 'பாரீஸ்' மிட்டாயா என்றும் 'பிரிட்டானியா' பிஸ்கட்டா என்றும் 'சங்கு மார்க்' லுங்கியா என்றும் கேட்டு மக்கள் அவ்வப் பொருள்களில் சிறந்ததாகச் சிலவற்றை வாங்குவதை இன்றும் காண்கிறோம். எனவே உற்பத்தியாளர் தம் இலாபத்தோடு தாம் தொடங்கிய காலத்தில் உற்பத்தி செய்த உயர்ந்த ரகச் சிறப்பை ஒருசிறிதும் குறைக்காமல் இருப்பார்களானால் விற்பவர் வாங்குபவர் யாருக்கும் தொல்லை இருக்காது.

அத்தகைய பெரும் உற்பத்திச் சாலைகள் சில்லறை விற்பனையாளருக்குத் தகுந்த கழிவு தருவதுடன் நாட்டின் எந்தப் பகுதியிலும் இந்த விலைக்குமேல் விற்கலாகாது என்ற கட்டுப்பாடும் செய்து விடுகின்றனர். எனவே பெரு நகரங்களில் இருந்து சாதாரண கிராமக் கடையில் உள்ளவர் வரை அந்தப்பெரும் தொழிற்சாலைப்பொருள்களை விற்று, தத்தமக்குரிய கழிவை இலாபமாகப்பெறுகிறார்கள். அப்படியே வாங்குபவர்கள் அந்த முத்திரையுடைய பொருள் எங்கே வாங்கினாலும் ஒன்றே எனவும் ஒரே விலை எனவும் கருதி வாங்கி மன நிறைவு பெறுகிறார்கள். எனவே வியாபாரத்தின் நாணயம் அனைத்துக்கும் உற்பத்திச் சாலைகளே அடிப்படைகளாக மாறுகின்றன.

ஒரு சிலருடைய முத்திரையிட்ட பொருள்கள் நன்றாக விற்பனையாகின்றதென்று காணும் சிலர் அந்த முத்திரையில் ஒரு சில மாற்றித் தமது முத்திரையாகக் கொண்டு பொதுமக்களை ஏமாற்றப் பார்க்கின்றனர். அப்போதுதான் நீதிமன்றங்களும் அரசாங்கமும் அவர்கள் இடையில் வந்து உண்மையை மக்களுக்கு உணர்த்த வேண்டிய நிலை உண்டாகின்றது. ஒரு சிலர் இத்தகைய முத்திரை உடைய தகரடப்பிக்கள் முதலியவற்றைக் காலியாக உபயோகித்தவர்களிடம் வாங்கி அவற்றுள் மட்டமான பொருள்களை நிரப்பி அறியா மக்களை ஏமாற்றுகிறார்கள். அப்படியே நல்ல முத்திரைகளைப்போன்று வேறு சிலர் அறியா வகையில் அச்சிட்டு அதே பொருள்களை மட்டரகமாக உற்பத்தி செய்து நாட்டுச் சந்தைகளுக்கு அனுப்புகின்றனர். நூறு ரூபாய் நோட்டு முதலியவற்றை அச்சிட்டு அரசாங்கத்தையே ஏமாற்றும் இந்த நாளில் இவை மிக

எளிமையானவையே. இத்தகைய வியாபாரங்கள் நாள் தோறும் சென்னையில் நின்று விற்கும் கடைகளில் நடைபெற்றுக் கொண்டே இருக்கின்றன. இவற்றையெல்லாம் அரசாங்கம் ஒருவேளை தடை செய்யின்-ஒரு வேளை மக்கள்—அதிலும் ஏழை மக்கள்-தாம் கொடுக்கும் பணத்துக்கு ஏற்ற நல்ல பொருள்கள் பெற வழியுண்டாகும்.

பொருளை வாங்குபவர்கள் பல உள்ள உணர்வோடு அவற்றை வாங்குவர் என்ற உண்மையை மேலைநாட்டு அறிஞர்கள் நன்கு விளக்கியுள்ளனர்.*

* Product development and design by A. W. WILLS. MORE. (PP. 10–12)

**I. Rational Buying Motives.**

1. Dependability in use
2. Dependability in quality
3. Convenience or handiness
4. Simplicity in operation
5. Efficiency in operation or use
6. Durability in use
7. Economy in use
8. Economy in purchase
9. Reliability in supplementary service
10. Possibility of increasing earnings
11. Protection against loss.

**II. Emotional Buying motives**

1. Satisfaction of the appetite

அவற்றையெல்லாம் ஈண்டு விரிப்பில் பெருக்கும். அவர்தம் மொழியிலேயே அடிக் குறிப்பில் அவற்றைத் தந்துள்ளேன். மக்கள் பொருள்களை வாங்குவதற்கு அவர் தம் உள்ள நிலைகளே (Rational and emotional) காரணம் என்பதையும் நிலை அறிந்து விற்பனையாளர் தம் தேவைகளை உற்பத்தியாளருக்குத் தெரிவித்து, அவர் தம் விருப்பத்துக்கு ஏற்ற பொருள்களைப் பெற்று வாணிபம் செய்தால் அவர்தம் இலாபம் பெருவதோடு நாட்டில் தொழில் வளமும் பெருகும் என்பதை அவர்கள் நன்கு விளக்கியுள்ளனர். ஆயினும் நிலை பெற்ற தொழில் பெருக்கும்—கனரகத் தொழில் வளத்துக்கு வேண்டிய பெரு இயந்திரங்களையோ அவை போன்ற பிறமின்சாரம் போன்றவற்றிற்கும் தொலைபேசிமுதலியவற்றிற்கும் வேண்டிய பொருள்களையோ அவ்வாறு அன்றி உற்பத்தியாளர்கள் நன்கு திறன் வாய்ந்த வல்லவர்களை வைத்து ஆராய்ந்தே தத்தம் தொழிற்சாலையில் திறம்பட உற்பத்தி செய்ய வேண்டும். இதில் மக்கள் மனநிலை இரண்டாவதாகவே கணக்கிடப்பெற வேண்டும்.

---

2. Pleasing the sense of taste
3. Securing home comforts
4. Securing personal comforts
5. Parental affection (Proper care of children)
6. Self Preservation (Maintaining and preserving health)
7. Cleanliness
8. Satisfaction of obtaining security from danger
9. Alleriation of laborious tasks
10. Obtaining opportunity for increased leisure
11. Pleasure of recreation

மேலே கண்டபடி ஓர் உற்பத்தியாளர் சரக்கை மக்கள் விரும்பி வாங்கவும் வேறு சிலருடையவற்றை விலை குறைவாக இருப்பினும் வேண்டாது ஒதுக்கவும் காரணம் என்ன? மக்கள் மனம் ஒரு காரணமுமின்றி ஒன்றில் பற்று வைப்பதென்பது கிடையாது. ஒருவேளை உலக முழுவதும் பயித்தியமானால் அது சாத்திய மாகலாம். எனவே ஒரு சில அடிப்படைக் காரணங் களே ஒருசில உற்பத்தியாளர் பொருள்களை மக்கள் வாங்குவதற்குக் காரணமாகலாம். எந்த வகைப் பொருளானாலும் ஒரு சில அடிப்படைக் காரணங்களே அவற்றை மக்கள் விரும்பி வாங்கப் பயன்படுகின்றன எனக் காட்டியுள்ளனர். அவை பின் வருவனவே.

1. Courtesy and consideration in service
2. Reliability of seller
3. Punctuality in delivery
4. Promptness in delivery
5. Exact fullfilment of specification
6. Dependability of repair service

---

12. Entertainment
13. Romantic interest
14. Pride of personal appearance
15. Pride of appearance of property
16. Pride of achievement of social success
17. Pride of proficiency in the performance of one's task
18. Satisfaction of expression of artistic taste
19. Satisfaction of achieving distinctiveness
20. Satisfaction of equalling or rivalling neighbours
21. Satisfaction of choosing appropriate gifts for others

* P. 12

7. Veriety of selection
8. Convenience of location
9. Special credit facilities
10. Guarantees
11. Special service or delivery features.

இவற்றின் அடிப்படைகளைக் கொண்டே பொருளைப் பயன்படுத்தும் மக்கள் தத்தம் தேவைக்கு வேண்டிய பொருள்களை வாங்குகின்றார்கள் எனக் காண்கின்ற காரணத்தால் எல்லாப் பொருள்களையும் உற்பத்தி செய்யும் அனைவரும் இவற்றின் அடிப்படையிலேயே தத்தம் உற்பத்திகளைச் செய்தல் வேண்டும். விலை ஒன்று மட்டும் வாணிபத்தில் முக்கியமில்லை என்றும் இன்னும் இவைபோன்று எத்தனையோவகைத் துணைச் சாதனங்களும் விளம்பரங்களும் பிறவும் தேவைப்படுகின்றன எனவும் அறிகிறோம். இவற்றின் உண்மைகளைப் பல ஆண்டுகளுக்கு முன்பே அறிந்து உலகச் சந்தைகளில் அவர்கள் முன்னேற்றம் கண்டுள்ளனர். இந்தியாவின் வடபகுதியிலும் பல வாணிபர்களும் தொழிலதிபர்கள் இவற்றைக் கொண்டு முன்னேற்றமடைகின்றனர். தமிழ்நாட்டு வணிகரும் பெரும் தொழிற்சாலை அதிபர்களும் இன்னும் இவற்றில் பொதிந்து கிடக்கும் உண்மைகளை உணர்ந்து கொள்ள வேண்டும். உணர்ந்து கொண்டு தம்பணியை விரிவாக்கினல் வாணிபமும் தொழிலும் வளமுற்று நாடு நன்கு சிறக்கும்.

இன்று நாட்டிலும் உலகிலும் எல்லா உற்பத்திப் பொருள்களுக்குமே போட்டி உண்டாகியுள்ளமை

யைக் காண்கிறோம். ஒருவருக்கொருவர் போட்டியிட்டு விலை குறைத்தோ விளம்பரம் செய்தோ வேறு வகைகளைக் கையாண்டோ தத்தம் பொருள்களைச் சந்தைகளில் விற்பனை செய்ய முயல்வதைக் காண்கின்றோம். எனவே உற்பத்தியாளர்கள் தம் பொருள்கள் மற்றவற்றுடன் உண்டாகும் போட்டியில் நன்கு விற்பனையாக வேண்டுமானால் அவர்கள் பல நல்லவழிகளைக் கையாள வேண்டும். ஒரு சிலவற்றைக் கீழே காணலாம்.*

1. உற்பத்திச் செலவைக் குறைத்தல் (Reducing costs of Production)
2. பயன் திறத்தைப் பெருக்கல் (Increasing utility of Products)
3. பயன்படுத்தும் செலவினைக்குறைத்தல் (Reducing operative costs of users)
4. விற்பனை விளக்கம் விரிவாக்கல் (Improving sales appeal)
5. புது நுண்திறன் வழி வளமாக்கல் (Developing new technique information)
6. புது வருவாய் பெருக்கல் (Producing new business)
7. புதுத் துறைகளை வளர்த்தல் (Developing new lines)
8. இணைப்பொருள்கள் உற்பத்தியும் உபயோகமும் (Discovering uses for by-Products)

* A. W. WILLS MORE. P. 13 & 14

இவ்வாருன துறைகளில் நாட்டில் உற்பத்தியாளர்கள் கருத்திருத்துவார்களேயானுல் அவர்தம் பொருள்கள் சந்தைகளில் நன்கு விற்பனையாகி நாட்டு வாணிப வளன் பெருக வாயப்பு உண்டு. மேலை நாடுகள் பல உற்பத்தியாளர்கள் இவை போன்ற பல முறைகளைக் கையாண்டு உலக அரங்கிலே பெருவாணிபர்களாக உள்ளதைக் காணலாம். சிறப்பாக மோட்டார் உற்பத்தி போன்ற பெருந் தொழில்களிலும் அதன் துணைப் பொருள்களாகிய ‘ பெட்ரோல் ’ போன்ற வற்றிலும் இந்த நிலையைக் காண்கின்ருேம். நம் நாட்டிலும் அந்த வாடை வீசுவதை யாரே அறியாதார்?

சில உற்பத்தியாளர்கள் தத்தம் தொழில்களைப் பெருக்கப் பல்வேறு வகையில் தாம் தாம் விற்பனைக் கனுப்பும் பொருள்களுடன் பல விளக்கங்கள் அனுப்புவர். வேறு முறைகளுடன் முயற்சிகளையும மேற் கொள்வர். அவை எவை எனக் காட்டுவர் அறிஞர்.*

1. Adding refinements
2. Making the size, quantity, or sale unit more convenient
3. Reducing or simplifying the line
4. Standardizing quality
5. Supplying full direction for use
6. Adding service features
7. Developing new uses
8) Artistic design

* A. W. Wills More P. 15

9. Style factor
10. Introducing colour
11. Using new meterials, finishes and construction
12. Improving the package
13. Modifying the price range.

மேலை நாடுகளில் ஒவ்வொரு உற்பத்தியாளரும் தம் உற்பத்திப் பொருள்கள் பயன்படும் இடங்களுக்கு நேராகச் சென்று அவை பயன்படும் நிலையினையும், முறையினையும் திறனையும் கண்டு, அவற்றைப் பயன்படுத்தும் மக்களிடம் அப்பொருள்களின் உபயோகத்தில் உள்ள குறைபாடுகளைக் கேட்டறிவார்கள். குறைபாடுகள் இருப்பின் அவற்றை எவ்வெவ்வாறு அடுத்து வரும் உற்பத்திகளில் நீக்க முடியும் என ஆராய்ந்து அவற்றைச் செம்மை செய்வர். அவை நன்கு இலங்குமாயின் அவை மேலும் சிறக்க வழி என்னஎன ஆராய்வர். பெரும் பொருள்கள் மட்டுமன்றிச்சாதாரண உணவுப்பொருள், 'சோப்பு' முதலிய உபயோகப் பொருள்களை உற்பத்தி செய்பவர்கள் கூட இத்தகைய ஆராய்ச்சி செய்வர். இதனால் பயன்படுத்தும் மக்கள் பலர் அறிமுகமாவதோடு, அவர்களும் தொடர்ந்து இதே பொருளை உபயோகிக்க வழியையும் தேடிக் கொள்ளுகின்றனர். நம் நாட்டில் தற்போது சில உற்பத்தியாளர்கள் சில பெண்களை அமர்த்தி வீடு வீடாகச் சென்று தத்தம் பொருளை அறிமுகப் படுத்துகிறார்களேயன்றி மேலை நாடுகளைப் போன்று ஆராய்ந்து தொழிற்படுவது கிடையாது. அதனால் பல தொழில்கள் வளர்ச்சியடைய முடியாது நசிகின்றன. தையல் யந்திரம் தயாரிப்பவர் சிலர்,

தவணையில் வாங்க அதைக் கொடுப்பதோடு, தங்கள் ஆட்களைச் சில நாட்களுக்கு வாங்குபவர் வீடுகளுக்கு அனுப்பி, இலவசமாகப் பயிற்சி பெறவும் உதவு கின்றனர். இத்தகைய ஏற்பாட்டால் அவர்தம் வாணிபம் ஓரளவு வளர்ந்து வருவதையும் காண் கின்றோமல்லவா !

உற்பத்தித் துறையில் பல நல்ல தன்மைகளைக் கண்டு தெளியவேண்டும். உற்பத்தி முறையைப் பெருக்கத் தேவையான இடங்களில் பெருக்கியும் அல்லா விடங்களில் சுருக்கியும் நல்ல பொருள்களைக் குறைந்த விலையில் நாட்டுமக்களுக்கு அனுப்ப வேண்டும். அதுதான் மக்களைத் தம்பொருள்களிடம் திருப்ப வழி. இடையில் அப்பொருள்களை வைத்து வாணிபம் செய்கின்றவர்களும் மகிழ்ச்சியோடு அதே பொருள்களை மக்களுக்கு அறிமுகம் செய்து விற் பனையை அதிகமாக்கித் தாமும் இலாபமடைந்து உற் பத்திப் பெருக்கத்துக்கும் வழி செய்தவராவார்கள். அவ்வாறான முறைக்கு ஒரு சிலவற்றை எண்ணிப் பார்க்கவேண்டும். ஒரு சில குறித்த அளவையில்தான்- தேவையில்தான்—இம்மாற்றங்களைச் (Simplification) செய்யவேண்டுமெனக் குறித்துள்ளனர். அவை வரு மாறு.

1. The necessity to meet the needs of the consumer
2. Changes in style or fashion
3. The objections of distributors–Where there cannot be overcome

---

A. W. Wills More P. 45

4. The intensity of competition–perticularly where the concern has not achieved sufficient leadership to assure that competition will follow its lead
5. The demand for a complete line or range
6. The degree of standardization attained in the industries which the goods are supplied
7. The need to secure stability in production
8. The need to utilize by-products
9. The need to secure full utilisation of production and distribution facilities.

பொருள் உற்பத்தியாளருள் பெரும் பொருள் உற்பத்தியாளர் போக, சாதாரண வாழ்க்கைக்குத் தேவையான உணவு, உடை, பூசு முதலிய தேவைக்குரிய பொருள்களை உற்பத்தி செய்ய எண்ணுபவர்கள் நாம் மேலே கண்டபடி உபயோகப்படுத்தும் மக்கள் மனமறிந்து உற்பத்தி செய்தல் வேண்டும்; அந்தப்பொருள்களின் விலையைக் கூடியவரையில் அதிகமாக்காத வகையில் எல்லோரும் பெறத் தக்கதாக பல அளவைகளில் வெளிக்கொணர வேண்டும். அதே சமயத்தில் நாட்டில் நல்ல தரமும் பண்பாடும் கெடாத வகையில் அப்பொருள்கள் மக்கள் உள்ளங்களை ஈர்க்கின்றனவாக அமையவேண்டும். நல்ல வண்ணங்களோடு கூடிய கண்கவர் பொருள்களாக அவை அமையின் சிறப்புடையவாகும். (ஒருவகைச் சோப்பினை வண்ணக் கட்டிகளாக்கிச் சினிமாநடிகைகளின் படங்களை உடன் சேர்த்து விளம்பரம் செய்வதைக் காண்கிறோம்.) இவ்வாறெல்லாம் செய்து மக்கள் மனதைக் கவர்ந்து விட்டால் சந்தை அவர்களுடையதேயாகும். அப்படியே

பெரும் கனரகத் தொழிற்சாலை அதிபர்களும் பல இயந்திரங்களையும் அவற்றின் உறுப்புக்களையும் உற்பத்தியாக்கும் தொழிற்சாலை உரிமையாளர்களும் நீடித்த உழைப்பு, திறன், விலைக்குறைவு, தங்கள் மேற்பார்வை உபயோகிப்பதில் சிக்கனம் முதலியவற்றையே அடிப்படையாகப் பொருள்களை உற்பத்தி செய்தால் அவர் தம் பொருள்களே நாட்டில் பெரும்பான்மை விற்பனையாகும். இவற்றை வாணிபம் செய்வோர் விரும்பிச் செய்து வாங்குவோரிடம் நற்பெயர் எடுப்பர். எனவே அவர்கள் இத்தகைய பொருள்களை மேலும் மேலும் மக்களுக்கு அறிமுகப்படுத்துவர். எனவே நாட்டின் தொழில் வளம் பெருக்கும் நல்லவர்கள் இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு தத்தம் உற்பத்திச் சாலைகளிலும் தொழிற்சாலைகளிலும் பொருள்களை உண்டாக்கி உலகுக்கு அளிப்பின் நாட்டு மக்களும் வாணிபத் துறையாளரும் அவர்கட்கு என்றென்றும் கடமைப்பட்டு அவர்கள் தொழில் பெருகத் துணையாக நிற்பர். தமிழ்நாடு இவ்வாறான நல்லவகையில் இணைந்து முன்னேறுவதாக!

## 14. தொழில் வளமும் பொருளாதாரமும்

உலகமும் நாடும் நாமும் வாழ வழிவகுத்த வள்ளுவனார் தம் குறள் நூலில் நாடு எத்தகையதாக இருக்க வேண்டும் என்று காட்டத் தவறவில்லை. இன்று வாழும் எத்தனையோ நாடுகள் உலக அரங்கில் அங்கம் வகிக்கின்றன. நூற்றுக்கு மேற்பட்ட நாடுகளில் பல பெயரளவில் நாடுகளாக உள்ளன. வள்ளுவர், நாடு தன்நிறைவு கொண்டதாக, தேவையான எல்லாவற்றையும் தானே பெறக் கூடியதாக, பிற நாட்டார் கை நோக்கி வாழ வேண்டாததாக, வளமெலாம் வாய்க்கப் பெற்றதாக இருக்கவேண்டுமென்று காட்டுவர்.

> 'நாடென்ப நாடா வளத்தன ; நாடல்ல
> நாட வளந்தரும் நாடு' (47:9)

என்பது அவர் வாக்கு. இருவகையிலும் நாட்டின் இயல்பு இத்தகையது எனத் திறம்பட இதில் வள்ளுவர் விளக்கியுள்ளமையை எண்ணிப் பார்க்க வேண்டும். பிறர் கையை நாடா வளம் பெற்றன எவையோ

அவையே நாடெனப்படும் என்றும் அவ்வாறு அன்றிப் பிறரை எதற்கும் கை நோக்கி வாழ்வன, வேறு எத் துணைச்சிறப்பியல்புகள் பெற்றிருப்பினும் 'நாடெ'னத் தகுதி அற்றன என்றும் காட்டுகின்றார். ஆம்! இந்த அடிப்படையிலேதான் அண்ணல் காந்தி அடிகளால் நம் நாடு எல்லாத் துறைகளிலும் தன்னிறைவு பெற வேண்டுமென வற்புறுத்திக் கொண்டு வந்தார். இந்த நிலை நம் நாட்டுக்கு இன்னும் வரவில்லை என்பது கண் கூடு. நம்மிலும் தாழ்ந்த நிலையில் உள்ள நாடுகளும் பல. எனினும் என்று உலக நாடுகள் ஒவ்வொன்றும் தன்நிறைவு கொண்டனவாக வாழ்கின்றனவோ, அன்றே உலகம் அமைதியுறும்; அதுவரை அல்லல் தான். இந்தத் தன்நிறைவுக்கு அடிப்படை 'பொருளா தார நிலை' என்ற பெயரால் வழங்கப் பெறுகின்றது. இன்று நாட்டில் பல பொருளாதார நிபுணர்கள் ஆய்வ தாகக் காட்டிக் கொண்டாலும் நாட்டில் பொருளும் பிறவும் கேடுறுவதை அரசாங்க அமைச்சர்கள் தத்தம் சட்டசபைப் பேச்சுக்களிலும் பிறவிடங்களிலும் காட்டு வதை அறிய முடிகின்றது. அடிமை நாட்டில் பாரதி யார் பாடிய,

> 'வணிகமும் பொருள் நூலும் பிதற்றுவார்
> வாழு நாட்டில் பொருள் கெடல் கேட்டிலார்'

என்ற அடிகள் உரிமை பெற்றுப் பதினைந்து ஆண்டு களுக்குப் பின்னும் மாறவில்லையே. காரணம் என்ன?

இன்று நாட்டிலே எத்தனையோ திட்டங்கள் தீட்டப் பெறுகின்றன. எத்தனையோ குழுக்கள் (Committees) அமைக்கப் பெறுகின்றன. பல குழுக்கள் அடிக்கடி பெயர் மாற்றம் பெறுகின்றன. அவற்றின் அமைப்பாலும், தீட்டும் திட்டங்களாலும், அரசாங்கம்

அத்திட்டங்களை நிறைவேற்றும் முறையாலும் நாடு ஓரளவு முன்னேற்றம் கண்டுள்ளது உண்மைதான். எனினும் நேரு தொடங்கி நாட்டுத் தலைவர் அனைவரும் கூறுவது போன்று, செலவழிக்கும் தொகை அளவில் மிகச் சிறிய பகுதியையே பயனாகக் காண முடிகின்றது என்பதை எண்ண எந்த இந்தியனும் வருந்ததாதிருக்க முடியாது. சில வேளைகளில் இவ்வெண்ணற்ற குழுக்கள் கூடத் தேவை இல்லை என நினைக்கும் அளவுக்குத் தலைவர்கள் மனங் கசந்து கருத்தினை வெளியிடுகிறார்கள்.

நாட்டைப் பொருளாதார அடிப்படையில் ஆய்ந்து செயலாற்ற வழிகாட்ட வேண்டுவது குழுக்களின் சிறந்த பணியாகும். இவ்வாறு அன்றிப் பிற–தேசப் பற்றின் காரணமாகவோ, வேறுபல வெறியாடல்களின் விளைவாலோ, பிற சூழல்களாலோ—நாட்டின் பொருளாதார அடிப்படையினை மறந்து, தொழில் வளம்படுத்து முறை, கல்வி நிலை, பிற அடிப்படைத் தேவைகளின் நிலை இவைகளை ஆராயாது, பல தேவையற்ற செயல்களும் வீண் செலவுகளும் மேற்கொள்ளப் பெறுவதையும், கோடிக் கணக்கில் செலவிட்டுப் பயனில்லையே எனத் தலைவர்கள் உள்ளங் குமைவதையும் காண்கின்றோம். இந்த அடிப்படை நிலை நன்கு அமைய வள்ளுவர் பல வழிகளைக் காட்டியுள்ளனர்.

பல்வேறு தொழில்களும், பிற துறைகளில் மாற்றங்களும், வேறு ஏற்பாடுகளும் நாட்டில் விரைவில் மேற்கொள்ளப் பெறுகின்றன. அண்மையில் மத்திய அரசாங்கத்திலும் தமிழ் நாட்டிலும், கல்வி, பொன், கட்டாய சேமிப்பு போன்ற பல துறைகளில் உண்டான புதுப் புதுச் சட்டங்களையும் மாற்றங்களையும் கண்டோம்: ஒரே கட்சியே ஆட்சியில் இருந்த

போதிலும், தனிப்பட்டவர் அமைச்சராக மாறும் நிலையில் இத்தகைய மாற்றங்கள் நடைபெறுவது முறையாகாது. இவற்றை அனைவரும் கூடி ஆராய்ந்து தொழிற்படுத்துமுன் எண்ணிச் செயலாற்றியிருக்க வேண்டும் எனத் தலைவர்களே கூறுகின்றார்கள் என்பதை நன்கு அறிவோம். வள்ளுவர் இத்தகைய செயல் முறையினைப் பொருளாதார அடிப்படையில் அழகுறக் காட்டுகின்றார்.

'ஆகாறு அளவு இட்டிதாயினும் கேடில்லை
போகாறு அகலாக் கடை' (48.8) என்றும்,

'முதல் இலார்க்கு ஊதியம் இல்லை, மதலையாம்
சார்பிலார்க் கில்லை நிலை' (45.9) என்றும்

'ஆக்கம் கருதி முதல் இழக்கும் செய்வினையை
ஊக்கார் அறிவுடை யார்' (4.3) என்றும்.

இன்னும் பலவகையிலும் காட்டுகின்றார் வள்ளுவர். இவற்றால் வள்ளுவர் பொருளாதார உண்மையை எவ்வாறு நுணுகி ஆராய்ந்து காட்டியுள்ளார் என்பதை உணரவேண்டும். இந்த அடிப்படையை உணராத பொருளாதார நிபுணர்களைக் குறித்துத் தான் பாரதி அவ்வாறு 'வாழுநாட்டில் பொருள் கெடல் கேட்டிலார்' எனக் கூறினார் போலும். தாங்களாகவே கண்டு உணரவேண்டிய அவர்கள் அவ்வாறு உணராததோடு மட்டுமின்றி, பிறர் கண்டு உணர்த்தவும் கேட்கவில்லையே என அவர் வருந்துகின்றார். இனியாவது கேட்கின் பயன் உண்டு. கேட்பார்களா ?

மேலே கண்ட மூன்று குறட்பாக்களாலும் இவை போன்ற பிறவற்றாலும் வள்ளுவர் பல அதிகாரங்களில் நாடும் பொருளும் எவ்வாறு திட்டமிட்ட அடிப்படையிலே செம்மைப் படுத்தப் பெறவேண்டும் என்பதைக்

காட்டுகின்றார். எத்தனையோ கோடி ரூபாய் கடன் வாங்கிச் செயலாற்றினாலும், வரவுக்கு மேல் செலவானால் வாழும் வழி கிடையாதே என முதல் குறட்பா (48:8) வினாலே வள்ளுவர் வருந்திக் கூறுகின்றார். அப்படியே திட்டம் தொடங்கும்போதும் செயலை மேற்கொள்ளும் போதும் அதற்குரிய முதல் இல்லாது தொடங்கின் ஒரு பயனும் இல்லை என்பதை இரண்டாவது (45:9) குறளில் வெளிப்படக் காட்டுகின்றார். முதல் என்ற போது, வள்ளுவர் வெறும் பணம் முதலை மட்டும் குறிக்கவில்லை என்பதை உணரவேண்டும். பொருள் முதலாகப் பல அடிப்படைத் தேவைகளை எண்ணியே வள்ளுவர் 'முதல்' என்கின்றார். அவை என்னென்ன என்பதை,

'பொருள் கருவி காலம் வினை இடனொடைந்தும்
இருள் தீர எண்ணிச் செயல் (68:5)

எனக் காட்டுவர்.

எனவே பொருள். கருவி, காலம், செயல், அச்செயலாற்றும் இடம் அனைத்தையும் ஆராய்ந்து எண்ணி உணர்ந்தே எந்தவகைத் திட்டத்தினையும் தீட்ட வேண்டுமென்பது வள்ளுவர் கருத்து. இத்திட்டங்களுக்கும் வளம் பெருக்கும் வழிகளுக்கும் பொருள் இன்றியமையாது வேண்டப்படுவதுதான். என்றாலும் அத்துடன் பிறவற்றையும் ஆராய்ந்தே எந்தப்பெருந்தொழிலையும் பெருந்திட்டங்களையும் தொழிற்படுத்தத் தொடங்க வேண்டும். இனி மூன்றாவது குறளால் (47:3) வள்ளுவர் ஒன்றை நினைத்து, ஒன்றைத் தொழிற்படுத்தி முதலையே இழக்கும் அவல நிலையை எண்ணி நைகின்றார். அத்தகைய செயல்களைப் பிறர், அறியாக்காரணத்தாலோ, கட்சிப்பற்று, வட்டப் பற்று, மொழிப்பற்று, இனப்பற்று, இன்னபிற வேறு சில காரணங்களாலோ மேற்கொள்ள விரும்பித் துடித்

தாலும், பொருளாதார நிபுணர்கள்-திட்டம் தீட்டும் செம்மை நலம் சான்ற அறிஞர்கள்—அவற்றை ஊக்கக் கூடாது என்கின்றூர். 'ஊக்கார் அறிவுடையார்' என்பது அவர் வாக்கு. இங்கு 'அறிவுடையார்' என்ற தொடர் சிறப்பாகப் பொருளாதார அறிவுடையாரையே குறிக்கும்.

இனி, இத்திட்டங்களைப் பொருளாதார அடிப்படையில் அமைக்கும்போது வேறு சிலவற்றையும் எண்ணிப் பார்க்கவேண்டும். சில நாடுகள் உலகில் மிக வேகமாக முன்னேற்றம் பெறுவதையும் வேறு சில நாடுகள் கோடி கோடியாகச் செலவிட்ட போதிலும் முன்னேற்றம் காணுதிருப்பதையும் இன்று நாம் காண்கின்ருேம். பொருளால் மட்டும் சிறக்கும் நாடுகளைக் காட்டிலும் ஒரு சில துறைகளில் சிறு சிறு நாடுகள்—பொருள் வளத்தால் சிறக்காத நாடுகள்—முன்னேற்றம் அடைந்துள்ளதையும் காண்கின்ருேம். இதற்குக் காரணம் என்ன? பொருள் மட்டும் முன்னேற்றத்திற்கும் திட்டங்களுக்கும் போதாது. அது தான் முதல் நிலையில் தேவையான ஒன்றே. ஆனல் அது முறை தகாத வகையிலே முறை தெரியாதாரிடம் ஒப்படைக்கப் பெறின் என்னுகும்? அப்படியே உரிய இடங்களின் தரமும் நிலையும் ஆராயாது, கண்ட கண்ட இடங்களில் நினைத்த தொழிற்சாலைகளைத் தொடங்கினுலும் பயன் காணல் அரிது. வள்ளுவர் இவ்வுண்மைகளையே,

'இதனை இதனல் இவன் முடிக்கும் என்ருய்ந்து
அதனை அவன்கண் விடல்' (52.7) என்றும்
'தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்
இடங்கண்ட பின்னல் லது' (50.1) என்றும்,

காட்டுவர். இக் குறட்பாக்கள் வேறு பல வினைகளுக்கு உரியனவாகக் கூறப் பெறினும் ஈண்டு நம்

தலைப்புக்கும் மிகப் பொருந்துவதாகும். நாட்டில் பல பணிகள் உரியவரிடம் ஒப்படைக்கப் படாமையால் கேடுறுவதைக் காண்கின்றோம். பக்ரா நங்கல் போன்ற பேரணைகளெல்லாம் முடிப்பதற்குள் பிளவுறக் காண் கின்றோம். உரிய மேற்பார்வை இல்லாமையின் 'பூனா போன்ற பெருநகரங்களெல்லாம் வெள்ளத்தால் வாடி வருந்துவதையும் காண்கின்றோம். தமிழ் நாட்டிலும் எத்தனையோ மாற்றங்கள் இருப்பதை அறிந்து அமைச் சரும் அறிஞரும் அரசியல் தலைவரும் பிற பெரியோர் களும் உளம் நைவதை அறிகிறோம். 'அதனை அவன் கண் விடாத' காரணமே இத்தகைய கொடுமைகள் நேரக் காரணம் என வள்ளுவர் கூறுவர்.

அப்படியே 'இடம்' ஆராய்வதை வள்ளுவர் திட்டமாக வரையறை செய்கின்றார். கண்ட கண்ட இடங்களில் அரசியல் சூழ்நிலை காரணங்களுக்காகப் பலப்பல செயல்கள்—தொழில்கள் — மேற்கொள்ளப் பெறுகின்றன; ஆனால் அவற்றுள் பல பின்பு பயனற்றனவாக உள்ளமையையும் காண்கின்றோம். வள்ளுவர் கண்டபடி 'இடமறிந்து' செயலாற்றின் செம்மை நலம் பெற முடியுமன்றோ. இதனினும் ஒரு படி மேலே சென்று,

*'கால மறிந்து இடமறிந்து செய்வினையின்*
*மூல மறிந்து செயல்'*

என்கின்றனர் அறிஞர்கள். ஒரு செயல் அல்லது தொழில் தொடங்குமுன் இத்தனையும் ஆராய்தல் தேவையாக உள்ளது. காலநிலையை ஆராயவேண்டும். இன்றும் நம் நாட்டுக்கு இவ்வுண்மை முற்றும் பொருந் துவதாகும். உரிமைபெறுமுன் காந்தியின் நெறி பற்றி இராட்டினமும் கதரும் பிற எளியபொருள்களுமே

போதுமென்றிருந்தவர்கள் இன்று ஆளவந்த பிறகு இத்தனைப் பேராலைகளையும் பிற பெருந் தொழில் களையும் செய்ய ஊக்குகின்றார்களே எனச் சிலர் ஐயுறு கின்றனர். இவர்களைக் காலமறியாதவர்கள் எனச் சுருக்கமாகச் சொல்லி விடலாம். கால நிலையையும் உலகச் சூழ்நிலையையும் பிற நாட்டு நிலைமைகளையும் உற்றறியாது, கண்மூடி மௌனியாகவே இருப்பின் தனி மனிதனாயினும் சரி—சமூகமாயினும் சரி—பெரு நாடாயினும் சரி—எங்கேயோ பின்தங்கி நிலையிழந்து வாழ்விழந்து வாடி வதங்கவேண்டியதுதான். இதை உணர்ந்தே வள்ளுவர்,

'ஞாலம் கருதினும் கைகூடும் காலம்கருதி
இடத்தாற் செயின். (49.4) என்றும்,

'எவ்வ துறைவ துலகம் உலகத்தோடு
அவ்வ துறைவ தறிவு. (43.6) என்றும்

'எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும் தம்மோடு
கொள்ளாத கொள்ளா உலகு' (47.10)

என்றும், இன்னும் பலவகையினும் வற்புறுத்து கின்றார். இவ்வாறு காலமும் இடமும் கருதி, உலகம் உறைவதறிந்து, அதனோடு ஒட்ட ஒழுகிச் செயலாற்றல் நாட்டு முன்னேற்றத்திற்கு நல்ல குறி. இனி இவற்றின் மேலாகச் செய்வினையின் மூலமறிந்து. செயலாற்றும் நிலையையும் நாம் இங்கே எண்ணிப் பார்க்க வேண்டும். எல்லாவற்றிற்கும் அடிப்படையாகச் செய்வினையின் மூலம் அறிவதே தேவையானது. ஒரு தொழிலைத் தொடங்கு முன்பும், தொடங்கிச் செயலாற்றும் பொழுதும், செயலாற்றித் தொழிற்சாலையில் பொருளைக் குவித்து விற்பனைக்கு அனுப்பும் பொழுதும், பிற சமயங்களிலும் இடைவிடாது அதன் மூல நிலையை—அடிப்படையை-எண்ணி எண்ணியே செயலாற்றக்

கடமைப்பட்டவர்கள். பொருளாதார வல்லுனருக்கும் திட்டமிடும் திறனுளருக்கும் பிற செயல்வீரருக்கும், இந்த அடிப்படை உணர்வு இல்லாத காரணத்தினால் தான் நாட்டில் தேவையான பொருள்களின் முட்டுப் பாடும், பொருள்கள் இருந்தும் கிடைக்காத கொடுநிலையும், கள்ளச் சந்தைகளின் பெருக்கும், வரி நிலையும் அந்தை ஏமாற்றும் குறை நிலையும் நாட்டில் இடம் பெறக் காண்கின்றோம் ஒவ்வொரு நிலையிலேயும் நின்று நிலைத்து ஆய்ந்து செயலாற்றத் தொடங்கின் நல முண்டு என்பதை நாம் இதுவரை வள்ளுவர் காட்டக் கண்ட பேருண்மை எனத் தெளிதல் வேண்டும். ஆம்! இத்தகைய திட்ட மிட்ட செயல் முறையை வற்புறுத்திய வள்ளுவர் நாட்டில்தான்—இன்னும் திட்டங்களைச் செம்மையாகத் தீட்டத் தெரியாமலும், தீட்டிய திட்டங்களை நல்வகையில் - பயனுள்ள வகையில் - ஒன்றைப் பலவாகப் பெருக்கும் வகையில் வழிகாணத் தெரியாமலும் இருக்கின்றோம்.

பரந்த பாரத நாட்டின் விரிந்த அடிப்படையில் எண்ணற்ற திட்டங்கள் தீட்டப்பெறுகின்றன. இத் திட்டங்கள் பலவற்றைப் பிற பகுதிகளைவிடத் தமிழ் நாடே சிறக்கத் தொழிற்படுத்துகின்றதெனப் பிற நாட்டவர் பலரும் நம் நாட்டுத் தலைவர்களும் நன்கு பாராட்டுகின்றனர். நாம் இந்நூலில் இதுவரை கண்டுள்ளபடி ஒவ்வொரு துறையிலும் தமிழ் நாட்டு அரசாங்கமும் தமிழ் மக்களுக்கு ஒல்லும் வகையெல்லாம் உதவி ஆவன செய்வதையும் அறிகின்றோம். இருப்பினும் நாட்டில் பல்வேறு கூக்குரல்கள் கிளம்பியுள்ளமைக்குக் காரணம் என்ன? மக்கள் வாழ்வுக்குத் தேவையான அன்றாடப் பொருள்களை—உணவு, உடை, உறையுள்—இன்ன பிற பொருள்களைப் பெற முடியாது வாடுவது

ஏதனுல்? எத்தனையோ திட்டங்கள் கடந்த இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களிலும் இந்த மூன்ருவது ஐந் தாண்டுத் திட்டத்திலும் செயல்படுத்தப்பெறுகின்றன. எனினும் வாழ்வின் தேவைப் பொருள்கள் அருகி வருவ் தோடு விலையேற்றமும் பிணைந்து மேலோங்கிச் செல் வதையும் காண்கின்ருேம்; காரணம் என்ன? முன்னை நாளைவிட இன்று விளைவயல் பரப்பு பெருகியுள்ளது; ஆலை எண்ணிக்கை வளர்ந்துள்ளது; மக்கள் வாழி டங்கள் வளர்ந்து கொண்டே வருகின்றன; பிறவும் இப்படியே. இருந்து எல்லாவற்றிற்கும் மக்கள் 'எங்கே? எங்கே? எங்கே?' என்று ஏங்க வேண்டிய காரணம் என்ன? திட்டத்துக்கெனக் கோடி கோடியாக அரசாங்கம் செலவிடும் பணம் எங்கே செல்லுகிறது? சில அரசியல் தலைவர்கள் சொல்லுவது போன்று—சுட் டிக் காட்டுவது போன்று—அத்தனை பொருளும்—திட் டங்களுக்கு ஒதுக்கும் செல்வம் அனைத்தும் - சேர வேண்டிய இடத்தில் சேரவில்லை என்பது உண்மை யன்ருே!

இதற்குக் காரணம் என்ன? பலர் பல வகையாகக் கூறலாம். நான் கூற நினைப்பது பாரதியார் காட்டிய 'பிதற்றுவார் கேட்டிலார்' என்பதே. ஆம்! இன்று பொருளாதாரம் பற்றி விண்முட்டப் பேசுவார் மக்க ளிடம் சென்று அவர்தம் குறைகளைக் கேட்டு, அக் குறைகளைப் போக்க முன்வர வேண்டும். நகரங்களி லிருந்து—உயர்ந்த மாளிகைகளில் இருந்து கொண்டு— தம்கீழ் உள்ளவரை வருத்தி வேலையிட்டு—அவர்கள் அவர் கீழ் உள்ளவர்களுக்கு ஆணையிட்டு—அக் கீழ் உள்ள எத்தனையோ சூழல்களுக்கு உட்பட்டுத் தரும் கணக்கைக் கொண்டுதானே இன்றைய பொருளாதாரத் தலைவர்கள் புள்ளி விவரத்தை மக்கள் முன் வைக்கின்

றனர். ‘பள்ளிக் கணக்குப் புள்ளிக்கு உதவாது’ என்ற பழமொழிபோக, ‘புள்ளிக்கணக்குப் புவிக்கு உதவாது’ என்ற புதுமொழி யல்லவா இன்று தோன்றியுள்ளது. நல்ல வேளையாக அமைச்சர்கள் ஓரளவு இக்குறையை நீக்கும் வகையில் ஊர்தோறும் ஓடி உழன்று மக்கள் குறைகேட்டு, அவர்தம் வாட்டம் தீர்க்கும் வகையில் செயலாற்ற முனைகின்றனர்—திட்டம் தீட்ட வழிகாட்டு கின்றனர். அவர்கள் காட்டிய வழியில் தொழிற்படு வோர் திறம்படச் செயலாற்றின் நலம் உண்டாகும். ‘கேட்டிலார்’ என்ற சொல்மாறி, ‘கேட்கிறார்’ என்ற நிலை பெறுவதோடு ‘கேட்டுச் செயலாற்றுகின்றார்’ என்ற பெரு நிலை நாட்டில் முகிழ்த்து வளர வேண்டும். ஆம்; இத்துறையில் சிறந்த பொருளாதார நிபுணர்கள் கருத்திருத்த வேண்டும். ஊர்தோறும் உழல வேண்டும். உட்கார்ந்தது போதும்; ‘நாடெங்கும் வாழ நாம் நாடெங்கும் சுற்றுவோம்’ என்று சென்று சென்று-நோய் கண்டுகண்டு - குறைகண்டு ‘நோய் நாடி நோய் முதல் நாடி அது தணிக்கும் வாய் நாடி வாய்ப்பச் செயல்’ வேண்டும். செய்வார்களா?

இன்று பரந்த பாரத நாட்டைப் பற்றிய பொருளா தார அடிப்படையில் ஒருசில நூல்கள் வந்துள்ளன. தமிழ்நாட்டிலோ தமிழிலோ அத்தகைய ஆய்வு நூல்கள் ஒன்றும் வெளிவரவில்லை. கல்லூரிகளில் மாணவர்கள் படிப்பதற்கெனச் சில பொருளாதார நூல்கள் அண்மையில் வெளிவந்தன. என்றாலும் அவை வெறும் மொழிபெயர்ப்பு நூல்களாக உள்ள மையின் அவற்றால் நாட்டுக்குப் பெரும் பயன் விளையும் என எதிர்பார்க்க முடியாது; மாணவரும் அதை எதிர் பார்க்காது ஆங்கில மூலங்களையே கற்கத் தொடங்கி விட்டனர். தமிழ் நாட்டுப் பொருளினை நன்கு

ஆராய்ந்து, அதன் அடிப்படையில் வளரும் விவசாயம், வாணிபம், தொழில்வளம் இவற்றை உணர்ந்து நன்கு தெளிவுபட எழுதும் நல்லாசிரியர்களும் அவர்தம் நூல்களைக் கண்டு உணர்ந்து நாட்டுப் பொருள் நிலையை நன்கு உயர்த்தப் பாடுபடும் தொண்டர்களும் இனித்தான் பிறக்க வேண்டுமோ என எண்ணத்தக்க வகையில் தமிழ்நாட்டுப் பொருளாதாரம் பற்றிய ஆய்வு அமைந்துள்ளது. எனினும் வருங்காலத்தில் வாழ்வின் அடிப்படையாகிய பொருளாதார உணர்வு நாட்டில் கற்றவரிடம் மட்டுமின்றி மற்றவர்களிடமும் சிறக்க வாய்ப்பு உண்டு என்ற நிறைவில் மேலே சொல்லலாம்.

ஒரு நாட்டின் பொருளாதாரம் சிறக்க எத்தனையோ வாய்ப்பும் வழிகளும் உள்ளன. வள்ளுவர் பலவற்றை நாட்டின் செல்வம் என்று சொல்லுகின்றார். ' செல்வத்துள் செல்வம் செவிச் செல்வம் ' என்றும், 'கேடில் விழுச் செல்வம் கல்வி' என்றும், 'அருட் செல்வம் செல்வத்துச் செல்வ'மென்றும், 'பணிதல் செல்வ'மென்றும், 'வேண்டாமை அன்னவிழுச் செல்வ'மென்றும் இன்னும் பலவகையிலும் வள்ளுவர் செல்வம்பற்றிக் குறிப்பிடுகிறார். ' பொருளிலார்க்கு இவ்வுலகம் இல்லை ' என்று பொருட்செல்வத்தையும் அவர் குறிப்பிடத்தவறவில்லை. வள்ளுவர் இவற்றுலெல்லாம் வெவ்வேறு வகைப்பட்ட செல்வங்களைக் குறித்தாரேனும், அனைத்தையும் ஆராயின் இவை அனைத்தும் மக்கள் மாறுபாடற்று, நிறைவுற்று, வஞ்சனையற்று, பகையற்று, சூதற்றுப் பண்பட்ட நல்வாழ்வினிலே சிறக்க வாழச் சாதனங்களாகவே முடிவதோடு, இவை ஒன்றையொன்று பற்றிப் படரும் தன்மையனவாக உள்ளன என்பதும் நன்கு புலப்படும். இந்த அடிப்படையில் மக்கள் வாழ்வுக்கு

இயைந்த செல்வம் அனைத்தும் பொருளாதார வாழ்வின் அடிப்படைச் செல்வங்களே.

இருபதாம் நூற்றாண்டு நாகரிக உலகத்துக்கு இவையெல்லாம் புரியாதனவாக இருக்கலாம். எனினும் இச்செல்வம் அனைத்தும் என்று நாட்டில்—உலகில்-நிறைவுறுகின்றதோ அன்றே நாடும் உலகும் நாமும் உயிர்களும் நலம் பெற்று வாழ்வோம் என்ற அளவோடு இந்த எண்ண அலைகளை நிறுத்தி மேலே செல்வோம்.

இன்று உலகில் உள்ள பல்வேறு நாடுகள் பல்வேறு துறைகளால் தத்தம் நாட்டுப் பொருளாதார நிலையைப் பெருக்கிக் கொள்ளுகின்றன. வெறும் பயிர்த் தொழிலாலேயே நாட்டுச் செல்வ வளத்தைப் பெருக்கிக் கொண்ட நாடுகள் பல இன்று அவையும் பிறவகைகளில் பொருள் பெருக்க வழி வகைகளை நாடுகின்றன. இன்றும் உழவுத் தொழிலாலும் பிற விளைபொருள்களாலும் நாட்டு வளத்தையும் பொருளாதார அமைப்பையும் பெருக்கிக் கொள்ளும் நாடுகள் இல்லாமல் இல்லை. நாட்டு இயற்கைவளம், சூழல், பிற பருவ நிலைகள் இவற்றின் காரணமாகச் சில நாடுகள் உழவு முதலியவற்றாலும் பிற உயிர்ப்பொருள், தாவரம் முதலியவற்றாலும் சிறக்க விளங்குவதை அறிகிறோம். ஆஸ்திரேலியாவின் இயற்கை வளமே அந்நாட்டுப் பொருளாதார வளமாக அமைகின்றது. காயும் கனியும் பிற உணவுப் பொருள்களும் பெருகி விளையும் அந்நாட்டிலே, கால் நடைகளேனும் ஆடும் சிறந்த பொருளாதார சாதனமாக அமைவதை அறிகிறோம். அப்படியே மலேயா நாட்டின் வானோங்கிய 'இரப்பர்' மரங்கள் தம் கண்ணீர் வடித்த பாலால் நாட்டைச் செல்வ வளமுள்ள நாடாக மாற்றுகின்றன. இப்படியே இன்னும் உலகில் சில நாடுகள் இயற்கை விளைபொருள்

களாலும், வள்ளுவர் குறித்த 'மாடு' போன்ற செல்வ வளங்களாலும் பிறநாடுகளுடன் தத்தம் பொருளாதார உயர்வைப் பெருக்கி ஓங்குகின்றன.

வேறு சில நாடுகள் வாணிபத்தால் வளம் கொழிக்கும் நாடுகளாகிப் பொருளாதார ஏற்றமுறுகின்றன. மேலை நாடுகளில் பல இத்துறையில் முன்னேறின்வையே. வாணிபத்தின் உயர்வை உணர்ந்த பழந் தமிழ்நாட்டினர், 'திரை கடலோடியும் திரவியம் தேடு' என்று கூறி வந்தனர். மணிமேகலை, சிலம்புக் காலந் தொடங்கிக் கடல் மேல் கலஞ் செலுத்தி வாணிப வளனைப் பெருக்கிய வல்லவர் பலர்தம் வரலாறுகளைத் தமிழ் இலக்கியங்கள் நமக்குக் காட்டுகின்றனவே! இன்றும் இந்திய நாடுவந்து வாணிபத்தால் வளம் பெற்ற மேலை நாட்டவரைக் காண்கின்றோமே. போர்ச்சுகலும் பிரான்சும் டச்சும் பிரிட்டனும் வாணிப வளனைப் பெருக்கத்தானே போட்டியிட்டுக் கொண்டு இந்திய மண்ணில் கால் வைத்தன. அவ்வாணிப முறையினால் நடந்த மாறுபாடுகளும் போர்களும் எத்தனை எத்தனை? இந்த அமைதியான உலகச் சூழ்நிலையிலும் வாணிப வளம் கருதி நாட்டுக்கு நாடு எவ்வளவு மாறுபடுகின்றது. ஆங்கில நாடு வாணிபத்தின் பொருட்டு வந்து, தன் வாணிபத்தை எல்லையற்றுப் பெருக்கி, அதே அடிப்படையிலன்றோ பரந்த பாரதத்தைத் தன் அடிக்கீழ் கொண்டது. அவர்தம் வாணிப வளனுக்குப் பெருஞ்சந்தையாகப் பாரதத்தைக் கொண்ட கொடுமை கருதியன்றோ, 'கதர் கைராட்டை இயக்கமும்' 'அன்னியத் துணி பகிஷ்கார இயக்கமும்' பிறவும் நாட்டில் தேவையாக இருந்தன. எனவே வாணிபத்தாலும் செல்வ்வளன் பெருக்க வாய்ப்பு உண்டு என்பதற்கு நம் நாட்டு வரலாறே நமக்குச் சான்று தருகிறது.

ஆங்கில நாட்டைப் போன்றே உலகில் வேறுசில நாடுகளும் வாணிபத்தால் பொருளாதார வளத்தைப் பெருக்கிக் கொண்டுள்ளன. இவ்வ இரண்டு நிலையாலன்றி, இவற்ருேடு இணைத்தும் இவற்றின் மேம்பட்டும் நிற்பதே இங்கே நாம் கண்டு வந்த தொழில் வளம். ஆம்! இருபதாம் நூற்ருண்டின் பொருளாதாரம் பெரும்பாலும் தொழில் வளத்தின் அடிப்படையிலேயே அமைந்துள்ளது. அதிலும் சிறப்பாக நம் பாரதநாடு இந்த அடிப்படையிலேயே தன் பொருளாதாரத்தை வளர்த்துக் கொள்ள வேண்டியுள்ளது. பிற இயற்கை வளமும் வாணிபப் பொருள் வளமும் ஓரளவு நாட்டில் இருந்த போதிலும், உலக நாடுகளோடு சமமாக வள்ளுவர் காட்டியபடி ஒத்து ஓங்கி உயரவேண்டுமாளுல், நம் நாட்டின் பொருளாதார வளர்ச்சி தொழிலியல் அடிப்படையிலேயே வளர வேண்டும். இந்த உண்மையை உணர்ந்துதான் உரிமை பெற்ற பின்பும் அதற்கு முன்னும் இந்நாட்டில் தொழில் வளர்க்கத்தக்க பல அடிப்படைகள் ஆராயப் பெற்றன. அவற்றையெல்லாம் தொகுத்தும் வகுத்தும் விளக்கியும் விரித்தும் அவ்வத் துறையில் வல்ல ஆய்வாளர் பலர் ஆங்கிலத்தில் நூல்களை எழுதியுள்ளனர். அவை அனைத்தையும் ஈண்டுக் குறிப்பதோ அல்லது விளக்குவதோ இயலாது; தேவையுமன்று. எனவே ஒரு சில மட்டும் கண்டு அமையலாம் என எண்ணுகின்றேன்

இந்தியா நாடு தொழில் வளத்தாலேயே உயர்வைத் திட்டமிட்டுக் கொள்ளவேண்டும் என்ற உண்மையைப் பல ஆண்டுகளுக்கு முன்பே, நாட்டின் நலங்காண விரும்பிய நல்லவர்கள் உணர்ந்து கொண்டார்கள். நாட்டின் பொருளாதார நிலையைக் கணக்கிடுவதற்குச் சிறந்த வழி தனி மனிதர் வாழ்வைக் கணக்கிடுவதே

யாகும். இரண்டாயிரமாண்டுகளுக்கு முன்னே வாழ்ந்த தமிழ்ப்புலவர்,

'எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நலனே'

என்று பாடி விட்டுச்சென்றார். ஆம்! அந்த உண்மை இன்றும் என்றும் எல்லாத்துறைக்கும் பொருந்துவதாகும். தனி மனிதன் வாழ்க்கைத் தரம் (Per Capita) உயர்ந்தால் நாட்டுப் பொருளாதாரம் உயர்ந்தது என்பது பொருள்; அத்தனி மனிதன் வருவாய் குறையின் நாட்டுப் பொருளாதார நலன் சீர்கேடுற்றது என்பது கருத்து. இந்த உண்மையை உணர்ந்த காரணத்தால்தான் மிகப் பழங் காலத்திலிருந்து ஒவ்வொரு அறிஞரும், 'எல்லோரும் சோம்பலின்றி உழையுங்கள், பாடுபடுங்கள், பயனடையுங்கள், வாழுங்கள், வாழவிடுங்கள் நாட்டைப்பலமாக்குங்கள், பொருளாதாரத்தைப் பெருக்குங்கள்' என்று பல வகைகளில் - பல முறைகளில் - பல துறைகளில் கூறிக்கொண்டு வந்துள்ளனர். இத்துறையில் சென்ற நூற்றாண்டின் இடைக்காலத்திலே கருத்திருத்திய பல பெரியோர் நாட்டில் நல்ல முயற்சி எடுத்துக்கொண்டிருந்தனர். தாதாபாய் நௌரோஜி அவர்கள் பரந்த பாரத நாட்டின் பொருளாதார வளர்ச்சியையும் அக் காலத்தில் உழவு, தொழில் முதலியவற்றின் ஆக்க நெறிகளையும் 1867-70 ஆகிய மூன்றாண்டுகளில் கணக்கிட்டு, அந்த நிலையும் நாட்டு வருவாயும் மிகத் தாழ்ந்துள்ளமையைக் குறிப்பிட்டுள்ளார். குறிப்பிட்டதோடு அமையாது அக்கால எல்லையில் எவ்வெவ்வாறு நாட்டுச் செல்வ நிலையைப் பெருக்க முடியுமென்று சூழ்ந்து ஆயத் தொடங்கினர். அதற்கு முன்னும் இந்நாட்டுப் பொருளாதார வளர்ச்சியில் பங்கு கொண்டார் பலர்

உளர். ஒரு நூற்றுண்டு எல்லையில் நிற்றல் அமையு மென அதைக் குறித்தேன். அன்றுதொட்டு இன்று வரை இத்துறையில் பணியாற்றிய இந்தியரும் ஆங்கிலேயரும் பலராவர். அவ்வப்போது உயர்ந்தும் சரிந்தும் ஏறியும் மாறியும், சிறந்தும் சிதைந்தும் வந்த பல்வேறு தொழில்களைப் பற்றியும் அவற்றின் வளர்ச்சி நிகழ்ச்சி பற்றியும், அவற்ருல் நாடு பெற்ற உயர்வு தாழ்வுகளைப் பற்றியும் அவ்வக்கால அரசாங்க வெளியீடுகள் திட்ட வட்டமாகக் கணக்கிட்டுக் காட்டுகின்றன. 1867-70ல் பிரிட்டிஷ் இந்தியாவின் தனி மனித வருமானம் ரூ 20 என்றும், அக்காலத்திய நிலையில் மிக எளிய அடிப் படைத் தேவைகளைப் பெறுவதற்கும் தனி மனிதனுக் குக் குறைந்தது ரூ 34 தேவைப் படுமென்றும், எனவே நாட்டுப் பொருளாதாரம் தன்னிறைவு எல்லைக்குக் கீழே எங்கோ இருந்ததெனவும் குறித்துள்ளார். அடுத்து இத்துறையில் ஆய்வு நடத்திய ராவ் அவர்கள் (Dr. V.K.R.V. Rao) நௌரோஜி கணக்கில் சில மாறு பாடுகாட்டி, தனிமனித வருமானத்தை உயர்த்த நினைத் தார். அவர் எவ்வளவு முயன்றும் 23 அல்லது 24க்கு மேல் இயல வில்லை.* பின்வந்த கர்சன் பெருமகனுர் (Lord Curzon) சில ஆண்டுகளை ஆராய்ந்து, உழவு, பிற வழிகளில் வந்த வருவாயைக் கணக்கிட்டு 1800ல் தனி மனித வருவாய் ரூபாய் 27 ஆக இருந்தது, 1900-த்தில் 30 ஆக வளர்ந்தது எனக் காட்டுகின்றனர். வேருெரு அறிஞர் (DIGBY) அக்காலத்தில் (1898-99) தனிமனித வருமானம் ரூபாய் 12-60 ஆக இருந்ததையும் கணக் கிட்டனர். மற்ருெரு அறிஞர் (T.J.Atkinson) 1875ல் தனி மனித வருமானம் ரூபாய் 30-5-0 ஆகவும் 1885ல்

* Indian Economics By G. B. JATHAR & S. G. BERI 101 & 102

ரூ 39-5-ஆகவும் உள்ளதெனக் கணக்கிட்டுள்ளார். எனினும் ரூபாய் முப்பதை ஒட்டி இந்த நூற்றுண்டின் தொடக்கத்தில் தனி மனித வருமானம் அமைந்தது என்பதே பலருடைய முடிந்த முடிவு. இந்த நிலையை எண்ணிப் பார்ப்பின் நாட்டின் பொருளாதார அடிப் படை நன்கு விளங்குகின்றதன்றே. இப்படி இந்த நூற் ருண்டின் தொடக்கத்திலிருந்து இன்றுவரை அடிக்கடி தனி மனித வருமானத்தினைக் கணக்கிட்டு அதனடிப் படையில் நாட்டுப் பொருளாதார நிலையை மதிப்பிட்டு, அந்நிலை வளர, உயர, ஓங்க மேலும் மேலும் என் னென்ன செய்யவேண்டுமெனப் பல் அறிஞர்களும் ஆய்வுக் குழுக்களும் ஆய்ந்து செயலாற்றியுள்ளனர். அவர்கள் அனைவர்தம் முயற்சியும் உரிமைபெற்றபின் வளர்ந்த உரிமை வேட்கைக்கு மேற்பட்ட பொருளா தார உயர்வு வேட்கையுமே இன்று நம் நாட்டைத் தொழில் மயமாக்கிக் கொண்டு வருகின்றன.

வெறும் உழவுத் தொழிலும் குடிசைத் தொழில் களும் பிற எளிய தொழில் நிலைகளும் மட்டும் போற்றப் படின் நாட்டின் பொருளாதாரம் வளர்ச்சிபெற வாய்ப் பில்லை என்று அன்றைக்குச் சுமார் ஒரு நூற்றுண்டிற்கு முன்பே உணர்ந்த நல்லறிஞர்தம் உள்ளமும் உணர்வும் எண்ணமும் எழுச்சியுமே இன்று நம்நாட் டைப் பிறநாட்டொடு ஒத்து வாழும் நிலைக்கு உயர்த்தியுள்ளன. இதற்குப் பாடுபட்டவர் அறிஞர், ஆய்வாளர், அரசியல் தலைவர், தொண்டர், தொழிற் தலைவர் இன்ன பிறர் பல்லோராவர். அவருள் சிலர் நம்மிடை வாழப் பலர் மறைந்துள்ளனர். அனைவரை யும் வணங்கி வாழ்த்தி மேலே செல்கின்றேன்.

1936-ல் இந்திய அரசாங்கம் ஆங்கில நாட்டி லிருந்து இரு தொழிலியல் கல்வித்துறை அறிஞர்களை

வரவழைத்து, ஆக்கப்பணிக்கு ஆவன செய்து வழி கோல வகை காணவேண்டிற்று. (Mr. A. Abbott and Mr. S. H. Wood). அவர்கள் ஆய்ந்து காலம் கடத்தாமல் 1937 லேயே தம் கருத்தைத் திருத்தமாக வெளியிட்டு விட்டனர்.

ஆரம்பப்பள்ளியில் பயிலும் மாணவர் உள்ளங்கள் நூல்களைத் துருவித் துருவி இளைப்பதைக் காட்டிலும் அவர் தம் இயற்கை வாழ்வையும் வளத்தையும் ஒட்டியும் சுற்றுச் சூழலின் அடிப்படையிலும் ஆரம்பக் கல்வி அமைய வேண்டும் என்று காட்டினர்.

கூடியவரையில் இந்திய நாட்டு மொழிகள் அனைத்தும் அவ்வவ் வட்டாரங்களில் பயிற்று மொழியாகக் கல்விக் கூடங்களில் இருக்க வேண்டுமெனவும், ஆங்கிலம் பள்ளியில் பயிலும் அனைவருக்கும் கட்டாய மொழிப் பாடமாக இருக்கவேண்டுமெனவும் கூறினர்.

தொழில் வாணிபத் துறைகளில் விருப்பமுள்ளவரையும் ஆற்றல் உள்ளவரையும் கல்வி கற்பதற்கு இடையிலே, கல்வித்துறைக்கு மாறுபாடற்ற வகையிலே, நாட்டுத் தொழில் வளர்ச்சிக்கு வேறுபடா வகையிலே, வற்புறுத்தா முறையில் அவ்வத்துறையில் படிக்க வைக்கலாமென்று கூறினர்.

ஒவ்வொரு மாநிலமும் தத்தம் சூழலுக்கும் மூலப் பொருள்களுக்கும் பிறநிலைகளுக்கும் ஏற்ப இத்தகைய தொழிலமைப்புக்களை மேற்கொண்டு அவற்றுள் அவர்களை எம்முறையில் இடர்ப்பாடில்லாதபடி செயல் படுத்தமுடியுமோ அப்படிச் செய்யவேண்டுமென்றனர்.

தொழில்துறையாளரும் வணிகத் துறையாளரும் இந்தவகையில் கல்வி முறையாளருடன் ஒத்துழைக்க வேண்டுமெனவும் நாட்டில் இத்துறையில் வரையறுத்த ஒற்றுமை நிலவவேண்டு மெனவும் வற்புறுத்தினர்.

தொழில் துறையில் மேலாளர், பணியாளர்தம் (Foremen, Charge-hand etc) பயிற்சியும், நன்கு போற்றப் படும் வகை, வளரும் தொழில் துறைக்கு அவசியம் எனவும் வற்புறுத்தினர்.

இவ்வாறு நாட்டுக்கல்வியும் தொழிலமைப்பும் பொருந்திய வகையில் வளரவேண்டுமென மேலே நாட்டு அறிஞர்கள் எடுத்துக் காட்டிய நிலையை நாட்டில் அன்று ஏனோ தொழிற்படுத்தாது விட்டுவிட்டனர். ஒரு வேளை உடனே தோன்றிய போரும் பிற சூழல்களும் காரணமாக அமையலாம். எனினும் தற்போது இந்த அடிப்படையின்றேனும், பல்வேறு சூழல்களையும் பிற வற்றையும் கருத்துட்கொண்டு கல்வியும் தொழிலும் கலந்தும் தனி நிலையிலும் வளர்ச்சி பெற்று வருவது ஆறுதல் அளிக்கின்றது. அதிலும் தமிழ்நாட்டு அரசாங் கத்தவர் வெறும் ஏட்டுக் கல்வியோடு பொருந்திக் கலந் திருந்த தொழில்நுட்பக் கல்வித்துறையைத் தனியாகப் பிரித்து, அதற்கு அத்துறையில் வல்லவரைத் தொழிற் படு தலைவராக அமைத்து இன்று தொழிற் கல்வியை வளர்த்து வருவது போற்றக் கூடிய ஒரு செயலாகும்.

தொழில் துறை வளர்ச்சியில் பல காலமாகப் பல் வேறு முயற்சிகள் பொருளாதார அடிப்படையில் மேற் கொள்ளப் பெறுகின்றன. இந்த அடிப்படையில் இந்தியத் தொழில் நுட்ப ஆய்வுக்குழு (Industrial Research Bureau) 1935-ல் தொடங்கப்பெற்றது. இது பரந்த பாரத நாட்டுத் தொழில் வளர்ச்சிக்கு உரிய ஆக்க வேலைகள் பலவற்றையும் மேற்கொண்டு தொழில் படுகின்றதென்று அறிஞர்கள் காட்டுவர். அறிவியல் தொழிலியல் ஆய்வுக் களமென்றும் (The Board of Scientific & Industrial Research) அண்மையில்தொடங்கப் பெற்றுள்ளது. கடந்த பதினைந்து ஆண்டுகளில்

உரிமைபெற்ற இந்திய அரசாங்கம் இத்துறையில் எத்தனையோ புதுப்புது வகையான ஆய்வுக் குழுக்களையும் வளர்ச்சி நெறிகாணும் பேரவைகளையும், பிற வற்றையும் அமைத்துத் தொழிற்படுத்தி, தொழில் வளத்தையும் அதன்வழி நாட்டின் பொருளாதாரத்தை யும் நன்கு வளர்த்து வருகின்றது. இவற்றுள் சில அமைப்புகளையும் அவற்றின் தொழில் முறைகளையும் இதுவரை இந்நூலின் முந்திய பகுதிகளில் ஆங் காங்கே கண்டு வந்துள்ளோம்.

இவற்றுள் ஒன்றே இந்திய அரசாங்கம் அமைத் துள்ள திட்டக் கமிஷன். ஒவ்வொரு ஐந்தாண்டுத் திட்ட அடிப்படையில் நாட்டின் பொருளாதாரம், மூலப் பொருள், மக்களின் ஆக்கத்திறன், பிறதேவைப் பொருள்கள். தனியார், அரசாங்க மூலதனம், வெளி நாட்டார் பொருளாதாரம், பிறநாட்டுத் தொழிலியற் சாதனங்கள் இவற்றைக் கருத்துள் அமைத்து மாநிலந் தோறும் பலப்பல தொழில் நிலையங்களையும் பிற ஆக்கப் பணிகளையும் வரையறுக்க இக்கமிஷன் ஆவன காண் கின்றது எனினும் அண்மையில் நேரு அவர்களே காட்டியபடி அது தன் அளவில் வளர்ந்து அரசாங் கத்தையே ஆட்டிப் படைக்கும் நிலையில் செல்லுகிறது என்பது எண்ணத்தக்கது. பாராளுமன்றத்திலும் அதன் செயல் பற்றியும், அதன் வழிச் செல்லும் ஆக்க நெறி பற்றியும், அவற்றுள் சில நாட்டு நலத்தில் பற்றிலா வகையில் தொழிற்படுவது பற்றியும் எதிர்க் கட்சியினர் மட்டுமின்றி, அரசாங்கச் சார்பாளர்களே பேசுவதைக் காண்கின்றோம். பல கோடி இந் நாட்டில் ஐந்தாண்டுத் திட்டஅடிப்படையில் செலவழிக்கப்படுவதறிகின்றோம். உள்நாட்டில் மட்டுமின்றி வேறுபல வெளிநாடுகளி

லிருந்தும் அளவற்ற மூலதனமும் பொருள்களும் வந்து வந்து குவியும் இக்காலத்தில் ஆராய்ந்து, அளந்து, உணர்ந்து, உற்றறிந்து தொழிலைப் பொருளாதார வளம் பெறும் அடிப்படையில் அமைக்கவில்லையானால் என்றென்றும் நாம் தலை நிமிரவே முடியாது. ஆட்சியாளர்களும் தொழில் அமைப்புக்களும், பெரு மின்சார நிலையம், அணைகள், உருக்காலைகள், பிறபெருந்தொழில்கள் அனைத்தையும் உரிய காலத்தில் தொடங்கத்தக்க வகையில் உடனுக்குடன் தொழிற்படவேண்டும். அரசாங்கக் காலதாமதத்தாலும் பிற குறைகளாலும் வர வர, வெளிநாட்டு மக்களும்-ஏன்?-உள்நாட்டுச் செல்வர்களும்கூடத் தத்தம் பொருளை நாட்டுத் தொழில் பெருக்கத்தில் செலவிட அஞ்சுகின்றனர்-பின்னடைகின்றனர். இந்த நிலையில் அரசாங்கம் தேவைக்கு மேலாகப் புதுப் புதுக் குழுக்களையும் (Committees) பிற அமைப்புக்களையும் அமைத்து வளரும் தொழிலை நிறுத்துமோ என அஞ்சத்தக்க வகையில் செயலாற்றுகின்றனர். மேலும் அரசாங்க வரிக் கொள்கை, கட்டுப்பாட்டுக் கொள்கை, தொழிலாளர் நலன் பற்றிய சட்டதிட்டங்கள் ஆகியவற்றில் அடிக்கடி மாற்றங்கள் உண்டாவதும் பல்வேறு திட்டங்களுக்கு இடையூறுகளாக அமைகின்றன. உரிமை பெற்றபின் இந்திய நாட்டுப் பொருளாதார வளர்ச்சியும் அதன் அடிப்படையில் இரும்பு, உருக்காலை. மின்சாரம். பருத்தி, நீர்ப்பாசனம் முதலியனவற்றில் வளர்ச்சியும் உண்டென்றாலும், நாம் இதுவரை செலவு செய்த பல கோடி ரூபாய்களுக்கு ஈடானவருமானம் இல்லை எனவே அரசாங்கமும், தொழில் துறை வல்லுநரும், பிற பொருளாதார அறிஞர்களும் இனி எண்ணித் துணிக கருமம் என்ற நிலையில் எண்ணி எண்ணியே செயலாற்ற வேண்டும்.

'எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு'

என்று வள்ளுவர் காட்டியபடி, எண்ணாது தொழிலை மேற்கொண்டு பிறகு எண்ணிப் பார்ப்போம் என்ற நினைப்பால் 'வந்தபின் காப்பவராகாது', 'வரு முன் காப்பவராக' இருந்து எச் செயலையும் எண்ணியே தொடங்க வேண்டும். தொழில் துறையில் பல குறை பாடுகளுக்கிடையே, நாட்டுப் பொருளாதாரம் வளரத் தக்க வகையில் நல்ல முன்னேற்றம் கண்டிருக்கிறது என்பது உண்மைதான். இன்னும் இடையிடையே பல காரணங்களால் வந்து புகும் இடர்ப்பாடுகள் இல்லாது அமையின், செலவிடும் தொகைக்கும் ஊக்கத்துக்கும் மக்கள் உணர்வுக்கும் ஏற்ற வகையில் எவ்வளவோ முன்னேற்றங்களைப் பெற முடியும். பொருளாதாரமும் தொழில் வளமும் ஒன்றையொன்று பின்னிப் பிணைந் தனவாகும். தொழில் எனும்போது உழவுத் தொழில் உட்பட அனைத்தையும் சேர்த்தே இங்கு நான் குறிக் கின்றேன். தமிழ்நாட்டில் உழவுத் தொழிலில் 61.5ஐ வீதமும் மற்றவற்றுள் 38.5 வீதமும் மக்கள் பணி யாற்றுகின்றனர். எனவே இங்கு, இரண்டும் இணைந்தே செல்ல வேண்டியுள்ளன.

இன்று காணும் சில குறைபாடுகளுக்கு யாரையும் குறைகூற முடியாது. சுதந்திரம் பெற்றபின் பதினைந் தாண்டுகளில் பட்ட அனுபவம் பெரிது. அவ்வனுப வங்களுக்குப் பலவற்றைப் பலியிடவேண்டும். அந்தப் பலியாகத்தான் இக்குறைபாடுகள் அமைந்தன. இன் றைய குறைபாடுகளுக்குத் தனியாக யாரையும் குறை சொல்லமுடியாது. நாட்டுமக்கள் அனைவருக்கும் தொழில் வளர்ச்சியிலும் பொருளாதாரப் பெருக்கத் திலும் உணர்வும் ஊக்கமும் உள்ளன. 'நாடு வளர்ந்

